# பிரத்யும்ன சரிதம்



பதிப்பாசிரியர் : டாக்டர். எஸ். செளந்தரபாண்டியன்
எம்.ஏ. (தமிழ்), எம்.ஏ. (ஆங்.), பி.எட்., டிப்.வ.மொ., பி.எச்.டி.,

பொதுப் பதிப்பாசிரியர் : நடன காசிநாதன், எம்.ஏ.,

அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகச் சுவடிகள்
வரிசை எண்-82

# பிரத்யும்ன சரிதம்

பதிப்பாசிரியர்
டாக்டர் எஸ். சௌந்தரபாண்டியன்
எம்.ஏ.(தமிழ்), எம்.ஏ. (ஆங்கி.) பி.எட்., டிப்.வ.மொ., பி.எச்.டி.,
காப்பாட்சியர்
அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், சென்னை _ 5

பொதுப்பதிப்பாசிரியர்
நடன. காசிநாதன், எம். ஏ.,
இயக்குநர்
தொல்பொருள் ஆய்வுத்துறை
சென்னை - 113

அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், சென்னை - 5
1995

விலை ரூ. 94/-

GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS SERIES - 82

# PRATHYUMNA CHARITAM

Editor :
**DR. S. SOUNDARAPANDIAN,**
M.A.(Tamil)., M.A.(Eng)., B.Ed., Dip.in Skt., Ph.D.,
Curator
Government Oriental Manuscripts Library, Madras -5

General Editor:
**NATANA. KASINATHAN, M.A.,**
Director
State Archaeological Department
Madras - 113



**Government Oriental Manuscripts Library, Madras - 5**
**1995**

**Price Rs. 94/-**

# GENERAL EDITOR'S NOTE

Government Oriental Manuscripts Library, a unique and marvellous research institution paves way to ancient as well as modern studies.

This library preserves, amidst other manuscripts, valuable manuscripts of religious importance which have been published never before.

One such religious manuscripts has been edited and published here. Here the story of Pratyumnan son of lord Krishna has been viewed so as to elevate the glory of Jaina religion in the minds of common people. Hence the importance of this book.

Government Oriental Manuscripts Library expresses its gratitude to Mr. S.P. Ilangovan, I.A.S and to Mr. R. Christodass Gandhi I.A.S for their valuable guidance.

Our thanks are due to Dr.S.Soundarapandian, Curator, Government Oriental Manuscripts Library for his appreciable endeavours.

NATANA. KASINATHAN M.A.,

# பிரத்யும்ன சரிதம்

## பதிப்புரை

பிரத்யும்ன சரிதம் எனும் இவ்வுரை நடை நூல், அ.கீ.சு. நூலகத்தில் உள்ள ஆர்.411 ஆம் எண்ணில் பாதுகாக்கப்படும் தாட்சுவடியினின்றும் பதிப்பிக்கப்பட்டுள்ளது. தாட்சுவடியில் தமிழும் கிரந்தமுமாக நூல் எழுதப்பட்டிருந்தது.

இந்நூலின் ஆசிரியர் பெயர் அறியப்படவில்லை.

பிரத்யும்ன சரிதம் எனும் தலைப்பில் வடமொழியில் பல நூற்கள் அச்சாகி உள்ளன.

கி.பி. 13 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ரவிவர்ம பூபன் வடமொழியில் எழுதிய பிரத்யும்னாப்புதயம் எனும் நாடகம் 1910 இல் வெளி வந்துள்ளது. (திருவாங்கூர் அரசு அச்சகம், திருவனந்தபுரம்)

மகாசேன ஆசார்யா என்பார் வடமொழியில் 14 காண்டங்களில், எழுதிய பிரத்யும்ன சரிதம் எனும் செய்யுள் நூல் ஒன்று அச்சாகி உள்ளது. (1916, மாணிக்சந்த் திகம்பர் ஜெயின் கிரந்தமாலா சமிதி, பம்பாய்)

ராஜசாகரரின் மாணவர் ரவிசாகரகனி என்பார் கி.பி, 1589 இல் வடமொழியில் எழுதிய பிரத்யும்ன சரிதம் எனும் நூல் 16 சர்க்கங்களைக் கொண்டது.

கி.பி. 1574 இல் சமயசுந்தரர் என்பாரும் பிரத்யும்ன சரிதம் எனும் நூலைத் தந்துள்ளதாகத் தெரிகிறது.

கி.பி. 1474 இல் சோமகீர்த்தி என்பாரும் வடமொழியில் பிரத்யும்ன சரிதம் எனும் நூலைப்படைத்துள்ளார்.

தெலுங்கிலும் பிரத்யும்னசரிதம் எனும் தலைப்பில் நூற்கள் அச்சாகியுள்ளன.

சின்னகாட்டம ராஜீ என்பார் தெலுங்கில் பிரத்யும்ன நாடகமு என்ற நூலை எழுதியுள்ளார். இது 1928 இல் அச்சாகியுள்ளது.

வேங்கடராய யஜ்வா என்பார் இயற்றிய பிரத்யுனானந்த நாடகமு எனும் நூல் பிரத்யும்னனுக்கும் மாயாவதிக்கும் இடையிலான காதலை அடிப்படையாகக் கொண்டு இயற்றப்பட்டுள்ளது. இந்நூல் 1908இல் அச்சானது.

அ.கீ.சு. நூலகத்தில் பிரத்யும்ன சரிதம் எனும் செய்யுள் நூல் தாட்சுவடியில் உள்ளது. இது முன்பே அச்சாகியுள்ளது. வடமொழி நூல் இது.

பொதுவாக, பிரத்யும்னன் கதையை ஒட்டியே மேற்படி நூற்களுக்கு எல்லாம் நேமிநாத சரிதம் மற்றும் சில திகம்பர நூற்கள் அடிப்படையாய் நிற்கின்றன எனப்படும். தமிழில் தற்போது இங்கு பதிப்பிக்கபட்டுள்ள பிரத்யும்ன சரிதம் எனும் உரைநடை நூலுக்கு, பரமாகமத்தில் கணதர் முதலானோர் கூறிய வரலாறுகளே சான்றாதாரமாக உள்ளது என இந்நூலின் அகச்சான்று பகர்கிறது.

செல்வாக்கு பெற்று இந்துமதக் கதைகளில் சமண சமய மதத்தை ஏற்றி, மக்களிடையே சமணத்தைப் பரப்ப ஒரு முயற்சி நடைப்பெற்றுள்ளது.

ஜைன பாரதம் என்ற அ.கீ.சு. நூலகத்தில் வடமொழியில் ஒரு நூல் உள்ளது. பாரதக் கதையை சமண மத அடிப்படையில், சமண ரிஷிகளுக்கு மதிப்புக் கொடுத்து, இந்நூல் நிற்கிறது.

பிரம்மாவின் முகத்திலிருந்து சரசுவதி தோன்றினாள்(?) என்று இந்துமதம் கூற, அதே சரசுவதியை, ஜினேந்திரருடைய முகத்தில் இருந்து தோன்றினாள் என்று தமிழில் இங்கு வெளியாகும் இந்நூல் கூறுகிறது.

எனவே, இந்து நூற்களில் சமண மத மணத்தை எப்போது கலக்கவிட்டார்கள் என்று துல்லியமாகக் கூற மிகுந்த ஆய்வு தேவையாக உள்ளது.

பிரத்யும்ன சரிதம் எனும் இத்தமிழ் நூல் மிகப்பழையதன்று. இதன் நடையை நோக்கினால் கி.பி. 18 ஆம் நூற்றாண்டை ஒட்டிய காலத்தில் இந்நூல் எழுந்திருக்கலாம் எனக்கூற முடிகிறது.

அபிதான சிந்தாமணியில் (ப.1122) பிரத்யும்னன் கதை கீழ் வருமாறு தரப்பட்டுள்ளது:-

" ஸ்ரீ கிருஷ்ண மூர்த்திக்கு உருக்மணி தேவியிடம் உதித்த குமரன் இவன். பிறந்த பத்தாநாள், சம்பாசுரன் இவனைத் தூக்கி கடலில் இட, மீன் ஒன்று இவனை விழுங்கிற்று. அம்மீனை ஒரு வலைஞன் பிடித்தான். அதன் வயிற்றில் இருந்த குமரனை மாயாவதி வளர்த்தனள். இவனே வளர்ந்து சம்பாசுரனைக் கொன்று மாயாவதியுடன், துவாரகை சென்று தன்னை வளர்த்த மாயாவதியை மணம் கொண்டனன்.

இவன் முற்பிறப்பில் மன்மதன். மாயாவதி இரதிதேவி. சாம்பவனைக் கொன்ற காரணத்தால் மன்மதனுக்கும் சம்பராரி என ஒரு பெயர் வந்தது. இவன் மீன் வயிற்றில் உதித்ததால் மீனக்கொடியாயிற்று. இவன் குமரன் அநிருத்தன்."

இதற்கு ஆதாரம் பாகவதம், ஹரிவம்சம் முதலிய நூற்களாம். இதே கதையை இன்னும் சற்று விரிவாக நாம் காணலாம்:

மன்மதனைச் சிவன் எரித்துவிடுகிறான். இரதிதேவியோ இறைஞ்சிக் கேட்டுக் கொள்ளவே, சிவன், "கிருஷ்ணனுக்குப் பிள்ளையாகப் பிறப்பான் உனது மன்மதன்." என்று சாபவிமோசனம் தருகிறார்.

அதன்படியே, துவாரகையில் (குஜராத்) ருக்மணி வயிற்றில் பிறக்கிறான் பிரத்யும்னன். அங்கேயே வளர்கிறான்.

இவ்வாறு இருக்க, சம்பாசுரன் எனும் ஓர் அசுரனைக் கொல்ல, இந்திரன், சிவனிடம் ஆலோசனைக் கேட்கிறான். "பயப்படாதே, கிருஷ்ணன் மகன் மூலம் அழிவான் சம்பாசுரன்." என்கிறார் சிவன்.

இதனைத் தெரிந்து கொள்கிறான் சம்பாசுரன். சம்பாசுரன், வைஜயந்தி நாட்டை (கர்நாடகா) ஆள்பவனாவான். இச்சம்பாசுரன் பிரத்யும்னனைத் தூக்கி வந்து கடலில் போட்டுவிடுகிறான்.

கடலில் சம்பாசுரன் போடுவான் என்பதை முன்பே அறிந்திருந்தான் இந்திரன்; எனவே, ஏற்கனவே, அப்சரஸ் பெண்ணை மீனாகப் பிறக்கச் செய்து பிரத்யும்னனை விழுங்கிக் காப்பாற்றுமாறு செய்கிறான் இந்திரன். அதன்படியே மீன் வயிற்றில் சென்றான் பிரத்யும்னன்.

பிறகு, அம்மீனைச் செம்படவர்கள் பிடித்தனர்; மீன் வயிற்றுக்குள் இருந்த பிரத்யும்னனை எடுத்து வளர்த்து வந்தாள் ரதி.

அதன்பின் ரதியே பிரத்யும்னனைத் தாய்போல் நின்று வளர்த்து வருகிறாள்.

ஒரு நாள், பிரத்யும்னனிடம் காம விளையாட்டு விளையாடத் தொடங்கினாள் ரதி. பிரத்யும்னன் காரணம் கேட்டதற்கு, "இல்லை! நான் உன் தாயல்ல! நான் ரதி! நீர் மன்மதன்!" என்று விளக்குகிறாள்.

அப்போது, பிரத்யும்னனுக்கு தன்னுடைய முற்பிறப்பு நினைவுக்கு வருகிறது.

பிறகு, சம்பாசுரனோடு போர்புரிந்து அவனைக் கொன்றான் பிரத்யும்னன்.

பின், பிரத்யும்னனும் ரதியும் துவாரகை வருகின்றனர்.

அவர்களைப் பார்த்த கிருஷ்ணனின் மனைவிமார்கள் அதிர்ச்சியுற்றனர். கிருஷ்ணன் இன்னொரு பெண்ணை மனைவியாக்கிக் கூட்டி வருகின்றானோ என்று மருண்டனர்.

பிறகு உண்மை விளங்கவே, பிரத்யும்னனுக்கும் ரதிக்கும் துவாரகையில் மணம் நடந்தது.

இக்கதை பிரத்யும்ன பரிணயம் என்றும் அறியப்பெறும்

இவ்வாறு, சமண சமயத்திற்குச் சிறிதும் தொடர்பில்லாத ஒரு கதையைச் சமணமதத்திற்குச் செல்வாக்கு ஏற்படுத்துவதற்காக இந்நூல், சமண சமயச் சார்பைப் பரவ விட்டுள்ளனர் ஆசிரியர். அதனைக் கீழ்வருமாறு குறிக்கலாம்.

1. நேமிநாதரைப் பற்றிய குறிப்புகள் பல இடம் பெறுகின்றன. "சமவசரண மத்யத்தில், கோடிச் சூரிய சந்திர ஏணியை உடைய நேமீஸ்வர ஸ்வாமியானவர்", "சமவசரண மத்யத்தில் அஷ்டமகா பிராதிகார்யங்களினால் கூடியிரா நின்ற நேமிஸ்வாமியானவர்", "நேமிஸ்வாமியுடன் பிரத்யும்ன பகவானவர், ஊர் ஜயந்த பர்வதத்தின் மிசை மோட்சத்தை அடைந்தனர்."

2. கிருஷ்ணர், சமணப் பெரியவர்களுக்கு வணக்கம் கூறுவதுபோலக் கதையில் குறிப்புகள் வருகின்றன.

3. கிருஷ்ணர், சமணத் தீர்த்தங்கரர்களின் நீதிகளைப் படித்தறிந்தவர் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

4. நேமீஸ்வரர் உயிரோடு இருந்தால் கிருஷ்ணரின் கீர்த்தி மறையும் என்று கிருஷ்ணர் "கபட புத்தி" கொண்டு சில சூழ்ச்சிகள் செய்ததாகக் கூறப்பட்டுள்ளது.

5. எல்லாவற்றுக்கும் மேலாக, பிரத்யும்னன் தனது தலைமயிரைப் பிய்த்து மொட்டையாக்கி, நேமீஸ்வரரிடமிருந்து ஜின தீட்சை பெறுவதாகச் சித்தரிக்கப்படுகிறது. அஃதாவது, பிரத்யும்னன் சமணனாக மாறுகிறான்.

பிரத்யுமனன் சரிதைப் பாத்திரங்கள் சிலவற்றைக் கீழ்வருமாறு குறிக்கலாம்.

| | | |
|---|---|---|
| பிரத்யும்னன் | - | யாதவ வம்சத்தினன் |
| சத்யபாமைக்கும் | | |
| கிருஷ்ணனுக்கும் | | |
| பிறந்தவன் | - | ஜம்பு குமாரன் |
| கிருஷ்ணனுக்கும் | | |
| ருக்மணிக்கும் | | |
| பிறந்தவன் | - | பிரத்யும்னன் |
| சத்யபாமை மகன் | - | பானு குமாரன் |
| கிருஷ்ணனுக்கும் | | |
| ஜாம்வதிக்கும் | | |
| பிறந்தவன் | - | ஜாம்பவான் |
| பீஷ்மர் மகள் | - | ருக்மணி |
| பிரத்யும்னனுக்கும் | | |
| ரதிக்கும் பிறந்தவன் | - | அநிருத்தன் |


**-டாக்டர். எஸ். சௌந்தர பாண்டியன்**

எம்.ஏ.(தமிழ்), எம்.ஏ. (ஆங்கி.) பி.எட்.,
டிப்.வ.மொ., பி.எச்.டி.,
காப்பாட்சியர்,
அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம்,
சென்னை - 5.

# பிரத்யும்ன சரிதம்

*1. மந்தமாநம்ய ஜினேந்திர நேமிம் த்யானாக்னி தக்தாகிலகாதி கக்ஷம்"*
*வ்யாபார யாமாஸந தத்ரபாணான் ஜகத்வி தாமகரத்வஹோபி"*

மந்தம் அந்தரங்க பஹிரங்க லக்ஷ்மியுடன் ஸமேதராயும், த்யானமாகிற அக்னியினாலே சுடப்பட்ட ஸமஸ்தராயும் காதிகர்மமாகிற ஆரண்யத்தை யுடையவராயும், மோஹ நீயகர்மமாகிற மன்மதனை ஜயிக்கப்பட்டவராயும், இராநின்ற நேமீதிர்த்தங்கரரை நமஸ்காரஞ் செய்தபிறகு யாதொரு வர்தமான ஸ்வாமினுடையவராயும், இராநின்ற பால்யரூபமான வஜ்ர விருஷப நாராச ஸம்ஹனனத்தை ஸரீர மோஹாலங் காரத்தைப் பார்த்து தேவேந்திரனானவன் சந்தோஷ பாவத்தால் திருப்தி அடங்காமல் ஸகஸ்ர நேத்திரங்களை ஒழுங்காக ஒரு சமயத்தில் நிர்மாபணம் செய்து அனந்த நர்த்தனங்களினால் ஸ்ரீ வீரபகவான் என்ற நாமதேயம் செய்தான். அப்படிக் கொத்த அந்திம தீர்த்தங்கரரான ஸ்வாமியை நமஸ்காரம் செய்து பார்த்து பிரஷபாமி ஜினேஸ்வரருடைய முக கமலத்தில் உத்பனமான துவாதசாங்க ரூபத்தை உடைய ஸரஸ்வதி தேவியை நமஸ்காரம் செய்த பிறகு விருஷப ஸேன கணதராதி முதல் ஸௌதமகணதரர் பர்யந்தமான குருக்களை நமஸ்காரம் செய்த பிறகு, நவ வாசுதேவர்களுக்கு ஆத்யத்தில் உத்பன்னராயும் இராநின்ற கிருஷ்ணருக்கு புத்திரனாய் இராநின்ற மன்மத ரூபமான ப்ரத்யும்னருடைய பவித்ரமான கதாவதார சரித்திரத்தை பரமாகமலத்தில் கணதர் ஆதி மஹா முனிஸ்வரரால் சொன்ன பிரகாரம் என்னுடைய சக்தியினால் சொல்லுகிறேன்:

ஜம்பூ பிரஹத்தினாலே 1. லாஞ்சனத்தை உடைத்தா யிருக்கிற ஜம்பூ த்வீபமானது அசங்கியாத த்வீப சமுத்திரங்களுடைய மத்யத்தில் பூதாகாரமாக இராநின்றது. அந்த ஜம்பூ த்வீபத்தினுடைய தக்ஷிண திக்கில் தீர்த்தங்கரர்களுடைய பஞ்சகல்யாண பரம்பர வரிசைகளினாலே பவித்ரமாயும் பரதராஜ சக்ரவர்த்தியினுடைய ஆக்ஞைக்குள் அகப்பட்டதாயும் இராநின்ற பரததேசத்தில், ஜினேஸ்வரர்களுடைய அநேகமாய் இருக்கிற தர்ம தீர்த்தங்களினாலே பவித்ரமாயும் தேவலோகத்தினுடைய ஒரு பிரதேசமானது ஆகாயத்தில் ஆதாரமில்லாததினால், பூமியிலே விழுந்ததுபோல் இராநின்ற சுராஷ்டிர தேசமானது இராநின்றது.

அந்த சுராஷ்டிர தேசத்தினுடைய வர்ணனையானது எப்படிக்கொத்தது எனில், யாதொரு

---

1. லாஞ்சனம்-பிரகாசம்

தேச சோபையைப் பார்க்கிறதுக்கு வரப்பட்டு இருக்கிற தேவேந்திரனுடைய ஆயிரம் நேத்திரங்கள் இராநின்றது போலவே தடாகங்களில் வெளுப்பாயும் செகப்பாயும் நீலவர்ணமாயும் இராநின்ற ஆயிரம் தாமரை புஷ்பங்களினாலே விளங்குகிறது.

பின்னும், யாதொரு தேசத்தில் நதிகளுடைய மணல் கும்பல்கள் 1.அசங்கியாதமான பாகங்களான சர்வசமூகங்களினாலே அநுபவித்து இருப்பதாயும், நிர்மலாம்பரமான ஆகாசத்தினாலே ஆகாசங்களை உடையதாயும் வேஸ்யாஸ்திரீகளுடைய பிட்டங்களுக்கு சமானமாய் இராநின்றது.

பின்னும், யாதொரு தேசமானது நானா ஜாதிகளான பலங்களினால் வணங்கப்பட்டு இருப்பதுகளாயும் புஷ்பங்களையுடைய வாசனைகளினாலே பரிமளிக்கிற திக்கு சமூகங்களுடையதுகளாயும் இராநின்ற வனசோபைகளானதுகள் ஜனங்களுக்கு சந்தோஷத்தின் பொருட்டு ரூபலாவண்யமான ஸ்திரீகளானவர்கள் எப்படியோ அப்படியே விளங்காநின்றது.

கருப்பந்தோட்டங்களானதுகள் காத்துனுடையதுகளாயும் இராநின்ற கரும்புகளானதுகள் அதிக உன்னதமாயிருந்த போதிலும் விட்டம்பப்பட்டிருக்கிற பேரிடப்பட்டவர்களுக்கு பயப்பட்டதுகள் போலே பூமியிலே விழாநின்றதுகளில்லை. வயல்வெளிகளிலே கதிருகளினாலே வணங்கப்பட்டு இருக்கிற நெல்பயிர்களானதுகள் ஜலத்தைப் பானம் பண்ணப்பட்டதுகள் போலே வணங்கிரா நின்றதுகள். பசுமையான கிரணங்களுடைய காந்தியினாலே மனோகரமாயும் தவளவர்ணமான பசு சமூகங்களினாலே மோகிக்கப்பட்ட ஆகாசமானது போல் விளங்கா நின்றது.

அப்படிபட்ட சௌராஷ்டிர தேசத்தில் சொர்ணமயமான சப்ததலமெத்தைகளை உடையதுகளாயும், ஐஸ்வர்யங்களுக்கு இருப்பிடங்களாயும் தேவர்களுடைய கிருகங்களினாலே சூழப்பட்டு இருக்கிற அமராவதியானது போல, மனோகரமாயிருக்கிறது துவாராவதி என்கிற பட்டணத்தில் ஹரிவம்சத்தில், சத்ரு சமூகங்களை ஜயிக்கப்பட்டவராயும் சாதிக்கப்பட்ட சமஸ்தமான 2. தசதிக்சம்பவத்தை உடையராயும் இரத்தினத்தைப்போல் விருத்தமான முக காந்தியை உடையவராயும் உபேந்திர நாமத்தை உடையவராயும் இராநின்ற திரிகண்டாதிபதியின் கிருஷ்ண பூபதியானவர் ராஜ்ய பரிபாலனம் செய்தார்.

---

1. அசங்கியாதம் - எண்ணற்ற
2. தசதிக் - பத்துத்திசைகள்

அந்த ராஜாவுக்கு பார்வைனாலே பெண்மானையும், வசனத்தினாலே குயிலையும், முக காந்தியினாலே சந்தினையும், நடையினாலே ஹம்ச பட்சியையும், கூந்தல்களினாலே 1. சமர மிருகத்தையும், ஜெயிக்கப்பட்டவராயும் இராநின்ற சத்யபாமை என்ற பார்யை ஆனவள் ராஜாவினை சித்தத்துக்குச் சந்தோசமாக உண்டானார்கள். தர்மகதையைக் கேழ்க்கப்பட்டவராயும், யதீஸ்ரரை நமஸ்கரிக்கப்பட்டவராயும், களத்திரங்களோடே வெளயாடப்பட்டவராயும், சத்ருக்களுடைய சாதுரங்க பல சைன்யத்தை யுத்தரங்கத்தில் ஜயிக்கப்பட்டவராயும் வணங்கப்பட்ட ராஜாக்களுடைய சமூகத்தை உடையவராயும் இராநின்ற கிருஷ்ண பூபதியானவர் ராஜ்ய பரிபாலனம் செய்து கொண்டுவராநின்ற காலாவதாரணத்தில்,மாத்தூள் வர்ணமயமான ஜடையுடையவராயும், வெளுப்பான சரீர காந்தியை உடைத்தானவராயும் கும்கும் வர்ணமயமான பட்டு வஸ்திரத்தை உடைத்தானவராயும், முருக்கந்தடியைப் பிடிக்கப்பட்டவராயும், உட்கார்ரதுக்குத் தர்ப்பையினாலே செய்யப்பட்ட ஆசனத்தை உடையவராயும், குணங்களினாலே அடையப்பட்டவராயும், மனோக்யமான ஹாஸ்ய வசனத்தை உடையவராயும், ஜினேஸ்வரருடைய தர்மசாஸ்திரத்தில் பிரீதி உடையவராயும், கலகப்பிரியனாகவும். 2. மனோக்யமான ரூபத்தைத் தரிக்கப்பட்டவராயும், எப்பொழுதும் அபிமானத்தை உடையவராயும், ஜெயிக்கப்பட்ட பஞ்சேந்திரியன் விஷயங்களை உடையவராயும், ஏகதேச ஜினேஸ்வரர்களையும், தீர்த்தங்கரர்களையும், கணதரர்களையும், சாரண பரதேசிகளையும் மனுஷ்ய லோகத்தில் இராநின்ற கிருத்திம அக்கிருதிம ஜினசைத்யாலங்களை வந்திக்கப்பட்டவராயும், குணவான்களிடத்திலே பிரீதியுடையவராயும், ஒருவர்களிடத்திலும் 3. ராகத்துவேச ரஹிதராயும், ஆகாசத்தினின்றும் இழியப்பட்டவராயும் இருக்கிற நாரதரைப் பார்த்து சொர்ணமயமான சிம்மாசனத்தினின்றும் அதி வேகமாக எழுந்திருந்து, கிருஷ்ணரானவர், நாரதரை விசித்திரமான ஆசனத்தில் மேல் உக்காரவைத்து, ஸ்தோத்திர பூஜை செய்த பிற்பாடு, நாரதரால் சொல்லப்பட்ட ஆசிர்வாத வசனத்தை கிரகிக்கப்பட்டவராயும் இருக்கிற கிருஷ்ணரானவர் தன்னுடைய ஆசனத்தில் உட்கார்ந்து பலதேவ நாரதர்களோடு புராணக் கதைகளை வசனிக்கின்ற அவசரத்திலே, சபையில் வரப்பட்ட நேமிதீர்த்தங்கரரை கிருஷ்ண பலதேவ நாரதர்களும், சபாஜனமும் பார்த்து, நமஸ்கார வந்தனா ஸ்தோத்திரங்களைச் செய்தபிற்பாடு, ரத்னமயமான ஆசனத்தில் கிருஷ்ணரானவர் உக்காரவைத்து, பிற்பாடு, நேமிதீர்த்தங்கரரைப் பார்த்து, லலாட தலத்தில்

---

1. சமர மிருகம் - போர்க்களம்
2. மனோக்யமான - வசீகரமான
3. ராகத்துவேச ரகிதர் - விருப்பு வெறுப்பு இல்லாதவர்.

கரத்வயத்தைத் தாமரை மொக்கைப்போல் குவித்து வைத்துக் கொண்டு நாரதரானவர் ஸ்தோரத்திரங்களைச் செய்தார். கேவல ஞானமாகிற நிதிக்கு கிருகமானவர் என்றும், மன்மதராஜனை ஜெயிக்கப்பட்டவரென்றும், பவ்யஜனங்களாகிற தாமர புஷ்பத்தை மலரச்செய்யப்பட்ட சூரியனுக்கு சமானமானவரென்றும், அநேகமான ஸ்தோத்திர சகஸ்ரங்கங்களைச் செய்தபிற்பாடு, ஸ்வாமினுடைய அனுக்ரையினாலே தன்னுடைய ஆசனத்தில் உக்காரப்பட்டு இருக்கிற நாரதரைப் பார்த்து, கிருஷ்ணரானவர் தங்களுடைய பாததாமரையினுடைய தூளிகளினாலே என்னுடைய கிருகமானது பவித்ரமாச்சுதென்றும், ஆகாசமானது நிர்மலமாச்சுதென்றும், தச திக்குகளும் பரிமளமான காத்தானது வீசப்பட்டதென்றும், முதலாயிருக்கிற ஸ்தோத்திரங்களைச் செய்தபிற்பாடு, “யென்னுடைய தீபத்தில், என்ன கார்ய நிமித்தமாக வந்தீர்கள்?” என்றும் சொல்லி, ஒருவர்க்கொருவர் அன்னியோன்ய சந்தோஷ லாப வசனங்களைச் சம்பாஷணம் செய்த பிறகு, நாரதரானவர் சக்கிரவர்த்தினுடைய உத்தரவு பெத்துக்கொண்டு, சத்யபாமையினுடைய கிருகத்தை அடைந்திராநின்றவரை, சொர்ணமயமான சிம்மாசனத்திலே தன்னுடைய முகத்தைக் கண்ணாடியிலே பார்த்துக்கொண்டு வரப்பட்டவரைப் பார்க்காததினால், கோபவிசிஸ்டனாகி, சத்யபாமையினுடைய கிருகத்தினின்றும் புறப்பட்டு, நிந்தா வசனங்களைச் சொல்லி, இவர்களுக்கு பிரதிகூலம் செய்யவேணுமென்கிற ஆலோசனையை செய்கிறதுக்கு, உன்னதமான சகனமென்று நாமதேயத்தையுடைய பர்வதத்தின் பேரில் உட்கார்ந்து, சிரசை அசக்கி, “என்ன அவமானம் செய்தாள்?” என்று சிந்தித்து, இவளுக்கு என்ன பொல்லாங்கான கார்யத்தைச் செய்குறதுக்கு ஆரம்பிப்பேன் அல்லது செய்யாவிட்டால் மறுபடியும் அலங்கார சேஷத்தைச் செய்துகொண்டு வல்லபனை அடைவாளாகையில், அந்நிய ராஜாவினாலே, இவளை சுவீகரிக்கும்படி செய்வேன், அப்படி செய்தால் கிருஷ்ணருக்குத் துக்கம் உண்டாகும். ஆகையில், லோகத்தில் இராநின்ற ஸ்திரீமார்களுடைய ரூபலாவண்யங்களை ஜெயிக்கப்பட்டவளாயும், சங்கீதம் முதலிய சாஸ்திர விசேஷங்களை அறியப்பட்வளாயும் ஒரு கன்னிகையை வரவழைத்து, கிருஷ்ணருடைய ஹஸ்தமாந்தளிரிலே ஸ்தாபிப்பேன். அப்பொழுதுதான் சத்யபாமையினுடைய ஸ்தனபார பர்யந்தம் விழுப்பட்டு இருக்கிற துக்க சோகமான கண்ணீர்களைப் பார்ப்பேன். இதுவே ஸ்திரீகளுக்கு அதிகமான துக்கத்துக்குக் காரணமாகும். இவ்விடத்தில் வேறொன்று கார்யத்தினால் துக்கமவிட்டம்பப்பட்டிழுக்கிற பேரிடப்பட்டவர்களுக்கு பயப்பட்டதுகள் போலே துக்கமாகிறதில்லை யென்று சிந்தித்து, எழுந்திருந்து விஜயார்த்த பர்வ தக்ஷிணோத்தர பிரதம சிரேணியில் இராநின்ற வித்யாதர ராஜாக்களுடைய கிருகங்களில் சத்யபாமை யினுடைய ரூபத்துக்கு அதிகமான கன்யைகள் அகப்படாததினால், மனோதுக்கத்தை அடைந்து, விஜயார்ந்த பர்வதத்தினின்று பூமியில் இழிந்து, அயோத்யாதி சர்வ தேசங்களிலும் பரிகிரமிக்க விசித்திர ரூபலாவண்யமான அந்தப்புர ஸ்திரீகளினாலே சோபிக்கப்பட்டு இருக்கிற பிரக்யாதமான குண்டினம் எனும்

நாமதேயத்தை யுடைய பட்டணத்தை யடைந்து, ஜயிக்கப்பட்ட சத்ரு சமூகத்தையுடையவராயும் மதி முதலான பார்வைகளினால் சோபிக்கப்பட்டவராயும் இராநின்ற பீஷ்ம ராஜனுடைய உத்தரவினால் நாரதரானவர், அந்தப்புரத்தை பிரவேசித்து ஸ்ரீமதிக்குப் புத்ரியாய் ருக்மணனுக்குத் தங்கச்சியாயும் இராநின்ற ருக்மணி யென்று நாமதேயத்தை யுடைய புத்ரியைப் பார்த்து சந்தோஷப்பட்டு, என்னுடைய மனோரதமானது சபலமாச்சுதென்றும், சிரசை அசக்கி இராநின்ற நாரதரை பீஷ்மராஜனுடைய சகோதரியினாலே நமஸ்காரத்தைச் செய்விக்கப்பட்டு இருக்கிற ருக்மணியைப் பார்த்து, நாரதரானவர் சந்தோஷித்து சத்யபாமை யினுடைய சித்தத்தில் துக்கத்தைச் செய்யபப்பட்டவளென்று கிருஷ்ணருடைய சித்தத்தில் ரூப சௌந்தர்யத்தினாலே சமஸ்தஸ்திரீகளையும் ஜெயிக்கப்பட்டவ ளென்கிற காமோ நியாத அஹ்லாத முதலான............வள் நாரதரைப் பார்த்து "வாராய் முனிகளே" தங்களால் சொல்லப்பட்டவன் யார்? அவனுடைய குலமானது என்னா? வயசானது எவ்வளவு? ஸ்தானமானது எங்கே? ரூபமானது எப்படிப் கொத்தது? ஐஸ்வர்யங்கள் எவ்வளவு? யென்று கேழ்க்கப்பட்டவளுடைய சித்தத்தில் சந்தோஷம் வரும்படியாக விஷேமான வர்ணனாக்ருதிகளைச் சொன்னார்.

அது எப்படியெனில், உபேந்திர ராஜன் என்கிற நாமதேயத்தை உடையவரென்றும், ஹரிவம்சத்து சிகாமணி என்றும் யௌவன வயசை யுடையவரென்றும், துவாராபதி என்கிற பட்டணத்தில் ராஜ்யபரிபாலனம் செய்யப்பட்டவரென்றும் சமஸ்ராஜாக்களினாலே வணங்கப்பட்ட பாதபத்மத்வத்தை யுடையராய் இது முதலான வசனங்களைக் கேட்டு நின்றும் பீஷ்ம சகோதரியானவள் தங்களால் சொன்னபிரகாரம் நானும் அதிமுக்தரென்றும் நாமதேயத்தை உடைய அவதிக்ஞான முனிஸ்வரரிடத்தில் நின்றும் கேழ்க்கப்பட்டதென்று சொன்னபிற்பாடு நாரதருக்கு உன்னதமான ஆசனத்தை ஸ்தாபித்து, ஆகாரம் செய்விக்கப்பட்டு இருக்கிற ருக்மிணியைப் பார்த்து, சந்திரனுடைய சித்தத்தில் அடையப்பட்டிருக்கிற ரோகிணி தேவியானவள் போல் கிருஷ்ணருக்குப் பிராணகாந்தையாகக் கடவளென்று சொல்லப்பட்டு யிருக்குற வசனத்தைக்கேட்டு ருக்மணியானவள், வசனத்தினால் சொல்லாமல், குஞ்சிரிப்பினால் சரீரத்தில் சந்தோசமானது அடங்கித்து.

பிறகு, பீஷ்ம சகோதரியானவள், நாரதருக்குச் சொல்லுகிறாள், அந்தச் சங்கதியாவது ருக்மணி புத்திரனாயும், மாமனாயும் இருக்கிற சிசுபாலனுக்கு மாத்ரு பித்ருனுடைய உத்தரவை மீறி ருக்மணனால் விவாகமானது நிச்சயம் செய்திருக்கப்பட்டு இருக்கிறது. கிருஷ்ணருக்கு விவாக சோபையைச் செய்குறமளவும் ருக்மிணியை மௌனமாக இருக்கக் கடவளென்று செய்குறேன் என்று சொல்லப்பட்ட வசனத்தைக் கேட்டு, நாரதரானவர் ருக்மிணியினுடைய ஆச்சர்யமான பிரதிபிம்பத்தை எழுதிக்கொண்டு, ருக்மிணி பீஷ்ம சகோதரியினுடைய அங்கிகாரங்களையடைந்து, நாரதரானவர், துவாராவதிப் பட்டணத்தைக்

குறித்து, ஆகாச மார்க்கத்தில் நின்றும் வரப்பட்டிருக்குற நாரதரைப் பார்த்து, கிருஷ்ணரானவர் குதூகலத்தோடே கூடி, சொர்ணமயமான சிம்மாசனத்திலே உட்காரவைத்து, நமஸ்கார முதலான அர்ச்சனா விதிகள்ச் செய்து, ஷணப்பொழுது இருந்து,பிறகு, இந்தப் பூமியிலே சம்சரிக்கப்பட்டு இருக்கிற உங்களாலே ஆச்சர்யமானது பார்க்கப்பட்டதோ என்று சொல்லிய வசனங்களைக் கேட்டு, நாரதரானவர் வார்த்தையினாலே ஒன்றும் சொல்லாமல் சித்ரபடத்தை விரித்துக் காட்டினார்.

கிருஷ்ணரானவர் சித்ரபடத்தில் எழுதப்பட்டிருக்கிற ருக்மிணி மகாதேவியினுடைய ரூப சௌந்தர்யத்தைப் பார்த்து மயக்கத்தை அடைந்தவன் போலவும், எழுதப்பட்ட சித்ரத்தைப் போலவும், சமாதியானத்தை அடையப்பட்டிருக்கிற மகாமுனியைப்போலவும், சித்தபிரமணத்தை அடையப்பட்டவன் போலவும் ஆனார்.

இந்தக் கன்னியானவள், விரோதமான பரிணாமத்துக்கு இருப்பிடமான வஸ்து சம்பத்தை உடையவனாயும் போலவும், சமர்த்தனாயுமிருக்குற பிரம்மாவினாலே செய்யப்பட்டளோ என்னா? என்று சொல்லப்பட்டவராகி, பிற்பாடும் சொல்லுகிறார், கருத்த மயிர்களினாலே அலங்கரிக்கப்பட்ட, சந்திரனுக்குச் சமானமான முகத்திலே செந்தாமரைப் புஷ்பத்தில் இராநின்ற லஷ்மிதேவியைத் தரிக்கப்பட்டவளென்றும், இந்த கன்னியினுடைய, முகமாகுற சந்திரனைப் பிடிக்கிறதுக்கு ராகுவானவன் சிரசிலிரா நின்ற கூந்தல் சமூகமென்கிற வியாஜத்தினாலே, சமீபத்தை அடைந்தவனென்றும், மன்மதனாகுற மயிலைச் சந்தோஷம் செய்குறதுக்கு ஸ்தனபாரமாகுற மேக சமூகமானது இராநின்றது என்றும் ஜய ஶீலனாயிருக்குற மன்மதனானவன், இந்தக் கன்யையினுடைய ஆசமான உதரத்திலே மூன்று மடிப்பாகுற 1. வியாஜத்தினின்று, அகிழோடே கூடியிருக்கிற பரமண்டலத்தைச் செய்து, நிதம்ப ஸ்தானமாகுற துர்கத்திலே..... சாசுவதமான சமூகமான பிரகாசத்தினின்றும் இரவும் பகலும் அதிசயமான சந்திரகாந்தினுடைய சோபையைத் தரிக்கப்பட்டதான, நூதனமாயிருக்கிற இந்த கன்யையினுடைய பாதமாகுற கமலத்வதமானது ஹம்ச பக்ஷியினுடைய கமலத்தை ஜயிக்கப்பட்டதென்றும், சொல்லப்பட்டவராகி, மறுபடியும் சொல்லுகிறார்.

இந்தக் கன்யகையானவள், தேவேந்திரனுடைய பார்யையோ என்று அல்லது, கின்னர தேவனுடைய 2. களத்திரமோ என்னா, சந்திரனுடைய பத்னியோ என்னா, அல்லது ராஜாக்களுடைய பெண்சாதியோ என்னா, அல்லது வித்யாதர ஸ்திரீயோ என்னா, அல்லது யக்ஷதேவனுடைய நாரியோ என்னா, அல்லது தைர்ய லக்ஷ்மியோ என்னா, அல்லது பர்வத பத்மை என்குற பொய்கையில் சகஸ்ராஷ்டத கமலத்தில் வீத்திராநின்ற லக்ஷ்மியோ என்னா, அல்லது சரீரமான அங்ககீர்த்தியோ என்னா, பவன

1. வியாஜம் - காரணம். 2. களத்திரம் - மனைவி

நாரியோ என்னா, அல்லது குலாகீர்த்தி ஜனங்களுடைய காந்தியைச் சரீரத்தில் தரிக்கப்பட்டிருக்குற இந்த ரூபலாவண்யமான சுந்தரியானவள் என்னா, அல்லது அபூர்வமான கன்யகயோ என்னா என்றும் சொல்லியும் படத்தில் எழுதப்பட்டிருக்கிற யிருப்பிடத்தை அடைந்து ஜெயிக்கக்கூடாமலிருக்கிற மன்மதனானவன் புஷ்பபாணங்களினாலே லோகத்தை ஜெயிக்கப்பட்டவனென்றும் சொல்லப்பட்டவராகி, மறுபடியும் சொல்லத்தொடங்கினார்.

அது எப்படியெனில், சோடச கலை ரஹிதனான சந்திரனானவன் இல்லையென்னும் பாதகமனங்கள் ரஹிதமாக இல்லையென்றும், மனோகரமாக த்வனி ரஹிதங்களாகக் கோகிலங்கள் இல்லையென்றும், நேத்ர ரஹிதங்களாகப் பெண்மான்களில்லை யென்றும் கிரணங்களோடே கூடியிருக்கிற ரேகை ரஹிதங்களாக மயூரங்களில்லையென்றும், இப்படி யிருக்க இந்தக் கங்கையானவள் பிரம்மாவினாலே எப்படிச் செய்யப்பட்டாளென்றும், இந்தக் கன்யகைனுடைய விருத்தாகாரத்தை அடையப்பட்டிருக்குற நாயகனுக்கு வசிக்கப்பட்ட கிருகத்தினாலே, அலங்கிருதமாயிருக்குற நிதம்ப ஸ்தானமாகுற எப்போதும் விளங்கப்பட்டதே யென்றும் ..................................

வாராய் பூஜ்யனே! சித்தபூமணத்தை உடைத்தாயிருக்கிற எனக்கு யெவளென்று கேட்க, மறுபடி நாரதரானவர் சொல்லத் தொடங்கினார். ஆச்சரியத்தை அடையப்பட்டிருக்குற கிருஷ்ணரைப்பார்த்துப் புத்ரியானவள் பீஷ்ம ராஜனுடைய புத்ரியென்றும், லோகத்திலே ருக்மிணி என்றும் பிரக்யாதமான பேரையுடையவள் என்றும் யுத்தரங்கமானது செய்குறத்துக்குப் பராக்கிரமமானது இருக்கும் பக்ஷத்தில் ஸ்வதந்தரிக்கப்பட்டிருக்கிற சேதி பூசத்துக்கு ராஜானாயிருக்குற சிசுபாலன் எமராஜனுடைய கிருகத்துக்கு விருந்தாளியாகச் செய்து, இந்தக் கன்யகையைப் பிராயகாந்தையாக அடையலாமென்றும் ராஜாக்களெண்ண இவர்களிடையே ரூபலாவண்யமான அநேக ஸ்திரீமான் களானவர்கள் என்னாலே பார்க்கப்பட்டிருந்தும், இந்தக் சோபனமான ருக்மிணி கன்னிகையினுடைய வாதத்துக்கு சத்ருசமாகுறதில்லை என்றும், இந்தப் புத்ரியானவள் பிரம்மாவினாலே எப்படிச் சிருஷ்டிக்கப்பட்டாளோ என்றும், வாராய் கிருஷ்ணரே சந்திரனானவன் பௌர்ணமி திதியைவிட்டு, மைத்த இதரமாயிருக்குற திதியினுடைய ராத்ரியில் பிரகாசமாயிருக்குற அப்படிப்போலே, ஸ்திரீகளுடைய சுரதக்கிரீடாப்பிரமையிலே சம்பூர்ணமான வாஞ்சனையானது இருக்கும் பக்ஷத்தில், அந்தப் புத்ரியை விவாகம் செய்தால் திருப்தியை அடையலாமென்றும், இந்தப் பிரகாரம் மன்மதனாலே பிரமிக்கப்பட்டவராகக் கிருஷ்ணரைச் செய்து, நாரதரானவர் ஆகாச மார்க்கமாகப் போயிள்ளளவில்,

கிருஷ்ணரானவர், எனக்கு அந்தக் கன்யகையோடேகூட விவாகமங்களோத்சவமும், இஷ்ட விஷய காம போகங்களும் எப்படி அகப்படுமோ என்று தீர்க்ககாலம் சித்த விசாரணை அடைந்திருக்கும் சமயத்தில்,

ருக்மிணியானவள் அத்தையினுடைய உத்தரவினால் கிருஷ்ணருடைய சித்தமாகுற சமுத்திரத்தை விருத்தி செய்குறத்தின் பொருட்டுச் சாஸ்திரகலா ஞானத்தினாலே சம்பூர்ணமானவனாயும், காந்திமானாயும் 1. பிரசஸ்த 2. அவயவாகார முதலான சரீரத்தை உடையவனாயும் இராநின்ற தூதனாகுற சந்திரனானவன் துவாராபதிப் பட்டணத்தை அடைந்து, துவாரபாலகனுடைய மூலமாக, உத்தரவைப் பெற்றுக் கொண்டு கிருஷ்ணருடைய ராஜசபையைப் பிரவேசித்து நமஸ்காரம் முதலான ஸ்தோத்ரங்களைச் செய்து, கிருஷ்ணரைக் குறித்துச் சொல்லுகிறான்.

வாராய், யதுகுல திலோத்தமனே, உமக்குச் சொல்லுகுறத்துக்கு யோக்யமாயும்....... ஆச்சரியமான ரகசியச் சங்கதியானது இராநின்ற தென்று சொல்லப்பட்ட தூதனுடைய ஹஸ்தத்தைப் பிடித்துக் கொண்டு,பலதேவரான மந்திரியோடேகூடி ஆலோசனை செய்றத்துக்கு யோக்யமாயிருக்கிற மண்டபத்தை அடைந்து, பலதேவரும், கிருஷ்ணரும் சரியான ஆசனத்தில் உட்கார்ந்து, பிறகு அபிமுகமாக ஒரு ஆசனத்தைக் குடுத்துப் பிரிய வசனத்தினாலே தூதனை உட்காரவைத்து, என்ன ஹெரஸ்யமான சங்கதியென்று கேழ்க்க, கிருஷ்ணரைக்குறித்துத் தூதனானவன் சொல்லுகுறான்.

வாராய், ராஜனே, ஜயிக்கப்பட்ட சத்ருசமூகத்தையுடையவராயும், ஜயிக்கப்பட்ட பஞ்சேந்திரிய விஷயங்களை யுடையவராயும் சிம்மத்துக்குச் சமான பராக்கிரமங்களை யுடையவராயும், பூமண்டலங்களை உடையவராயும், குலமாகுற ஆகாசப்ததுக்குச் சூர்யன்போலே இருப்பவராயும் இருக்குற பீஷ்மரென்று நாமதேயத்தை யுடைய ராஜனானவர் இராநின்றார். அவருக்கு மனோரமணீயமானவர்களையும், சத்குலபிரசுதர்களாயும், தேவஸ்திரீகளுக்கு சமமான ரூபலாவண்யங்களாயும் யௌவன வயசையுடையவர்களாயும் இராநின்ற அநேக களத்ரங்கள் இருந்தபோதிலும் ஸ்ரீமதி யென்னும் நாமதேயத்தை யுடைய தேவியானவள் பிரதம பட்டமகிஷியர் இராநின்றாள்.

இந்த இரண்டு பேர்களுக்குத் தேவேந்திரனுக்குப் புத்ரனாயிருக்குற ஜயந்தகுமாரனுக்கு 3.சத்ருசமாயிருக்கிற ரூபாலாவண்யத்தை யுடையனாயும், ஈஸ்வரனுக்குப் புத்ரனாயிருக்குற சுப்பிரமண்ய குமாரனுக்குச் சத்ருசமான பராக்கிரமங்களை யுடையவனாயும், யௌவன வயசை யுடையவானயும், நீதி மார்க்க ஸ்தானனாயும், இராநின்ற ஹிமவான் பர்வதத்தினின்று உத்பண்ணமாயிருக்குற பார்வதிக்குச் சமானமானவளாம், க்ஷிர சமுத்திரத்தினின்றும் உத்பன்னமாயிருக்கிற லக்ஷ்மி தேவிக்குச் சத்ருசமாயிருக்கிற ரூப சௌந்தர்யங்களை யுடையவளாயும், பிரம்மாவினாலே பிறக்கப்பட்டிருக்கிற சரஸ்வதிக்கு

1. பிரசஸ்த - உயர்வான
2. ஆகாரம் - உருவத்தோற்றம்
3. சத்ருசம் - சமானம்

சத்ருசமான சாஸ்திர கலைகள் முதலான சங்கீத சாகித்யங்களோடே கூடிஇருக்கிற மனோகரமான கண்டத்வனியை யுடையவளாயும், இராநின்றவளாயும் இராநின்றிருக்கிற ருக்மிணி என்று நாமதேயத்தையுடைய புத்ரியானவள் இராநின்றாள்.

இந்தக் கன்யகையை ருக்மணனானவன் மாத்ருக்களையுடைய உத்தரவை மீறி தமகோஷ ராஜனுக்குப் புத்ரனாயிருக்குற சிசுபாலனுக்கு மாக மாசத்து, சுக்ல பட்சம் தினத்திலே விவாக முகூர்த்த லக்ன விதியானது ஜ்யோதிச சாஸ்திரங்களை அறியப்பட்ட புரோகிதர்களினால் கணிக்கப்பட்டிருக்கிறது.

இப்படிப்பட்ட காலாவதரத்தில், நாரதரானவர், நமஸ்காரம் செய்யப்பட்ட ருக்மிணிக்கி, முராரி யென்று நாமதேயத்தை யுடையவனாயும், ஜயிக்கப்பட்ட சத்ரு பூமண்டலத்தை உடையவனாயும், அலங்கிருதனாயும், நேமீதிர்த்தங்கரருடைய ஞானோத்பத்தி காரணத்தினின்றும் சௌதர்மேந்திரனாலே நிர்மாபனம் செய்யப்பட்ட சொர்ணமயமான சதுர் கோபுரங்களோடே கூடி இருக்குற வேதிகைகளினாலேயும் நவரத்ன கவிந்தங்களாய்ச் சப்த பிராசாதங்களான உப்பரிகைகளினாலே அலங்கிருதமாயிருக்கிற துவாராவதி பட்டணத்துக்கு ராஜாவா இருக்குற கிருஷ்ணனானவன் பர்த்தாவாகக் கடவானென்று ஆசிர்வாத வசனங்களைச் சொன்னார்.

அன்றுமுதல் ருக்மிணியானவள் காமாக்னியிலே தவிக்கிறத்தினின்றும் கதலிபத்திரத்தின் மீதில் சயனத்தையும் உம்முடைய நாமதேயத்தையே ஸ்மரிக்கப்பட்டவளாகக்கொண்டு, உத்யான வனத்திலே கொடிகளினாலே சூழப்பட்டிருக்குற லதாமண்டபத்துக்குள் இராநின்ற அசோகவிருக்ஷத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிற, மன்மதனைப் பூஜிக்கிறத்துக்குத் தினந்தோறும் வரப்பட்டவளாயும் இராநின்ற ருக்மிணியானவள், பெண்சிம்மமானது ஆண் சிம்மத்தைவிட்டு மைத்தோரு ஜாதிமிருகங்களோடு கூடிப், புணர்ச்சி செய்யமாட்டாது எப்படியோ அப்படிப்போலே, ரூப சௌந்தர்ய பலபராக்கிரம ஐஸ்வர்யங்களினாலே அலங்கிருதராயிருக்குற உங்களைவிட்டு மைத்தோரு அந்நிய புருஷர்களோடே கூடி இஷ்ட விஷய காம போகங்களை அனுபவிக்கப்பட்டவளில்லை; ஆகையால், புத்திமானா இருக்குற தங்களுக்கு விசேஷமான வசனங்களினாலே வர்ணிக்கிறத்துக்கு வேண்டியதில்லை. சௌக்கியங்களை வகிக்கப்பட்டிருக்கிற கார்யங்களை விசாரித்து, லக்ஷ்மியை வாஞ்சிக்கப்பட்டிருக்கிற தேவ சமூகங்களினாலே சூழப்பட்டிருக்கிற க்ஷீர சமுத்திரத்தைப்போலே கர்வத்தினாலே கண், தெரியாமலாயிருக்குற சேதிராஜனுடைய சதுரங்க சைன்யங்களினாலே சூழப்பட்ட குண்டினபுரத்தை ஜ்யோதிஷ்யர்களினாலே கணிக்கப்பட்டிருக்குற முகூர்த்த லக்ன திவசத்துக்குள் சீக்ரமா வரவேண்டியதென்று சொல்லிவிட்டுத் தூதனானவன், பிரிய

வசனங்களினாலே விடைகொண்டு போயுள்ளளவில் க்ஷணப் பொழுது சித்தத்தில் பத்தபிருமத்தை அடைந்தவன்போலே விசார சூன்யனா இருக்குற கிருஷ்ணரானவர், கார்யா கார்யங்களை நிச்சயிக்கப்பட்டிருக்குற பலதேவரோடே கூட செய்குறத்துக்கு யோக்யமாயிருக்குற கார்யத்தை ஆலோசனை செய்து, பிறகு, சந்தோஷங்களை அடைந்து சாதுரங்க சேனைகளுடன் கூடி 1. ரதாரூடர்களாக க்ஷணத்தினாலே குண்டினபுரத்து நாட்டை உத்யான வனத்தை அடையப்பட்டவர்களாயும், தேவேந்திரனுக்குச் சமானமான தேவர்களுடையர்களாயும், ஹரிவம்சத்துத் திலோத்தமைகளாயும் இராநின்ற கிருஷ்ண பலதேவர் மனோ ரமணீயமாக இருக்கிற தேவ விதானத்திலே சௌக்யமாக இராநின்ற தேவர்களைப் போல், பூமியில் இழியப்பட்ட தேவேந்திரனுடைய நந்தவனத்தைப் போலே இராநின்றிருக்கிற உத்யான வனத்தில் விளங்காநின்ற லதா மண்டபத்துக்குள் சௌக்யமாக இருந்தார்கள்.

அந்த அவசரத்தில் நக்ஷத்திர சமூகத்தினாலே சூழப்பட்டிருக்கிற மகம்மேருசூளிகையைப்போலே சிசுபால பூபதினுடைய சாதுரங்க சைன்யங்களினாலே சூழப்பட்டிருக்கிற குண்டினபட்டணத்திலிராநின்ற ராஜாவினுடைய அந்தப்புரத்தினின்றும் உத்யானவனத்திலிரா நின்றிருக்குற காமன் கோயிலுக்கு வரப்பட்டவளாயும், வக்ரமான சுருட்டை மயிர்களினாலே அலங்கிருதமாயிருக்கிற நெத்திச் சுட்டியை உடையவளாயும், மன்மதச் சாபத்துக்குச் சமானமான தீர்க்க நேத்ரத்தை உடையவளாயும், சந்திர பிம்பத்தைப் போலே முகக் காந்தியை உடையவளாயும் மனோக்யமான சங்குக்குச் சத்ருசமான கண்டத்தைத் தரிக்கப்பட்டவளாயும், பெருத்தும், உன்னதமாயும் இராநின்ற ஸ்தன பாரங்களினாலே வணங்கப்பட்டவளாயும் சிறு செண்பகப் புஷ்பங்களினாலே கட்டப்பட்டிருக்கிற தண்டமாலையை உடைய சத்ருசமான புஜத்தை உடையவளாயும், ஹோம குண்டத்துக்கு சத்ருசமான இடையை உடையவளாயும், மன்மதனுக்குக் கிருகமாகுற மேகலாபரத்தினாலே அலங்கிருதமான நிதம்பஸ்தானத்தை உடையவளாயும், திக்கஜங்களுடைய தும்பிக்கைக்குச் சத்ருசமான துடையையுடைவளாயும், வாழைத்துண்டுக்குச் சத்ருசமான முழங்காலை உடையவளையும், செந்தாமரைப் புஷ்பத்துக்குச் சத்ருசமான பாதத்வயத்தை உடையவளாயும் இராநின்ற ருக்மிணி கன்யகையைப் பார்த்துத் திரிகண்டாநிபதிகளுக்கு ஒன்பதாவதாயிருக்குற கிருஷ்ணரானவர்,

வாராய், பிராணகாந்தையே! என்னுடைய நேத்ரத்வயத்துக்குப் பாத்ரமானவளாயும் இருக்குற உன்னுடைய வசனப்பிரகாரம் வந்திராநின்றேன். இது முதலாயிருக்குற இஷ்ட விஷய சம்பாஷணத்தைக் கேட்டு வசனத்தினால் பிரத்யுத்தரம் சொல்லாமல் பாதாம்புஷ்பத்தினால்

---

1. ரதாரூடர்கள் - இரதத்தில் ஏறுபவர்கள்

வக்ரமான முகத்தினின்றும் பூமியிலே எழுதப்பட்ட இங்கித ஞானசேஷ்டயை உடைய ருக்மிணி மனோபிப்பிராயத்தை அறிந்து, கிருஷ்ணரானவர், சிசுபாலன் முதலாயிருக்கிற ராஜாக்களுக்குச் சங்கத்வணி பூர்வகம் மஹா ரதத்தின்பேரில் புஜத்வய ஆலிங்கனத்தினால் ருக்மிணி கன்யகையை ஏத்திக்கொண்டு தன்னுடைய பட்டணாபிமுகமாக விடப்பட்டிருக்கிற ரதத்தை, ருக்மணன் முதலாயிருக்கிற ராஜாக்கள் பார்த்து,

பிரளய கோலாஹலமான சப்தங்களையுடைய ரத, கஜ, துரக பதாதிகளான சாதுரங்க சேனைகளை விடப்பட்ட யுத்தரங்க பேரிச் சப்தங்களைக் கேட்டு, என்னால் உமக்குப் பிராண பயம் வரப்பட்டதென்று" சொல்லப்பட்ட ருக்மிணியைப் பார்த்து, கிருஷ்ணரானவர், "வாராய் பிராண காந்தையே, மனசில் பயப்படவேண்டாம். என்னுடைய பராக்கிரமத்தைப் பார்." என்று சொல்லி, ஏழு பன்பிரஷங்களையுடைய(?) நாமத்தையும் வஜ்ரமோதிரத்தைச் சூர்யம் செய்யப்பட்ட பராக்கிரமத்தையும் காட்டினார்.

அப்பொழுது, ருக்மிணியானவள், பயப்பட்டு, சகோதரன் முதலாயிருக்கிற பித்ருவர்க்கங்களுடைய அபயதானத்தை இச்சித்தாள். நீ சொன்ன பிரகாரம் ஆகக் கடவதென்று சொல்லிவிட்டு, சிம்மமானது, யானையினுடைய 1.அபிமுகமாக எதுக்கப்பட்டது போலே கோபாக்னியினாலே ஜ்வலமான முகத்தையுடைய. கிருஷ்ணரானவர், சிசுபால ராஜனுடைய அபிமுகமாக எதுக்கவும், பலதேவரானவர் பிரசண்டமான மழைகளைப் போலே ´பாணங்களை வர்ஷிக்கப்பட்டதாயும், ருக்மணனுடைய அபிமுகமாக எதுக்க, அப்பொழுது தேவிசிஸ்டமாயிருக்கிற கஜங்களுடைய மஸ்தகங்களினாலே சூழப்பட்டதாயும், ஆஸ்வசமூகங்களையுடைய கொளம்புகளினாலே பிளக்கப்பட்ட பூமியை உடையதாயும், ஒன்றோடொன்று நெருங்கப்பட்டிருக்கிற ரத சமூகங்களினாலே சூழப்பட்டதாயும் பராக்ரமத்தையுடைய மனோக்யமான வீர புருஷர்களினாலே பிடிக்கப்பட்டிருக்கிற ஆயுதங்களுடைய கிரணங்களினாலே பிரகாசமா இருக்கிற சத்ரு ராஜாக்களுடைய சேனையானது, சமுத்திரத்தினின்றும் வரப்பட்டிருக்குற அலைகளினாலே ஒடப்பட்டிருக்கிற நதிகளுடைய ஜலத்தைப் போல் கிருஷ்ண பலதேவர்களுடைய பாணமழைகளினாலே ஓடப்பட்டிருக்கிற சாதுரங்க சேனையைப் பார்த்து,

ருக்மணனானவன், பாணத்தினாலே அடிக்கப்பட்டிருக்கிற பலதேவருக்குக் கோபமாகிற அக்னியானது உண்டாய் உள்ளளவில், பலத்தினாலே கர்வஸ்டனாயிருக்கிற ருக்மணனை நாகபாசத்தினால் கட்டினார்.

---

1. அபிமுகம் - நேருக்கு நேர்.

அந்தச் சமயத்தில் தானசீலனாயும் உன்னதமான வம்சத்தை உடையவனாயும், கோபத்தை அடையப்பட்ட சித்தத்தை உடையவானாயும் இருக்கிற சிசுபாலனைக் கிருஷ்ணராலே கொல்லப்பட்டது.

இப்படிக்கொத்த பவிஷ்டர்களாயிருக்கிற கிருஷ்ண பலதேவர்களினால் கத்தியினாலே துண்டுதுண்டாய்ச் செய்யப்பட்டிருக்கிற குளம்புகளுடைய குதிரைகளினாலே நெருங்கியிருப்பதாயும் ரௌத்திரத்யானத்தினாலே யுத்தரங்கத்தைச் செய்குறத்துக்கு ஓடப்பட்ட படர்களுடைய முண்டங்களினாலே நர்த்தனத்தை உடையத்தானதாயும், கஜங்களுடைய மஸ்தகத்தினின்றும் ஒழுகப்பட்டிருக்கிற ரக்தருதிரங்களினாலே சேறானதாயும், உடையப்பட்ட 1. பகுளமான ரதங்களினாலே மறைக்கப்பட்ட தசதிக்சமூகத்தை உடைத்தாயும் இருக்கிற யுத்தரங்க பூமியைக் செய்யப்பட்டிருக்கிற கிருஷ்ணபலதேவர்கள் இஷ்ட வசனங்களினாலே ருக்மணனை நாகப்பாசத்தினின்றும் விடுதலை செய்து, ருக்மிணியோடும் சாதுரங்க சேனையோடும் ஆனந்த ஜயபேரி அடித்துக்கொண்டு, தன்னுடைய பட்டணத்து அபிமுகமாகப் புறப்பட்டு ஊர்ஜதந்த பர்வத்திலிராநின்ற ரைவதகமென்கிற வனத்தை அடைந்தார்கள்.

அந்த வனத்திலே, விவாக மங்கள விதியானது முடித்தபிறகு, ருக்மிணியோடே கூடி, கிருஷ்ணரானவர் பந்துக்களோடே ரதாரூடராகிப் பார்க்கவேணுமென்கிற குதூகலத்துடன் கூடின தாசி ஜனங்களினாலே சம்பூர்ணமாயிருக்கிற துவாராபதிப் பட்டணத்தை அனேகப் பேரி சப்தவாத்யங்களுடன் பிரதட்சினமாக வரப்பட்டிருக்கிற ரூபசௌந்தர்யமான ஸ்திரி புமான்கள் இருக்கிற ருக்மிணியுடன் கூடின பார்க்கிறதற்குச் சில ஸ்திரீகள் சித்தப்பிரமையினால் கன்னத்தில் அஞ்சனப்பொட்டாயும் நேத்ரங்களிலே குங்குமத்தையும் செய்துகொண்டு, கிருகத்தின் பேரிலே இராநின்றிருக்கிற மேல் உப்பரிகையின் மிசையேறி, கைப்பிடிச்சுவர் சமீபத்தில் நின்றார்கள்.

மறுபடியில் சில ஸ்திரீகள் பாதத்திலிடப்பட்டிருக்கிற பாதரசத் தண்டை கெச்ச கொலுசுவான ஆபரணங்களைக் காதில் இடப்பட்டவர்களாயும், கிருஷ்ணருடைய பிரஸ்துதகங்களைப் பார்க்கவந்தவர்களுடைய, கடவீதியிலே ஓடப்பட்டவர்களைப்பார்த்துச் சில ஸ்திரீகள் குஞ்சிரிப்புடன் கூடி, பரிகாசம் பண்ணினார்கள்.

---

1. பகுளமான - பலவிதமான

மறுபடி, சில மூடர்களாயிருக்கிற ஸ்திரீமார்கள் இடையில் கட்டப்பட்டிருக்கிற மேகலாபரணங்களைக் கழுத்தில் முத்தாஹாரமாக அணிந்துகொண்டும், மேல் உப்பரிகையினுடைய ஜன்னல் மார்க்கத்தினாலே பார்க்கபட்டிருக்கிற முகங்களை, கிருஷ்ணரால் மறுபடி சில ஸ்திரீமார்கள், புஷ்பமாலைகளுடன், கூடின கூந்தல்களைக் கட்டாமல் இடையினின்று, அவர் கட்டியிருக்கிற வஸ்திரங்களைப் பிடிக்கப்பட்ட ஹஸ்தத்தையும் மைத்தோரு ஹஸ்தத்தினால், ஸ்தனபாரங்களை மறைத்துக்கொண்டு மங்கள வாத்யங்களினால் யோகப்பட்டிருக்கிற கிருஷ்ணரைப் பார்க்குறதிற்கு மஹா வீதியிலே ஓடினார்கள்.

இப்படிக்கொத்த அதிசயங்களுடன் மன்மத ரூபமான கிருஷ்ணருடைய ஹஸ்தத்தைப் பிடித்துக் கொண்டு போகப்பட்ட ருக்மிணியைப் பார்த்துச் சில ஸ்திரீகள் பேசினார்கள்.

அதாவது, இந்த ருக்மிணியினால் பூர்வபவத்தில் ஆச்சரியகரமான ஆகாராதி சதுர்வித்தானங்கள் மகாமுனி முதலான ஸ்த்வஷ்டிகளுக்குக் கொடுக்கப்பட்டுதோ, அல்லது செய்குறத்துக்கு அருமையாயிருக்குற மகா தபங்கள் செய்யப்பட்டதோ, அல்லது முக்யமான ஒரு தேவதைளைய ஆராதிக்கபட்டாளோ, ஆகையினாலேதானிவள் கிருஷ்ணருடைய ஹஸ்தத்தைப் பிடித்தாள்.

இவள் செய்யப்பட்ட விருதாதிகளை, ஒரு புத்திமானானவன் எங்களுக்கு அந்த விருதத்தைக் கொடுப்பானேயானால் நாங்களும் நேத்ரேந்திரியம் முதலா இருக்குற பஞ்சேந்திரிய விஷயங்களிலே வாஞ்சார ஹிதர்களாகித் தவங்களை அனுஷ்டிப்போமென்று பேசப்பட்டிருக்கிற ஸ்திரீமார்களுடைய வசனங்களைக் கரணத்வயத்தினாலே கேட்டுக் கொண்டு, கிருஷ்ணரானவர் ஐஸ்வர்யங்களுக்கு இருப்பிடமாக இருக்கிற தன்னுடைய அரண்மனையை அடைந்தார்கள்.

பலதேவரானவர்கள், தாமரைத்தடாகத்தை அடையப்பட்டு இருக்கிற ராஜஹம்ச பக்ஷியைப்போல ரேவதி மகாதேவினுடைய கிருகத்தை அடைந்தார்கள்.

கிருஷ்ணரானவர், பரவிலாசினிகளோடு கூடியிருப்பதாயும், வஸ்திரங்களென்னா, சுவர்ணங்களென்னா, திரவியங்களென்னா, இது முதலானதுகளினாலே சம்பூர்ணமாயும் பிராசார உப்பரிகைகளோடும் கூடி இருக்கிற கிருகத்தையும், அனேக வாகனங்களையும் ருக்மிணி மகாதேவிக்குக் கொடுத்தார்.

பின்பு, கிருஷ்ணரானவர் மனசினாலேயும், வசனங்களினாலேயும் ருக்மிணி மகாதேவி மோகத்துடன் கூடி இருந்துள்ளளவில், குணத்தினாலே அதிகமாயிருக்கிற சத்யபாமையானவள் கிருஷ்ணருடைய வியோகப் பிரிவினால் சோகத்தை அடைந்து செல்லாநின்ற காலாவதரணத்தில்,

கிருஷ்ணரானவர் ருக்மிணியினாலே மெல்லப்பட்டதாயும், உமியப்பட்டதாயும் இருக்கிற ஜாதிக்காய், ஜாபத்ரி, ஏலம், லவங்கம், வால்மிளகு, கொப்பறை முதலானவைகளுடன் கூடி இருக்கிற தாம்பூலங்களைத் தன்னுடைய மேல் உத்தரீயமான வஸ்திரத்தினுடைய முந்தானையிலே முடித்துக்கொண்டு, சத்யபாமையினுடைய கிருகத்தை அடைந்தார்.

அப்பொழுது, சத்யபாமையானவள், கோபத்தினின்றும் தடுக்க, அப்பொழுது, கிருஷ்ணரானவர் அநேகமான இஷ்டவிஷய வசனங்களினாலே அவள் மனதைக்கரைத்து அவளுடன் புணர்ச்சி செய்து, நித்திரைசெய்யப்பட்டவருடைய தொங்குகிற வஸ்திரத்தினுடைய முந்தானையில் வண்டுகளினாலே சூழப்பட்டு இருக்கிற வாசனைத் திரவியமான முடிச்சைப்பார்த்து, அதிகமான கோபத்தினாலே ருக்மிணிக்குக் கொண்டுபோகப்பட்ட வாசனைத்திரவியமென்று பாவித்து, அத்தை, அவிழ்த்துத் தன்னுடைய ஹஸ்தத்வயத்தினாலே கசக்கி, சரீரத்திலே பூசப்பட்டிருக்கிற சத்யபாமையைப் பார்த்து, கிருஷ்ணரானவர்,

“வாராய்! பிராண காந்தையே! உனக்கு வித்யாதர ராஜாக்களுக்கு யஜமானனாயிருக்கிற சுகேது வித்யாதர ராஜனைப் பித்ருவாக அடைந்து, எனக்குப் பிராணவல்லபயாய் இருந்தும் ருக்மிணி மகாதேவியினுடைய சொல்லுகளோடு கூடின உச்சிஸ்ட தாம்பூலங்களைக் கசக்கிச் சரீரத்திலே பூசுகிறதானது, ஆச்சரியமாயிருக்கிறதென்று, ஹஸ்தத்தைத் தட்டி, கலி என்கிற வசனத்தினாலே சிரித்தார்.

இந்தச் சிரிப்பான வசனங்களைக் கேட்டு, சத்யபாமையானவள் கோபத்தினாலே வெட்கப்பட்ட முகத்தை உடையவளாகிக் கோகுலங்களை மேய்க்கப்பட்டவராய யாதவ மூடனே, உனக்குச் சுரதக்கிரீடையினுடைய போகசம்பாஷணை வசன வரிசைகள் தெரியமாட்டாதென்றும், பேருக்குச் சகோதரியான ருக்மிணியினுடைய உச்சிஸ்ட தாம்பூலங்களைப் பிரீதியென்று சொல்லி, மௌனத்தை அடைந்தபிறகும் மறுபடி சத்யபாமையானவள், ''ருக்மிணி தேவியினுடைய ரூப சௌந்தர்யங்களைப் பார்க்கவேணுமென்று கேட்க, அப்படியே ஆகக்கடவதென்றும், இதிலே ஒரு தோஷமில்லை என்று இஷ்ட விஷய வசனங்களைச் சொல்லிவிட்டுக் கிருஷ்ணரானவர், சத்யபாமையினுடைய கிருகத்தினின்று புறப்பட்டு, ருக்மிணி தேவியினுடைய கிருகத்தை அடைந்து, பிறகு,

வாராய், பிராண காந்தையே! நாளைய தினம் உத்தியான வனத்திக்கு வரவேணும் என்று அப்படியே அங்கீகாரங்களை அடையப்பட்டிருக்கிற ருக்மிணி தேவியை வெண்பட்டு வஸ்திராபரணங்களினாலே அலங்கரித்து, பின்பு ருக்மணிதேவியை இட்டுக்கொண்டுபோய், வாயுஷனாலே அசையப்பட்ட விருட்சங்களுடைய கிளைகளினால் நர்த்தனம் செய்யப்பட்டிருப்பதாயும், வண்டுகளுடைய பஞ்சத்தில் தோரணமாலைகளையுடையதாயும், பட்சி ஜாதிகளுடைய த்வனிக் கூச்சல்களாகுற ஜயசப்த ஸ்தோந்திரங்களினால் சுந்தரமாயும், மதவிசிஸ்டமான மயில் சமூகங்களுடைய நர்த்தனங்களினாலே சம்பூர்ணமாயும் இருக்கிற உத்தியான வனத்தை அடைவித்து, வன மத்யத்தில் இராநின்ற ஸ்படிக மயமான சிலையின்பேரில் ருக்மிணி தேவியைத் தர்ம தேவியைப் போலே ஸ்தாபித்தும், நேத்ரத்வயத்தினுடைய புருவத்தை அசையாமலிருக்க வேண்டியதென்று பிரிய வசனங்களைச் சொல்லிவிட்டு, சத்யபாமையை உத்யான வனத்தை வரும்படி அறிவித்து, பிறகு சமீபத்திலிரா நின்ற செடிப்புதருக்குள் அடைந்து, கிருஷ்ணரானவர் பார்த்து, இருக்க அவசரத்தில் சத்யபாமையானவள் வனத்தை அடைந்து ருக்மிணியானவள் பின்னிட்டு வருவாளென்று சொல்லிய வசனத்தின்று ஸ்படிகச் சிலையின் பேரில் இராநின்ற ருக்மிணியினுடைய ரூபத்தைப் பார்த்து, இவள் தேவ ஸ்திரீயோ என்னா, அல்லது பவனநாரியோ என்னா, ரோகினி தேவி என்னா, இல்லாவிட்டால் ரதிதேவியோ என்னா, இந்தப் பிரகாரம் சத்யபாமையானவள் சிந்தித்து, மறுபடியும் என்னுடைய பூர்வபவித்தில் செய்யப்பட்ட புண்யோதயத்தினின்றும் வனதேவதையானவள், என்னுடைய நேத்ரத்வயத்துக்கு விஷயமாகப் பிரத்தியஷமாக வந்தாளென்கிற முயற்சியான புத்தியை உடையவளாயும், நூதனமான வஸ்திராபரணங்களினாலே கூடினவளா ரத்னகசிமதான சோபானங்களினாலே அலங்கரிக்கப்பட்ட தடாகத்தை அடைந்து, ஸ்நானாலங்காரம் செய்து, பவித்ரமான பாத்திரத்தில் ஜலத்தைச் சுவீகரித்தும், பரிமளமான புஷ்பங்கள் என்னா, கந்த திரவியங்கள் என்னா, பழங்கள் என்னா, இதுகளினாலே கூடினவாளாக வனதேவதை ரூபமான ருக்மிணி தேவினுடைய பாதத்தில் ஜலாதி அர்ச்சனைகளினாலே புஜித்தும், நமஸ்கரித்தும், வியை வசனங்களினால் ஒரு வரத்தை யாசித்தாள்.

என்னவென்றால், பிரத்தியக்ஷமாகப் பார்க்கப்பட்டவர்களுக்கு இஷ்டார்த்த பலங்களைக் கொடுக்கப்பட்டவராய், தேவதையே, கிருஷ்ணனை ருக்மிணியினிடத்தில் வைராக்கிய சிந்தையுடையவனாயும் என்னிடத்தில், பாதாதி சேவைகளைச் செய்யவேணுமென்று பிரார்த்திக்கப்பட்ட வசனங்களைக் கேட்டுக் கிருஷ்ணரானவர் செடிப்புதர்கள் மத்யத்தில் வெளிப்பட்டுச் சமீபத்தில் வந்து,

வாராய், சத்யபாமையே! ருக்மிணி தேவியினுடைய பாதபூஜையினின்றும் மனோக்ஞமான வரத்தைப் பெற்று, என்னுடைய பாதமூலத்திலே என்னை இருக்கும்படி சொல்லி பிரார்த்தனா வசனங்கள் சித்திக்கிறதுக்கு யாதொரு சந்தேகமில்லை என்று பரிகாச வசனங்களினாலே குறித்து, ஹஸ்தத்தைத் தட்டிச் சிரித்து, அப்பொழுது சத்யபாமையானவள் கிருஷ்ணருடைய வசனத்தினாலே ருக்மிணியென்று அறிந்து, பாஹ்யத்திலே குஞ்சிரிப்புடன் கூடின பிசன்னமான முகத்தை உடையவளாயும், அந்தரங்கமான சித்துக்களைக் கோபாக்கியையுடைய அந்தரங்கமான பரிகாச வசனத்தினால் கிருஷ்ணனைப்பார்த்துத் தொடங்கி, அது எப்படியெனில்,

வாராய், துர்ஜனனே! லோகத்திலே இடையனுடைய புத்திரனென்றும் எப்படிச் சொல்லப்பட்டாயோ, அப்படியே நீ பரிகாசக் காரியங்களைச் செய்யப்பட்டதென்றும், இடையனைவிட அந்நியமாயிருக்கிற யோகனுக்குத்தான் இப்படிக்கொத்த பரிகாசக் காரியங்கள் உண்டாகும். அப்படிக் கொத்த பரிகாசக் காரியங்களோடே கூடினவனாய் இருந்த போதிலும், பிரம்மாவினாலே உன்னை அடைகுறதுக்கு அரிதாயிருக்குற ராஜ்யபாரத்திலே ஸ்தாபிக்கப்பட்டது, அப்படி ஸ்தாபிக்கப்பட்டிருந்தும், பூர்வத்தில் உண்டாயிருக்குற ஸ்வபாவமான மாடுமேய்க்கப்பட்ட குணங்களை விடஇல்லை என்று சொல்லியும், எனக்கு யெளயவளாயும், சகோதரியாயும் இராநின்ற ருக்மிணியானவள் அஷ்டவிதார்ச்சனைகளுடன் கூடியிருக்கிற என்னாலே நமஸ்காரம் முதலான பூஜ்யத்வமானது செய்த காரியத்தில்.

வாராய், அஞ்ஞானியே! உன்னால் செய்யப்பட்ட அதிகமான சந்தோஷத்தினாலேயும் நிஷ்பிரயோஜனமான பரிகாச வசனத்தினாலேயும் என்ன பிரயோஜனமென்று சொல்லிய வசனங்களைக் கேட்டுச் சரக்காலத்துச் சந்திரனைப்போல முகச் சோபையை உடைய ருக்மிணியானவள் இவள் சத்யபாமையென்று பிரதிநமஸ்காரம் செய்தாள்.

அப்பொழுது, இரண்டுபேர்களும் புஜன்வயங்களினால் ஆலிங்கனம் செய்தும் ஒருவர்க்கொருவருடைய சந்தோஷமான சமாசாரமான சுப வசனங்களை வசனித்தும், ஒருவர்க்கொருவர் ரூப செளந்தர்யங்களைப் பார்த்துத் திருப்தியடைந்து, சத்யபாமை, ருக்மிணிகளானவர்கள் தங்கள் தங்கள் கிருகத்தை அடைந்தார்கள்.

இந்தப்பிரகாரம் அடைந்து, செளக்கியமாக இராநின்ற காலத்துள், ஸ்ரீ ஹஸ்தினாபுரம் பட்டணத்து ராஜனாயும் குருபங்கத்தில் உத்பன்னமாய் இராநின்ற துர்யோதன மஹாராஜனால் அனுப்பப்பட்டிருக்கிற தூதனானவன் துவாரகாபுரத்தை அடைந்து, கிருஷ்ணருடைய பாதத்வயத்தை நமஸ்காரம் செய்த பிற்பாடு, கிருஷ்ணனால் கொடுக்கப்பட்ட ஆசனத்தில் சந்தோஷமான சித்தத்தை உடைத்தானவனாகி உட்கார்ந்து, லேக பத்திரிகையைக் கொடுக்க,

அப்போது, லேக பத்திரிக்கையினுடைய முத்திரிகையை உடைத்து, வாசிக்கின்ற விவரமானது,

லக்ஷ்மிதரமாயிருக்கும் ஹஸ்தினாபட்டணத்துக்கு ராஜனாயிருக்குற துரியோதனன், க்ஷேம காரியங்களுடன் கூடினவனாகிப், பிரீதியுடன் ஐஸ்வர்ய சமேதமாய் இராநின்ற துவாராவதிப் பட்டணத்திலே, ராஜ்ய பரிபாலணம் செய்யப்பட்டவராயும், சத்ரு ராஜாக்களுடைய மஸ்தகங்களை இராநின்ற கிரீடங்களினாலே வணங்கப்பட்ட பாதத்வயத்தை உடைய கிருஷ்ணரே நமஸ்காரம் செய்து சந்தோஷத்தினின்றும் சொல்லப்பட்ட சமாச்சாரமாவது,

வாராய், கிருஷ்ணரே! வரப்போகாநின்ற நம்மிருவர்களுடைய புத்திர புத்திரிகள் விவாக விதியினாலே சிநேக பாவமானது செய்யவேண்டியதென்று எழுதிய லேகார்த்தங்களை அறிந்து, கிருஷ்ணரானவர் சந்தோஷமான சித்தத்துடையவராகி, தூதனுக்குத் தன்னுடைய வஸ்திராபரணங்களைக் கொடுத்தும் போஜனங்களினால் பரிபூரணத்தைச் செய்துவைத்துத் தனக்கு இஷ்டர்களாயிருக்கிற தூதர்களுடன் துரியோதன மகாராஜனுடைய தூதனை அனுப்பிவிட்டுத், தோஷ ரகிதமாய் இராநின்ற கிருஷ்ணரானவர், துவாராவதிப் பட்டணத்தில் சௌக்கியத்தினாலே செல்லாநின்ற காலங்களில், ருக்மணி மகாதேவியினுடைய அதிகமான ரூப், சௌந்தர்ய சாஸ்திரக்கலைகளுடைய குணங்களினால் அபஜயத்தை அடையப்பட்டவளாயிருக்குற சத்யபாமையானவள், அபிமான கர்வங்களினால் மனசிலே ருக்மிணிக்கி அபமானங்களைச் செய்யவேணுமென்று சிந்தித்தும், அதுகளுடைய உபாயங்கள் அகப்படாமல் அகோராத்ரபர்யந்தம் துக்கத்தை அடைந்துசெல்லாநின்ற சமயத்தில், துரியோதன மகாராஜனால் அனுப்பட்ட தூதனுடைய வசனங்களையும் அடைந்து, மனசிலே சந்தோஷத்தை அடைந்தாள்.

அது ஏனென்றால், வயசுகளினாலேயும், சரீரத்தினாலேயும் மூத்தவளாய் இருக்கிற எனக்கு சீக்கிரமாகப் புத்ரோத்பத்தி உண்டாகும், அதின்பிறகு, எனக்கு யௌவளாயும் நூதன யௌவனதியாயும் இராநின்ற ருக்மணிக்குப் புத்ரோத்பத்தி அடைவாளென்று சிந்தித்து, ருக்மணி தேவியினுடைய கர்வங்களைச் செய்கின்ற காரணத்தின்பொருட்டு, கிருஷ்ண பலதேவர்களுடைய சாட்சி மூலமாக பிரதிக்ஞை செய்யவேணுமென்று ஆலோசனையை அடைந்து, ருக்மணியினுடைய சமீபத்தில் தாதியை அனுப்ப, அந்தத் தாதியும் ருக்மணி மகாதேவியினுடைய சமீபத்தில் அடைந்து, வினைய பூர்வகமாக நமஸ்காரம் செய்து சொல்லுகிறாள்.

வாராய், ருக்மணி மகாதேவியே! என்பேரில் ஒரு தோஷமான குத்தங்களை நினைக்கவேண்டாம். சத்யபாமையினால் சொல்லப்பட்டிருக்குற ஒரு வசனத்தை என்னுடைய பாதமூலத்திலே சொல்லுகிறேன். அதாவது, உனக்குப் புண்யோதயத்தினின்றும் பிரதம புத்ரோத்சவமானது ஆகக்கடவதாகில், என்னுடைய தூதராயும் நீலவர்ணமாயும் இராநின்றும் தலையில் இராநின்ற மயிர்களை விவாக காலத்தில், உன் புத்ரனுடைய பாதமூலத்தில் குடுக்கிறேன், அல்லது எனக்குப் பிரதம புத்ரனுடைய விவாக மங்களோத்சவமானது உண்டாகும் பட்சத்தில் உன்னுடைய தலைமயிர்களை என் புத்ரனுடைய பாதமூலத்தில் குடுக்கவேண்டியதென்று சொல்லப்பட்ட தாதியினுடைய வசனத்தைக் கேட்டு ருக்மணியானவள் சிரித்துச் சொல்லுகிறதாவது,

எனக்கு மூத்தவளாயிருக்கிற சத்யபாமையானவள் யாதொரு வசனம் சொல்லப்பட்டாளோ, அந்த வசனமானது எனக்கும் சத்யந்தான் என்று சொல்லி தாதியை அனுப்பினாள்.

அந்தத் தாதியும், போயி, ருக்மணியினால் சொல்லப்பட்ட சத்யமான வசனத்தை சொல்ல சத்யபாமையும் அங்கீகாரத்தை அடைந்தாளென்று சந்தோஷத்தை அடைந்தபிற்பாடு, சத்யபாமை ருக்மணியான இரண்டு பேர்களும் மறுபடி ராஜசபையை அடைந்து, சகல சபா ஜனங்களோடு உட்டோலகமாய் இராநின்ற கிருஷ்ண பலதேவர்களிடத்தில், இந்தப் பிரதிக்ஞா வசனங்களினால் சாஷி பூதமாகச்செய்து, அவர்களுடைய கிருகத்தை அடைந்து செல்லாநின்ற காலாவதாரணத்தில் ஒரு நாள், ராத்தி நாலாம் ஜாமத்தில் புஷ்பதூளிகாமத்தையின் பேரில் நித்திரை செய்யப்பட்ட ருக்மணியானவள் மோட்சகாமியான பிரத்யும்ன குமாரனுடைய ஜனனோத்வசத்தை அறிவிக்கப்பட்டிருக்கிற சுக சொப்பனங்களைச் சௌக்கியமாகக் கண்டாள்.

அதாவது, ஆகாசத்தில் இராநின்ற தேவ விதானத்திலிருந்து தன்னுடைய லீலா விநோதத்தினால் சௌக்கியமாகக் சஞ்சரிக்கப்பட்டவளாயும், ஐராவத யானையையும் சூர்யனையும் அக்னி குண்டத்தையும் சந்திரனையும் சமுத்திரத்தைப் பொங்கினது போலவும், இது முதலான சொப்னங்களைக் கண்டு ருக்மிணி மகாதேவியானவள், நித்திரை தெளிந்து, ஸ்நான சுத்தனாகி, வஸ்திராபரணம் அணிந்து, பஞ்ச பரதேசிகளுடைய நமஸ்கார வந்தனாப்ஸதவனங்களைச் செய்த பிற்பாடு, கிருஷ்ணருடைய சமீபத்தை அடைந்து, நமஸ்காரத்துடன் பிரான காந்தனுக்குச் சொப்னங்கள் வினவ, ருக்மிணி மகாதேவிக்கு உயிர்தோழனா இருக்கிற கிருஷ்ணரும், விசேஷ ஞானத்தினால் சொப்னங்களை அறிந்து,

வாராய், மகாதேவியே! சரமதேவதாசியும் சுபலட்சணமுள்ள புத்ரனானவன் கர்வத்தை அடைந்து, அச்யுத கல்பத்தில் இராநின்ற மதுசரன் என்கிற தேவேந்திரனை பூர்வோதயப் புண்யத்தினின்றும் கர்ப்பத்தை அடைந்து இருக்க, அன்று இராத்திரியிலேயே சத்யபாமையும் பஞ்சனை மெத்தையின் பேரில் நித்திரை செய்யப்பட்ட நாலாஞ்சாமத்தில், இதே பிரகாரமாகவே சுப சொப்னங்களைப் பிரானகாந்தனுக்கு அறிவித்து, அவற்றின் பலங்களைக்கேட்டு சந்தோஷத்தை அடைந்து, தேவலோகத்திலிருந்து வரப்பட்ட சமுத்திரத்தையுடைய ஒரு தேவனைச் சத்யபாமையானவள் கர்ப்பத்திலே தரித்தாள்.

இந்தப் பிரகாரம் சத்யபாமையும் ருக்மிணியும் புத்ரர்களுடைய கர்ப்பத்தினின்றும் களங்கரஹிதமான நேத்ரங்களையும், வெண்மயமான சரீரத்தையும் ஸ்தனபாரங்களுடைய அருத்திலே அஞ்சன மயமான கிருஷ்ண வர்ணத்தையும் ஆலஸ்யமயமான தளர்ந்த நடையினையும் ஸ்தூல தரமான உதரத்தை உடையதாய் விகாரத்தை அடைந்து, சுப நிதி, சுப கிருகயோகங்களுடைய உதயத்தில் ருக்மிணிதேவியானவள், லக்ஷ்மிகரமான புத்ரனைப் பிரசவித்தாள்.

அப்போது, தூளிரஹிதமான ஆகாசங்களும் தசதிக்குகளங்கரஹிதமாயும், இந்தப் பிரகாரம் லோகத்திலே புண்யவந்தனுடைய ஜனனத்தில் அநேகப் பிரகாரமான சுபக்குறிகள் உண்டாச்சுதுகள்.

அப்பொழுது, பந்துக்களுடன் கூடியிராநின்ற ருக்மிணிதேவியானவள் பாலசூர்யனுக்குச் சத்ருசமாயிருக்கிற புத்ரனைப்பார்த்து, அதிகமான சந்தோஷிங்களுடன் கூடியிராநின்ற யிருக்குற புத்ரனைப் பார்த்து அதிகமான சந்தோஷத்தை அடைந்து கிருஷ்ணரைக் குறித்துப் புக்ரோத்பத்திகளுடைய குறிகளைச் சொல்லப்பட்டிருக்கிற ஒரு தூதனை அனுப்பினாள். அந்தத் தூதனும் கிருஷ்ணருடைய கிருகத்தை அடைந்தபொழுது நித்திரை செய்யப்பட்டிருக்கிற கிருஷ்ணரைப்பார்த்து, மெல்ல மெல்லப் பாதத்தினுடைய சமீபத்தில் பிரவேசித்தான்.

அதின்பிற்பாடு, சத்யபாமையினுடைய தூதனானவன் கிருஷ்ணருடைய சிரசின் சமீபத்திலே பிரவேசித்தான். பின்பு, கிருஷ்ணரானவர்க்ஷணத்தினின்றும் நித்திரை தெளிந்து பிரதமத்தில் பாதத்தினுடைய சமீபத்தில் அடைந்து இருக்கிற மனுஷ்யனாலே, வாராய் ராஜனே, ருக்மிணி தேவியினுடைய கர்ப்பத்தினின்றும் உத்பன்னமாயிராநின்ற புத்ரோத்பத்தியினாலே தீர்க்க காலம் விருத்தியடைந்து, ராஜ்ய பரிபாலனம் செய்யவேண்டியதென்று சொல்லப்பட்ட சுகவசனங்களைக் கேட்டு சந்தோஷத்தை அடையப்பட்ட கிருஷ்ணரானவர் தன்னுடைய புத்திரனுடைய ஜனனத்தை அறிவிக்கப்பட்டிருக்கிற தூதன் பொருட்டு, ராஜனுக்கு யோக்யமருமாதி

பூஷணங்களைவிட்டு இதரமான வஸ்திராபரண திரவியங்களைக் குடுத்து, அனுப்பினபின்பு, கிருஷ்ணரானவர், வணங்கப்பட்ட சேவக ஜனங்களைப் பார்த்து, எங்களாத்தும பந்துக்களுடனே சிறைச்சாலையில் இராநின்ற சமூகத்தை விடவேண்டியதென்று பட்டணத்திலே தோரணத்வஜாதிகளினால் அலங்கரித்து, சதுர்த்திலிராநின்ற கோட்டைச்சுவர் கோபுரத்துவாரத்தில் ஆனந்த பேரிகை முழங்கவேண்டியதென்று பஞ்சபர மேஷ்டிகளுக்கு நர்த்தன வாத்யங்களுடன் சாஸ்திரோக்தப் பிரகாரம், பூஜாதி உத்சவங்களைச் செய்யவேண்டிய கிருஷ்ணருக்கு சேவகன் சமீபத்தில் இராநின்ற மனுஷ்யனாலே வந்தனாதி நமஸ்கார பூர்வகம்,

வாராய், ஸ்வாமியே! சத்யபாமை தேவியினுடைய உதரத்தினின்றும் உத்பன்னமான குமாரனாலே சௌக்யத்தை அடையவேண்டியதென்று சொல்லப்பட்ட சத்யபாமையினுடைய மனுஷ்யனுக்குச் சந்தோஷபூர்வகம் வஸ்திராபரண பூஷணங்களைக் கொடுத்து அனுப்பினார். சத்யபாமை ருக்மிணியினுடைய புத்ரோத்பத்தியினுடைய உத்சவத்தினாலே துவாரகாபுரியான விருஷயசுவாமி பரத சக்கரவர்த்திகளுடைய உத்பத்தியினாலே சோபையை அடைந்த அயோத்தியாபுரி பட்டணத்தைப் போல் அலங்காரமானது அதிகச் சுந்தரத்தை அடைந்து, மறுபடியும் கிருஷ்ணரானவர், பிரதான காந்தைகளுடைய புக்ரோத்பக்தியினால் ஆனந்தத்தை அடைந்து, சமஸ்தான யாசக ஜனங்களுக்கு வஸ்திராதி திரவிய விசேஷங்களைக் குடுத்தும், தன்னுடைய சமுத்ர விஜயாதி பந்து ஜனங்களுக்குச் சந்தோஷ காரணங்களைச் செய்து, வைத்தார்.

இந்தப் பிரகாரம் புத்ரோத்பத்தியினுடைய அலங்காராதி ஐஸ்வர்யங்களினால், கிருஷ்ணருக்குப் பஞ்சதிவசம் அடைந்துள்ளளவில், வரப்போக நின்ற ஷஷ்டம தினத்தில் உதயமாகாநின்ற சூர்யனானவன்,

பிரத்யும்ன குமாரனை அபகரித்துக்கொண்டு போகப்பட்ட சத்ருவைப்பார்க்கச் சகியாதவன் போல, ஹஸ்தாசல பர்வதத்தை அடைந்து, மறைந்துவிட்டான்.

அன்றைய ராத்திரியில் பிளக்கப்பட்ட அஞ்சன கிரிக்குச் சமானமாயிருக்குற அந்தகாரமானது மூடியுள்ளளவில் பூமியும் ஆகாசமும் தசதிக் பர்வதங்களும் மேடுபள்ளமும், செடிப்புதர்களும், நதிகளும், இதுமுதலானதுகள் ஒன்றும் தெரியாமல் இராநின்ற சமயத்தில், ருக்மிணியானவள், புத்திரனுக்கு விதிக்கிரமத்தின்றும் ரஷண முதலான விதியினால் நித்திரை செய்வித்துத் தானும் துதரமான படுக்கையில் நித்திரை செய்தாள்.

இந்த அவசரத்தில் புத்திரனுடைய பூர்வ பவத்தில் மதுராஜனாகப் பிறத்தினாலே ஸ்வீகரிக்கப்பட்ட ஸ்திரீகளுடைய விரக தாபத்தினாலே துக்கத்தை அடையப்பட்ட கனகரதன் என்குற ராஜனானவன்

ஜினமதத்துக்கு விரோதமாயிராநின்ற மித்யாசாஸ்திரோபதேசத்தினால் பஞ்சாக்னி தபசு செய்து, சரீரத்தைவிட்டு அசுரதேவனாக அடைந்துசெல்லாநின்ற காலத்தில், அந்த அசுரனானவன் ஆகாசமார்க்கத்தினால் ருக்மணியினுடைய கிருகத்தின் பேரில் வந்தவனுடைய விமானமானது கமனரஹிதத்தினால் ரதலிதமாக நிற்க, அப்போது, கதிநிவாரண காரணமாயிருக்கிற பாலகனுடைய பூர்வபவவைரங்களை அவதிக்ஞானத்தால் அறிந்து, தனக்கு உச்ச குருவாயிருக்கிற பாலகனைக் கொல்லுவேனென்று கோபத்தை அடைந்துவந்தவன், ருக்மிணி மகாதேவியினுடைய கிருகத்தை சூழப்பட்ட கூர்மையான ஆயுதங்களைத் தரிக்கப்பட்ட 1. படர்களைப் பார்த்து, கொஞ்சம் பயத்தை அடைந்தான்.

பின்பு, படசமூகங்களைச் சீக்கிரமாக மந்திரோபதேசத்தினால் மயக்கங்களைச் செய்து, பிரதமத்தில் பிறக்கப்பட்ட ருக்மிணி மகாதேவியினுடைய பாலகனைச் சுவீகரிக்கப்பட்ட ஜ்வலனதூமசிகன் என்கிற அசுரனானவன் தூக்கிக்கொண்டு ஆகாசத்தில் அடைந்து, இராநின்ற விமானத்தின்மிசை வைத்துக்கொண்டு பகு தூரங்கள் போயி, பாலகனைப்பார்த்துச் சிந்திக்கப்பட்ட அசுரனானவன் பூர்வபசவிவரத்தினின்றும் சிரிக்கப்பட்டவனாயும் குரூரமான வார்த்தைகளினால் பேசப்பட்டவனாயும் பயங்கரமான நேத்ரப்பார்வையினால் புருவத்தை நெரித்து, பல்லுகளைக் கடிக்கப்பட்டவனாயும் செய்குறதுக்கு அருமையாயிருக்குற பொல்லாங்கான கார்யங்களைச் செய்யவேணுமென்றும் அஞ்ஞானியாய இராநின்ற இந்தச் சத்ருவைக் கட்கத்தினால் கொல்லுவேனென்று இவன் கிள்ளப்பட்டபில்லுக்குச் சத்ருசமில்லை என்பதும் நினைத்த வார்த்தைகளில் தீஷணமாயிருக்குற நவங்களினாலே காயங்களைச் செய்யட்டுமா அல்லது சமுத்திரத்தினுடைய வடவாக்னியிலே போடட்டுமா, பாறாங்கல்லுகளினாலே மறைக்கட்டுமா, அல்லது ராட்சதர்களுக்குப் பலியாகக் கொடுக்கட்டுமா, என்று இதுமுதலானதுகளினாலே கேட்டும், சிந்தித்தும் புத்ரனுடைய புண்யோதயத்தினால் கருங்காலி விருக்ஷங்களினால் சூழ்ந்து இராநின்ற ஆரண்யத்தினுடைய மத்தியில் தக்ஷகபர்வத்தின்பேரில் பிரகாசியாநின்ற குகையினுடைய 2.ரந்திரத்திலே புத்ரனை வைத்து, அதன்பிறகு, புத்ரனுடைய ஒருமுழப் பிரமாணத்திலே ஒரு கல்பாறையினால் மூடிவிட்டு, அசுரனானவன் தன்னுடைய ஸ்தானத்தைக் குறித்துப் போய்விட்டான்.

---

1. படர் - வீரர்
2. ரந்திரம் - ஓட்டை.

பிறகு, பாலகனான சிசுவானது பூர்வபவத்திலே தன்னாலே செய்யப்பட்ட பாவங்களாகுற விருக்ஷங்களுடைய பலத்தை அடைந்தான். அந்தப் பூர்வபவத்திலே தன்னாலே அனுஷ்டிக்கப்பட்டிருக்கிற பவித்ரமான ஜின தபசுனாலே சர்மதேகத்தை அடையப்பட்டதினால், அசுரனானவன் கொல்லாமல் போய் விட்டான்.

அது ஏனென்றால், புண்யவந்தர்களுக்குச் சத்ருக்கள் மித்ரத்வத்தை அடையாநின்றார்கள். இந்தப்பிரகாரம் புத்ரனானவன் இருந்துள்ளளவில், கோபிஷ்டியாயும் சத்ருவாயும் இராநின்ற அசுரனாலே பாலகன் உன்னை உபத்திரவம் செய்வானே என்று சிந்தித்து, சூர்யனானவன் அந்தப்புத்ரனுடைய் இருப்பிடத்தைக் காட்டுகைக்கு உதயாசல பர்வதத்தின்பேரில் உதயமாகினான்.

அந்த விஜயார்யபர்வதத்தினுடைய தக்ஷிண ஸ்ரேணியில் வித்யாதரர்களுடைய மாடமாளிகை, கூடகோபுரங்களினாலே அலங்கிருதமாயும் பூமியிலே மேககூடமென்றும், பிரசித்தமான பட்டணமானது இராநின்றது. அந்த மேககூடபுரத்துக்குக் காளசம்பரன் என்று நாமதேயத்தை உடைய ராஜனானவன் காஞ்சனமாலை என்கிற தேவியோடே விமான ரூடனாயி அநேக வித்யாதர ராஜாக்களுடன் தன் பட்டணத்தினின்றும் புறப்பட்டுக் கங்காநதியினுடைய மணல் குன்றிலேயும் வாழைகளினாலே அலங்கிருதமாயிருக்கிற உத்யாவனத்திலேயும் ஹிமவாபர்வதத்திலேயும் அதிக உன்னதமாயும் இராநின்ற மகம்மேரு பர்வதத்தினுடைய தாழ்வரையில் சோபிக்கப்பட்ட பத்ரசால வனாதிகளிலேயும் தன்னுடைய தேவியுடன் காம சௌக்யத்தை அனுபவித்து வருகின்றவன் பாலகனாலே அலங்கிருதமாயிருக்கிற தக்ஷக பர்வதோபரியில் வந்தவன் சர்மதேகதாரியா இருக்குற சிசுவினுடைய புண்யோதயத்தினால் ஆகாசத்தில் இராநின்ற வித்யாதர ராஜனுடைய விமானமானது கமனம் தடையிட்டு, நிற்க அப்போது காளசம்பர ராஜனானவன் மனசிலே ஆச்சரியத்தை அடைந்து பூமியிலே நிர்மலமான கேவலஞானத்துக்கு நிதியாய் இராநின்ற முனீஸ்வரரானவர் இராநின்றவரோ என்றும், அல்லது துர்புத்தியை உடைய ஒரு சத்ருவானவன் இராநின்றவனோ அல்லது ஜினேஸ்வரருடைய சைன்யாலயம் இராநின்றதோ என்றும், அல்லது சர்மதேகாதாரியான மோக்ஷமாகி இராநின்றாரோ என்றும் இது முதலான ஆலோசனையைச் செய்து ராஜனானவன் ஆகாசத்தில் நின்றும் இழிந்தும் தக்ஷக பர்வதத்தினுடைய குகையிலே பாலகனுடைய முகத்தினின்றும் 1. வினிர்கதமாயின உச்சாலத்தினுடைய வாயுவினால் எழும்புவதும் அமுங்குவதுமாயிருக்கும் சிலையைப் பார்த்து, பரிவார ஜனங்களினால் அதிக கனதரமாயிருக்கிற சிலையைத் தள்ளிவிட்டு, பூதலத்திலே காலசம்பரராஜ்னானவன் படுத்திராநின்ற பாலகனுடைய வக்ருதரமான நீலவர்ணமுள்ள கூந்தல்களினாலே அலங்கரிக்கப்பட்ட சிரசையும்,

---

1. வினிர்கதம் - வெளியாதல்.

விகசியாநின்ற தாமரைப் புஷ்பத்தினுடைய இதழைப்போல தீர்க்கதரமான நேத்ரத்வயத்தையும் தாமரைக் கிழங்கு சமானமாயிருக்கிற ஹஸ்த புஜத்தையும் அசைக்கப்பட்ட ஹஸ்த பாதத்தையும், முகத்தினுடைய குஞ்சிரிப்புள்ள சத்ருவை ஜயிக்கப்பட்ட சர்மதேகத்தையும், சமஸ்தமான பிராணிகளுடைய மனசையும் நேத்ரங்களையும் கவரச்செய்யப்பட்ட லக்ஷணங்களினாலே லாஞ்சனத்தையுடைய சரீர காந்தியையும் பார்த்து, திருப்தியடைந்து, கேசரராஜனானவன், தன்னுடைய ஹஸ்தத்தினால் பாலகனைத் தூக்கி மார்போடணைத்து, லக்ஷண சௌக்கியத்தைப் பார்த்துத் திருப்தியடைந்து தன்னுடைய பிராண காந்தையைப் பார்த்து,

வாராய் தேவி! உனக்கு, நெடுங்காலம் புத்திரோத்பத்தி இல்லாததினால், புத்திரனுடைய பிரீதியினாலே வர்தியாய் நோகிறாய்! ஆகையால், இப்பொழுது நான் சுபலக்ஷணங்களையுடைய இந்தப் புத்திரனை உனக்குத் தருகிறேன். நீயானவள் ஹஸ்தத்தில் கிருகிக்க கடவதென்று சொல்லப்பட்ட புருஷனுடைய வசனத்தைக் கேட்டுக் காஞ்சனமாலையானவள், ஹஸ்தத்தை நீட்டாமல் திரும்பின முகத்தைப் பார்த்துக் காலசம்பரராஜனானவன், என்ன காரணமென்று கேட்க, அப்போழுது தேவியானவள்.

வாராய், ராஜனே! உனக்குப் பஞ்சசதப் புத்திரர்கள் இராநின்றார்கள். அவர்களுடைய ஹஸ்த பாதங்களினாலே அடிக்கிறதுக்கு விஷயமா இருக்கிற இந்தப்பாலகனானவன் , எனக்கு மனோ துக்கத்தைக் கொடுக்கப்பட்டவன், மேலும், பூர்வபவத்திலே என்னாலே புண்யமானது செய்துஇருக்கும் பக்ஷத்தில், இந்தச் சிசுவானது என்னுடைய உதிரத்திலே பிரவேசிப்பானில்லையா, என்ன காரணத்தினின்றும் வனப்பிரதேசத்தில் இராநின்றனன். வாராய், பிராண காந்தையே! இந்தப் பாலகனானவன் இவ்விடத்திலே, இராநின்றானென்று சொல்லி, சோக்கிராந்தவளாகி, ஸ்தனபார பர்யந்தம் எழுதப்பட்ட கண்ணீர் ஜலத்தை உடைய தன் தேவியைப்பார்த்து, ராஜனானவன், "துக்கத்தை அடைய வேண்டாம், வாராய், பிராண காந்தையே உன்னுடைய சாட்சியாக யௌவவராக்ய பாரத்தை என்னாலே, உன்னுடைய புத்திரனுக்குக் கொடுத்தேனென்று சொல்லிய ராஜனுடைய வசனத்தைக் கேட்டு, காஞ்சனமாலையானவள், சந்தோஷத்துடன் புத்திரனைச் சுவீகரித்தாள்.

பிறகு, காளசம்பர ராஜனானவன், தன் தேவியின் புத்திரனை, விமானத்தில் வைத்துக்கொண்டு அநேக வித்யாதர ராஜாக்களுடனே பரிவிரதனாகி, ஆனந்த பேரி சப்தத்துடன், தன் பட்டணத்தை அடைந்து பரிவார ஜனங்களுக்குப் புத்ரோத்சவங்களைச் செய்யும்படி ஆக்ஞாயித்துப் பிறகு பட்டணத்திலுண்டான வித்யாதர ராஜஜனங்களுக்கு என்னுடைய தேவியான காஞ்சனமாலையானவள் கூடகர்ப்பத்தினால் வனப்பிரதேசத்தில் புத்திரனைப் பெற்றுப் பிரசுதிகாஸ்ரமத்தில் பிரவேசித்தாளென்று கோஷண சப்தத்தை உடைய பேரியை அறிவித்து, ஏவல் ஜனங்களுக்குச் சிறைச்சாலையில் இராநின்ற ஜனங்களை

விடும்படியாயும், யாசக ஜனங்களுக்கு சொர்ணாதி தானங்களினாலே சந்தோஷம் செய்யும்படி, பாண்டாகாரிக்கு அறிவித்தும் தானப் பரிவார ஜனங்களுடன் கூடி, ஜின சைன்யாலயத்தை அடைந்து, பஞ்ச பரமேஷ்டிகளுக்கு அபிஷேக பூர்வகமாகப் புத்ரனுக்குப் பிரத்யும்ன குமாரனென்று நாமகரணம் செய்து, காளசம்பரராஜனானவன் அரமனையைப் புகுந்து, ராஜ்ய பரிபாலனம் செய்து வர,

காஞ்சனமாலைனாலே, வஸ்திராதி பூஷணங்களினால் அலங்கிருதனாயிருக்குற பிரத்யும்னகுமாரன் வனப்பிரதேசத்தினின்றும் போகி ஐஸ்வரியத்துக்கு இருப்பிடமாயும், தேவர்களுடைய கிருகத்துக்குச் சமானமாயிருக்குற காளசம்பர ராஜனுடைய கிருகத்தில் விருத்தியடைந்துள்ள அளவில்,

இப்பால், அசுரனாலே புத்ரனைச் சுவீகரித்து ஆகாச கமனத்தினால் போனபின்பு, லோகத்தில் இராநின்ற சகல பிராணிகளுக்கு தைன்யமான துக்கங்களுக்குக் காரணமாயிருக்குற ருக்மிணி மகாதேவியினுடைய கதையைச் சொல்லுகிறேன்.

அது எப்படியெனில், ராஜஹம்ச பக்ஷியினுடைய சப்தத்தைப் போல் கண்டத்வனியை உடைய ருக்மணி மகாதேவியானவள், நித்திரை தெளிந்து, பிறகு படுக்கையினின்று எழுந்து, புத்திரன் இல்லாமலிருக்கிற பாலகனுடைய படுக்கையைப் பார்த்து, பய சலிதத்தை உடையவளாகத் தோழிகளுடைய பரிவார ஜனங்களைக் குறித்துச் சொல்லுகுறதாவது,

புத்திரனானவன் என்னைவிட்டு எவ்விடத்தில் இராநின்றானென்றும், இது தேவனாலே செய்யப்பட்ட மாய்கையோ என்றும், அல்லது இந்திர ஜாலமோ என்றும், இல்லை சொப்னமோ என்றும், புனரந்தகாரத்தினுடைய ராத்ரியினாலே நேத்ரத்வயத்துக்கு ஏற்குமோ என்றும் அல்லது என்னுடைய சித்தமானது பூமண விகாரத்தை அடைந்துதோ என்றும், அழப்பட்டவளாயும், கண் ஜலங்களினால் சொரியப்பட்ட ஸ்தன பாரத்தை உடையவளாயும், பூர்வபவ வைரத்தை உடைய ஒரு அசுரனாலே எடுத்துக்கொண்டு போகப்பட்டானோ என்றும், அல்லது, தாதிகளிட ஹஸ்தங்களினால் 1. பங்திபாச்சலாகப் புத்ரனானவன் இராநின்றானோ என்றும், அல்லது தாதிகளுடைய ஸ்தனமாகுற ஷீ ரபானத்திலே 2. ஆசாக்ராந்தனாகி இராநின்றானோ என்றும், இந்தப் பிரகாரமாக விகல்ப சமூகத்தை அடைந்தபிறகு, மூச்சையினால் பூமியிலே விழுந்து; அவர்பட்ட கேசஹாரத்தை உடையவளாயும் அத்யந்த பயங்கரமான ஹஸ்தங்களினால்,

---

1. பங்தி - வரிசை
2. ஆசாக்ராந்தன் - ஆசை கொண்டவன்.

பூமியை அடித்து, ஜீவனை விட்டவள்போல் சோகத்தினால் மூர்ச்சை அடைந்து, பூமியில் படுத்து இராநின்ற ருக்மணி சோகத்தைப் பார்த்துப் பரிஜனங்கள் சீதோபசாரங்களினாலேயும் பரம்பரை வரிசையினால் மரணத்தை அடையப்பட்டிருக்கிற புண்யவந்தர்களுடைய கதைகளினாலேயும், ஒரு தாதியினால் புத்ரனானவன் ஓரிடத்தில் இருப்பானென்றும், சொல்லிய வசனத்தினால் மூர்ச்சை தெளிந்த பிறகு, யெப்பகம் கேட்கப்பட்ட புத்திரனுடைய வர்ணனா கதைகளினால் மார்பில் ஹஸ்தங்களினால் அடித்து, துயரமான வசனங்களையுடைய அழுகுறதாவது, எப்படியெனில்,

சுந்தரமான கூந்தலை உடைய ஹா பாலகனே என்றும், சோபனமான நாசியை உடைய ஹாபாலகனே என்றும், பூர்ணச்சந்திரனுக்குச் சத்ருசமான முகப் பிம்பத்தை உடைய ஹாபாலகனே நீ எங்குளாயோ என்றும், தாமரை இதழுக்குச் சத்ருசமான ஹாபுத்ரனே, நீ என்னை விட்டிருக்கிறது நியாயமோ என்றும் மன்மதனுக்குச் சத்ருசமான ரூபத்தை உடைய ஹாபாலகனே என்றும், மனோக்யமான கர்ணான்னுவயத்தை உடைய ஹா பாலகனே என்றும், அத்யந்த சுந்தரமா இருக்கிற வலம்புரிச் சங்கத்தைச் சத்ருசமா இருக்கிற கண்டத்தை உடைய ஹா புத்ரனே என்றும், த்ருடதரமான புஜ மஸ்தகங்களை உடைய ஹாபாலகனே என்றும், சொல்லி மார்பிலும் முகத்திலும் அடித்துக்கொண்டு அழப்பட்ட ருக்மணி மகாதேவியினுடைய துயரமான சப்தத்தினால் புத்ரனில்லாமையா யிருக்கிற சங்கதியை, அந்தப்புர ஸ்திரீமார்களும் அறிந்து கூச்சலிடப்பட்ட "அய்யோ, அய்யோ" என்று சொல்லிய கோலாஹல சப்தங்களினால் பட்டணத்தில் இராநின்ற புருஷர்களும் ஸ்திரீகளும் அந்தப்புரத்தில் பிரவேசித்துப் புத்ரஹிதமான ருக்மணிதுயர முகத்தைப் பார்த்துத் தாங்களும் கண்ணீர்த் தாரைகளினால் ரோதனம் செய்தார்கள்.

அப்பொழுது, கிருஷ்ணரானவர், எப்போதும் கேள்விப்படாமலிருக்கிற பயங்கரமான ஆகஸ்மிகமுக கோலாகலத் தொனியைக் கேட்டுச் சமீபவர்த்திகளான மனுஷ்யர்களைக் குறித்து, இப்பொழுதும் அந்தப்புரத்திலே, "அய்யோ" என்று அழுகுறத்துக்குக் காரணம் என்னவென்று கேட்டார். அவ்விடத்தில் இராநின்ற சபாயோக்யமான ஒரு பெரியோனானவன், இந்தப்பிரகாரம் கேட்கப்பட்ட கிருஷ்ணருடைய சத்ருவை அடைந்து,ஹஸ்தத்தில் பெரம்பைப்பிடித்துக்கொண்டு, சீக்கிரமாகத் தயாமனசோடே கூடினவனாகி அந்தப்புரத்தில் பிரவேசித்துச் சமஸ்தமாயிருக்குற விருத்தாந்தத்தைக்கேட்டு திரும்பி வேகமாக நடையுடையவனாகி, கிருஷ்ணருடைய சமீபத்தில் வந்து, அத்யந்தம்துக்கமான மனசுடன் நமஸ்கரித்து, யதா விருத்தாந்தங்களைச் சொல்லி, நன்பிலகப்பட்ட இடிக்கி, சமானமா இருக்கிற அந்த மனுஷ்யனுடைய வசனத்தைக் கேட்டு,

---

1. கர்ணான்னுவயம் - கர்ணனின் வமிவம்.

அதிகமான துக்கஹாரத்தினாலே மூர்ச்சை அடையப்பட்ட கிருஷ்ணரானவர் ஸ்நேகவந்தர்களாயிருக்கிற சமீபவர்த்திகளினாலே செய்யப்பட்ட சீதோபசாரத்தினால் ஞானத்தை அடைந்தபின், புத்ரனுடைய குண கீர்த்தன புரஸ்ஸமான ரோதனத்தினால் சொல்லுகின்றதாவது,

ஹா பூஜ்யனான புத்ரனே என்றும், ஹா யது குலமாகுற சமுத்ரத்தை பிரதிசெய்யப்பட்ட பூர்ணச்சந்திரனே என்றும், ஹா சௌந்தர்ய அவயங்களை உடைய புத்ர என்றும், ஹா ராஜ ஹம்ச பட்சியைப்போல் த்வனியையுடைய புத்ரனே என்றும், ஹா பந்துக்களுடைய மனோசித்தமாகுற கமலத்திராநின்ற ராஜஹம்சமே என்றும், ஹா குணங்களுக்கு இருப்பிடமா இருக்குற புத்ரனே என்னை விட்டு எவிடத்தில் இராநின்றாயோ? என்று ஹஸ்தத்தைத் தட்டி, ரோதனம் செய்யப்பட்ட கிருஷ்ணரானவர், துக்கத்தை அடையப்பட்ட தங்களுடைய பாந்தவர்கள் கண்ணீர்களினால் சிரசை அசக்கியும், அநேகப்பிரகாரமான ரோதன வசனங்களினால் வருத்தத்தை அடையப்பட்டவராய்க்கொண்டு, பூமியில் பாதமார்க்கத்தினின்றும் பிராணகாந்தையான ருக்மிணி மகாதேவி சமீபத்தை அடைந்தார்.

சுந்தரமான முகத்தையுடைவளாயும் சஞ்சலதரமான நேத்ரத்துவத்தை உடையவளாயும் இராநின்ற ருக்மிணி மகாதேவியானவள், சமீபத்தில் வரப்பட்ட கிருஷ்ணரைப் பார்த்துச் சோகத்தினால் சூழப்பட்டவளாகி மூர்ச்சித்துப் பூமியில் விழுந்தாள்.

அது ஏனென்றால், லோகத்திலே பந்து ஜனங்களைப் பார்க்கப்பட்டுள்ளளவில் ஜனசமூகத்துக்கு இராநின்ற சுகதுக்கமானது, அதிகமான துக்கத்தை அடையாநின்றது அல்லவா? ஆகையால், கிருஷ்ணரானவர் தன்னுடைய ஹஸ்தங்களினால் மூர்ச்சை அடைந்திராநின்ற ருக்மிணி தேவியைத் தூக்கி உட்காரவைத்து, அத்தியந்தம் சீததரமான சந்திரனாதிரசங்களினாலேயும் தாளக் கிரந்தங்களுடைய வாதஸ்பர்சனோ தயத்தினாலேயும், மூர்ச்சை தெளிந்து, பிறகு ருக்மணி தேவியானவள் ஹஸ்தங்களினால் கிருஷ்ணரைத் தழுவிக்கொண்டு அத்யந்தம் காருண்யமயமான கண்டத்வனியினால் தசதிக்குகளும் பூர்ணதரத்தை அடையப்பட்டதாக ரோதனம் செய்தனள்.

இந்தப்பிரகாரம் காந்தப்பத்னிகளுடைய ரோதனத்தினால் சோகத்தினால் வருத்தத்தை அடையப்பட்டவராயும் அவரப்பட்ட கேசஹாரத்தை உடையவராயும் வாடப்பட்ட முகத்தை உடையவராயும் பிராணகாந்தையோடு துக்கத்தை அடையப்பட்டு இருக்குற கிருஷ்ணரைப்பார்த்து சாஸ்திரரோபதேச 1.படனத்தையுடைய பண்டிதனானவன், அநேகப்பெரியோர்களுடன் கூடிப்போயி...... வாராய் பூபதியே! லோகத்தில் பிரசித்தமானவர்களாயிராநின்ற விருஷப ஸ்வாமி

1.படனம் - படிப்பு

முதலான தீர்த்தங்கரர்களும் ஜெயிக்கப்பட்ட கேசராதி ராஜாக்களுடைய பண்டங்களுக்கு அதிபதியான பூதர்களாயிருந்த மதுசூதனன் முதலான பலதேவ வாசுதேவர்களும் ரத கஜ துரக பதாதிகளினால் ரக்ஷிக்கப்பட்டவர். இருந்தபோதிலும் யமராஜனுடைய தந்தங்களினால் இழுக்கப்பட்டு மரணத்தை அடைந்தார்கள்.

வாராய், உபேந்திரராஜனே! இந்தப்பிரகாரத்தை உடைய ராஜனுடைய பரிணாமத்தை அறிந்து, தாபகாரணமாயிருக்குற சோகத்தை விடவேண்டியதென்றும், லோகத்திலே ராஜாவாயிருக்கிற உன்னிடத்திலே துக்கக் கிலேசமானது இருந்துள்ளளவில், இதர ஜனங்கள் துக்கத்தை அடைகுற காலத்தில், தைர்ய வசனங்களைச் சொல்லுகுறதுக்கு ஹேது காரணம் ஒன்றுமில்லையென்று சொல்லியும் யது வம்சத்திலே உத்பன்னமான புத்ரனானவன், சௌபாக்யவந்தனாயும், ஹிதமான புஜபல பராக்கிரமத்தை உடையவனாயும், தீர்க்காயுஸ்யத்தை உடையவனாயும், இருக்கப்பட்டவர்கள் ஆகையால்,

வாராய், ராஜனே! உன்னுடைய புத்ரனானவன் இந்தப் பூமியிலே! ஓரிடத்திலே இராநின்றான். அந்தப் புத்ரனோடே கூட்டுறவானது காந்தாரத்திலடைந்து க்ஷேமகரனாயிருப்பாயென்று சொல்லி, போதிக்கப்பட்ட மந்திரியுடைய வசனத்தினால், சோகத்தைவிட்டு, கிருஷ்ணரானவர் அசையப்பட்ட கூந்தல்களினாலே சூழ்ந்திராநின்ற முகப் பிம்பத்தை உடைய பிராணகாந்தையான ருக்மணி தேவியைப் பார்த்துப் போதிக்கின்றனன்.

பெண்மானைப் போலே தீர்க்கமான நேத்ரத்வயத்தையுடைய, வாராய், பிராணகாந்தையே! அபகரிக்கப்பட்ட புத்ரனானவன் மரணத்தை அடையவில்லை என்றும், என்னுடைய அஞ்ஞான வசத்தினின்றும் பூர்வபவைர நிபந்தனையை உடைய ஒருவனாலே பாலகனானவன் ஸ்வீகரிக்கப்பட்டான்.

ஆனபடியில் அந்தப்புத்ரனை அதிகமான ஆஸாகிருஹத்திலாலே தேடிக்கொண்டு என்னுடைய மடிமிசையில் ஸ்தாபிக்கிறேன்.

ஆகையால், துக்கத்தைவிட்டு ஆகாராதி சௌந்தர்யங்களைச் செய்து சௌக்யத்தை அடைந்திருப்பாயென்று, தைர்ய வசனங்களைச் சொல்லியபின்பு, கிருஷ்ணரானவர் சூரர்படர்களை, அத்யந்தம் பயங்கரமான கூர்ம அஸ்ரத்தை உடைய குந்தலாதி ஆயுதங்களை, ஹஸ்தங்களில் தரிக்கப்பட்டவர்களாயும் பேதிக்குறதுக்குக் கூடாமயிருக்குற இருப்பு ஜிராக்களைத் தரிக்கப்பட்டவர்களாயும், அஸ்வாதி வாகனங்களில் ஏறப்பட்டவராயும், செய்வித்துத் தச திக்குகளிலும் அடைந்து, புத்ரனைத் தேடிக்கொண்டு வருகவேண்டியதென்று ஆக்ஞை செய்து அனுப்பினார்.

பிரசித்தமான வம்ச குலங்களினால் கர்விடர்களாயிருக்குற அனுப்பப்பட்ட படர்களானவர்கள் தச திக்குகளிலும் போகி, சமஸ்த தேசங்களில் இராநின்ற ராஜாக்களுடைய அந்தரங்க ஸ்தானபர்யந்தம் தேடி, புத்ரன் அகப்படாமல் திரும்பப்பட்வர்களாயும், காந்திஹீனமான முகச்சோபையை உடையவர்களாயும் துக்கங்களினால் வரும் தீனச் சித்தத்தை உடையவர்களாயும் வந்து, ஸ்வாமினுடைய பாதத்வயத்தை வினையபூர்வமாக நமஸ்கரித்து இராநின்றார்கள் என்றும், துவாரபாலகர்கள் கிருஷ்ணரைப் பார்த்து விண்ணப்பம் செய்தான்.

அதுன பிறபாடு, கிருஷ்ணரும், ருக்மணிதேவியும், சத்ருவினால் கொண்டுபோகப்பட்ட புத்ரனுடைய முகக்கமலத்தை நெனைக்கப்பட்டவர்களாகி, எவ்வளவு காலத்துக்குள் இராநின்றார்களோ, அவ்வளவு காலத்துக்குள்ளாகவே நாரதரானவர் சோகத்துடன் கூடின கிருஷ்ணருடைய ஆனந்த துந்துபி வாத்யங்களால் ரஹிதமா இருக்கிற துவாராவதிப்பட்டணத்தைப் பார்த்து, ககன ஸ்தலத்தினின்றும், பூதலத்தினின்றும் ஒரு மனுஷ்யனைக் கண்டு, சோபாலங்காரங்களினால் ரஹிதமா இருக்குற பட்டணத்துக்குக் காரணம் என்னதென்று கேட்க, அந்த மனுஷ்யனால் சகல விருத்தாந்தங்களையும் அறிந்து, அதிகமான சோகபாரத்தினால் பீடிக்கப்பட்ட சரீரத்தை உடையவராயும், குணதோஷ விவேகங்களினால் சித்தபிரமணத்தை உடையவராயும், சோகத்தினாலே வாடப்பட்ட முகத்தையுடையவராயும், இராநின்ற நாரதரானவர் அவ்விடத்தினின்றும் புறப்பட்டுக் கிருஷ்ணருடைய சமீபத்தையடைந்து, க்ஷணப்பொழுது புத்ரனுடைய துக்க வார்த்தைகளினால் ஒன்றுக்கொன்று ரோதனம் செய்யப்பட்ட....வாதங்களை உடைய ஞானத்தினாலேயும் அத்யந்தம் தீவிரதரமா இருக்கிற தன்னுடைய சோகத்தைத் தடையிட்டுக் கிருஷ்ணரைப் பார்த்துப் போதிக்கின்ற நாரதருடைய வசனமானது எப்படி மோகத்தினில் லோகத்தில் சமஸ்தமான ராகத்துவேஷ மோகாதிகளை விட்டிருக்கும் யாதொரு ஜின சமூகமானது, கிருகவாசனை விட்டு, வனத்தை அடைந்து தீட்சையைச் சுவீகரிக்கப்பட்டுதோ, அந்த ஜனந்தான் புண்யத்தை உடைய ஜனமானது, புத்ரனானவன் சத்ருவினால் ஸ்வீகரிக்கப்பட்டிருந்த போதிலும், புத்ரனுடைய வியோகத் துக்கத்தைப் பார்க்கப்பட்டதில்லை.

மேலும், வாராய், கிருஷ்ணரே! உன்னுடைய சம்பந்தமான அதிகத் துக்கத்தைப்பார்த்து, என்னுடைய ஆயுசானது மிகவும் நிஷ்பிரயோஜனமான பலத்தையுடையதாக இப்போது எண்ணுகிறேன்.

ஆகையால், நான் பந்துஜனத்தை நீக்கி, சம்பந்தமான 1. பரிக்கிரகாதி ஐஸ்வர்யத்தை விட்டு, அனுவிரதங்களைச் சுவீகரித்தும் சத்திய தரிசனத்தில் பரிசுத்தனாயிருந்தும் உன்னுடைய துக்கவசனத்தினாலே உண்டாயிருக்கிற ஸ்நேகமான துக்கத்தை உண்டு பண்ணாநின்றது, அதவா கர்மபந்தங்களுக்குக் காரணமாயும் இராநின்றது.

---

1. பரிக்கிரகம் - பொருள் சேர்த்தல்

மேலும், வாராய் கிருஷ்ணரே, உன்னுடைய துக்கத்தினின்றும் நிச்சயமான எனக்கு அதிகத் துக்கமானது அடையாநின்றது, அதுபோல் நீரானவர், தன்னுடைய துக்கத்தை விட்டுவிடவேண்டியது. இதுமுதலான உபதேசங்களினால், அந்தக் கிருஷ்ணருடைய துக்கநாசத்தைச் செய்துபிறகு அத்யந்தம் துக்கத்தை உடைய நாரதரானவர் லக்ஷ்மீதரமாயிருக்குற ருக்மணியினுடைய கிருகத்தை அடைந்து, சமீபத்தில் வராநின்று இருக்குற நாரதருடைய தர்சனத்தினின்றும் சொர்ணமயமாயிருக்கிற சிம்மாசனத்தில் புத்ரனுடைய துக்கச் சிந்தையினால் பிரலாபிக்கப்பட்டிருக்கிற ருக்மணி தேவியானவள், சீக்கிரத்தில் நின்று எழுந்திருந்து, அத்யந்தம் துக்கத்துடன் நாரதருடைய வாதத்தின்மேல் விழுந்து, வாராய் தந்தையே, என்னுடைய புத்ரனை, ஒருவனாலே சத்ருவ்யாஜத்தில் நின்றும் அபகரிக்கப்பட்ட பின்பு, துக்க சமுத்திரத்திலே விழுந்து இராநின்றானே என்று, அதிகமான சோகபாரத்தினாலே ரோதனம் செய்யப்பட்டு இருக்கிற ருக்மணியைப்பார்த்து, துக்க சம்பூர்ணனா இருக்கிற நாரதரானவர், தீர்க்கதரமான ஆலோசனையை அடைந்து, இந்தப் பிரகாரம் போதிக்கிறார்.

அது எப்படியென்றால், வாராய்! புத்ரியே! நீ எழுந்திரு. நீ துக்கத்தை அடையவேண்டாம். புத்தி உடையவர்கள் ஏமாந்திருக்கப்பட்டும், மரணத்தை அடையப்பட்டும் இருக்கிற புத்ரனைக்குறித்து, துக்கத்தை அடையமாட்டார்கள். ஆகையால், வாராய், புத்ரியே! பூமியில் ஒருக்காலும் உண்டாகாமலிருக்கிற புத்ரனுடைய விரஹகத்தினால் அடையப்பட்ட இந்தத் துக்கமானது, உனக்கு உண்டாச்சுதில்லை. சம்சாரப் பிராணிகளுக்கு அந்தப் புத்ர விரகதாபங்கள் சாதாணமாகவே இராநின்றது.

அப்படியிருக்க, ஒருவனால், கொண்டுபோகப்பட்டிருக்கிற புத்ரன் பேரில் அஸாதவேதநீத கர்மங்களுக்குக் காரணமாயிருக்கிற துக்கரோதனத்தையே நன்றுசெய்குறாய். சாஸ்திரக் கதைகளினாலே பாமண்டனம் முதலிலான அநேகப் புராண புருஷர்களாயிருக்கிற ராஜாக்கள் ஸ்மரிக்கப்பட்ட பூர்வ வைரங்களை உடைய அசுராதி மாயா சத்ரு சமூகங்களினாலே இருக்கிற அபகரிக்கப்பட்டவர்களாகி, மறுபடி பிரசஸ்தமான ஐஸ்வர்யங்களுடம் கூடித் தன்னுடைய கிருகத்தை அடைந்தார்கள்.

இந்தப்பிரகாரம் சொல்லப்பட்ட நாரதருடைய வசனத்தைக் கேட்டு, ருக்மணி தேவியானவள், சோகத்தை விட்டு, மறுபடி, நாரதரைப் பார்த்துச் சொல்லுகுறதாவது,

வாராய்! ஸ்வாமியே! உம்முடைய பாத தாமரைத் தூளியினாலே பவித்தரமானவளாய் இருக்கிற எனக்குத் தாயும் தந்தையுமாயும் இராநின்றவர் நீங்களே, வாராய், தந்தையே, என்னுடைய மனசானது புத்ரனுடைய குண சமூக ஸ்மரணையை அன்று சமயத்துக்குற் அடையாநின்றதோ, அந்தச் சமயத்துக்குள்ளே அத்யந்தம் சௌக்யத்தைச் செய்யப்பட்டிருக்கிற புத்ரனுடைய முகமானது, என்னுடைய அக்ரத்திலே

இராநின்றதுபோல், கிரீஷ்மகாலத்தில் மான் கூட்டமானது போல் காணலாகுற ஜலத்தை அத்யந்தம் தாகத்துடன் கூடின சித்தத்தினாலே, சிரசைத் தூக்கிப்பார்க்கப் படாநின்றேன் என்று சொல்லப்பட்ட ருக்மணியினுடைய வசனத்தைக் கேட்டு , நாரதராலே சொல்லுகுறதாவது,

வாராய், புத்ரியே! புத்ரனிடத்திலே உண்டாயிருக்கிற சோகத்தை விடவேண்டியதென்றும், புத்ரனைத் தேடி வருகுறேனென்றும் கார்யமில்லாமல் சமஸ்தபூமியைச் சஞ்சரிக்கப்பட்டிருக்குற என்னாலே, இப்போது உன்னுடைய புத்ரனைத் தேடிக்கொண்டு வருகுறதில் கஷ்டமோ? என்று சொல்லிய நாரதரைக் குறித்து, ருக்மணியானவள் சொல்லுகுறதாவது,

வாராய், ஸ்வாமியே! யாதொரு புத்ரவிஷயத்தில் சமஸ்த பூமண்டலத்திலே தேடப்பட்ட அநேகப் படர்களுடைய சமூகங்களினாலே சௌக்கியத்தினின்றும் என் புத்ரனுடைய இருப்பிடமான வார்த்தையானது, கேள்விப்பட இல்லை.

அப்படிக் கேள்விப்படாமலும், பார்க்கப்படாமலும் இருக்குற இந்தப் புத்ரனானவன் உம்மால் கொண்டுவருகிறேன் என்று சொல்லிய வார்த்தையானது, சேமவிருத்தியை அடையவேண்டியதென்று தைன்யரோதன முகத்தினால் யாசிக்கின்ற ருக்மணி மகாதேவியைப் பார்த்து, மறுபடி நாரதர் சொல்லுகுறதாவது,

வாராய், புத்திரியே! துஷ்டனாயிருக்கிற சத்ருவினால் கொண்டுபோகப்பட்ட உன்னுடைய புத்ரனை இருப்பிடத்தினின்றும் வரவழைத்து, உன்னுடைய ஹஸ்தத்தில் ஸ்தாபிக்கிற சாமர்த்தியமானது, இல்லையாகில் என்னுடைய வசனங்கள், நிஷ்பிரயோஜனம் ஆகும்.

அதுகாரணத்திநின்றும், வாராய், புத்ரியே! திருடதரமான என் வசனங்களை அங்கீகரித்து, துக்கத்தை விடவேண்டியது. இந்தப் பரததேசத்தில் கம்சரான மனுஷ்யருத்தமருக்கு அனுஜரான அதிமுக்தர் என்று நாமதேயத்தை உடைய யதீஸ்வரரானவர் ஞானத்துடன் உண்டானார்.

அவரும், திரிலோகத்தைக் கரதல நாமதேயத்தை உடைய யதீஸ்வரானவ மனப்பர்யய ஞானத்துடன் உண்டானார். சொல்லப்பட்ட மஹேஸ்வரரானவர் இருந்தார். அவரும் கர்ம நிர்மூலத்துடன் சித்த க்ஷேத்திரத்தை அடைந்துவிட்டார்.

நேமீஸ்வாமியானவர், 1.மதிக்ருதவைஞ் ஞானத்துடன் கூடி, நவராயிருந்தபோதிலும், பிரச்ன உத்தரங்களை வசனிக்கிறதுக்கு யோக்யமாக இராநின்றாரில்லை. ஆகையால், வாராய், புத்திரியே, சீக்கிரமாக

1. மதிகிருதம் - அறிவினாலாகிய

இவ்விடத்தினின்றும் புறப்பட்டுக் ககனமார்க்கத்துடன் போயி, பூர்வ விதேகச் சேத்திரச் சரித்திரத்தை அறிந்து, அவ்விடத்தினின்றும் மறுபடி உன் சமீபத்தில் வந்து, நிச்சயமாகப் புத்ரனுடைய வரலாற்றைச் சொல்லுறேன்.

அதுபர்யந்தம், பூஷணாலங்காராதி ஆகாராதிகளைச் செய்து இருக்கவேண்டியதென்று, ருக்மணிக்குப் போதித்துப் பிறகு, பிரசஸ்தமான ஆசிர்வாத வசனத்துடன் பருதூரமான ஆகாசமார்கத்தில் ஊர்த்வமுகங்களை உடைய புஜங்களினாலே பறக்கப்பட்ட நாரதனாவர், எவ்வளவு காலத்துக்குள் விமான கமனத்தை விதேகச் சேத்திராபிமுகமாகத் திருப்பினாரோ, அவ்வளவு காலத்துக்குள்ளே சமஸ்தமான புறஜனங்களுடைய நேத்ரங்களுக்கு அத்ருஷ்யமானவராகிப் போகப்பட்ட சமூகமான நாரதரானவர் மகாமேரு பர்வதத்தை அடைந்து, ஸ்நான அனுஷ்டாதி பஞ்சபரமேஷ்டிகளுடைய தர்சன, வந்தனாஸ்தவங்களைச் செய்தும், பத்ரசாலாதி சதுஷ்டய வனங்களில் இராநின்ற அர்ஹப்பிரதிபிம்பங்களை நமஸ்கரித்தும், தான் ஆகாசச் சாரண கமணத்துடன் கூடினவராயிருந்தபோதிலும் அந்தர 1. அக்ருத்திரிமச் சைத்யாலயங்களில் இராநின்ற சாரண முனீஸ்வரர்களை நமஸ்கரித்துப் பத்ரனாஸ்தவங்களை முடித்துக்கொண்டு, ககனமார்க்கத்துடன் சீக்ரமாக சமவசராணாதி வஸ்தவி உடைய நகரத்தை அடைந்தார்.

யாதொரு புண்டரீகமென்கிற பட்டணமானது எப்போதும் தேவர்களுடைய கிரீடங்களினாலே பிரகாசிக்கப்பட்ட பாதங்களையுடைய தீர்த்தங்கரர்களினாலேயும், ஷட்கண்ட பூமிகளுக்கு அதிபதிகளான சக்ரவர்த்திகளினாலேயும், மதுசூதனன் முதலான திரிகண்டாதிபதிகளினாலேயும் அலங்கரித்து இராநின்றதுகள். பட்டணத்துடைய அய்ஸ்வரங்களை வர்ணனை செய்குறதுக்கு என்னால் சாமர்த்தியமில்லை.

அப்படிக்கொத்த விசேஷ ஐஸ்வர்ய சோபைகளுடன் கூடியிராநின்ற புண்டரீக பட்டணத்தில் ருக்மணி மகாதேவியினுடைய கிருகத்தினின்றும் போகப்பட்டு இருக்கிற புத்ரனுடைய வரலாற்றை அறியவேணுமென்று பிரதிக்ஞாபூர்வமாக அடைந்து, இராநின்ற நாரதரானவர், பகுதூரத்தினின்றும், மனுஷ்யர்கள் என்ன, தேவர்கள் என்ன, இவர்களினாலே சூழ்ந்திராநின்ற சீமந்த பகவானுடைய சமவசரணத்தைப் பார்த்து, சந்தோஷத்தை அடையப்பட்டவரான நாரதரானவர், ஆகாசத்தினின்றும் இழிந்து சைந்தயப் பிராசாத முதலான ஏகாதசப் பூமிகளுடன் கூடியிராநின்று சமவகரண அப்யந்தரத்துள் பிரவேசித்து, கந்தகுடி மண்டபத்துக்கு அனந்த ஞானாத் யஷ்ட குணங்களினால் பிரகாசியா நின்ற சீமந்தர தீர்த்தங்கரரைப் பார்த்து, நமஸ்காராதி ஸ்தோத்ரங்களைச் செய்தார்.

---

1. அக்ருத்ரிமம் - செய்யக்கூடாததைச் செய்தல்

அது எப்படியெனில், வணங்கப்பட்ட சதுர்ணிகாமர தேவர்களுடைய மகுடாக்கிரத்தில் எழுந்திரா நின்ற பாதத்தாமரையுடையவராய், ஸ்வாமியே, உன் பொருட்டு நமஸ்காரம் மதம்பட்ட மன்மதனாகுற யானைக்குச் சிம்மத்தைப் போல் இராநின்றவராய், பகவந்தனே என்றும், பவ்யஜனங்களாகிற தாமரைச் சமூகத்தை மலர்ச்சி செய்யப்பட்ட சூரியனுக்கு சத்ருசமான,

வாராய் ஸ்வாமி என்றும், மோகநீதம் ஆகுற அந்தகாரச் சமூகத்தை நாசம்செய்யப்பட்ட சந்திரனுக்குச் சத்ருசமான, வாராய், ஸ்வாமியே, என்றும், சம்சாரமாகுற ஆரண்யத்தைத் தகிக்கப்பட்ட அக்னிக்குச் சத்ருசமானவனென்றும், சத்ய வசனத்தைக் கர்ப்பத்தே உடையவராய், ஸ்வாமியே உன் பொருட்டு, நமஸ்காரம்,

இதுமுதலான நமஸ்காரஸ்தோத்திர சகஸ்ரங்களைச் ஸ்துதி பண்ண, மனுஷ்ய கோஷ்டத்தை அடைந்திராநின்ற நாரதரைப் பார்த்து, ஷட்கண்ட சக்கரவர்த்தியானவர் ஒருக்காலும் பார்க்காமலா இருக்கிற மனுஷ்ய ரூபமான அந்த நாரதரைப் 1.புனஹ் புனஹப் பார்த்து, சிரசை அசக்கி, ஆச்சரியத்தை அடைந்த பின்பு, கணதரரைப் பார்த்து,

வாராய், ஸ்வாமியே! உங்களாலே நாலு கதிகள் சொல்லபட்டதுகள், அந்தக் கதிகளுக்குள்ளே இந்த மானுஷ்ய மூர்த்தியானவன், எந்தக் கதியினின்றும் உத்பன்னனாகி இவ்விடத்தில் வந்தவனென்றும் கேட்டார்.

அப்போது, கணதரரானவர் சொல்லுகிறார், வாராய், ராஜேந்திரனே, இந்தச் சம்புத்வீபப் பரதக்ஷேத்திரத்தில் உத்பன்னமான மனுஷ்யகதியினின்றும் உண்டானவன், அந்த மனுஷ்ய கதியிலே இந்த மனுஷ்யனானவன் புத்திவந்தரென்று சொன்னார்.

மறுபடி, வாராய் ஸ்வாமியே! மீறக்கூடாமலும் தாண்டக்கூடாமலும் இருக்கிற விதேகத் தேசாந்தரத்தைத் தாண்டி, இந்த மனுஷ்யனானவன் எந்தக்காரணத்தினின்றும் வந்தவன்? மேலும் என்ன கார்ய விசேஷத்தைக் குறித்து, எவனுடைய சமீபத்திலே வந்தவனென்று சக்ரவர்த்தியினாலே கேழ்க்கப்பட்ட பிரச்னையைக் குறித்து, கணதரரால் சொல்லுகுறதாவது,

இந்த முனியானவன் பரதக்ஷேத்திரத்தினின்றும் கிருஷ்ணபூபதிக்கு உத்பன்னமான புத்ரனுடைய ஸ்நேகானுபந்த வசத்தினால் தேடுகிறத்தின் பொருட்டு, இந்தப் பரததேசத்தைத் தாண்டிப், புத்ரனுடைய இருப்பிடமான வார்த்தையைக் கேட்கிறதற்கு இவ்விடத்திலே வந்தவனென்று சொன்னார்.

மறுபடி, சக்கரவர்த்தியானவர், ஸ்வாமியைக் குறித்துக் கேழ்க்குறதாவது,

---

1. புனஹ் புனஹ - மறுபடி மறுபடி

வாராய், ஸ்வாமியே, தங்களால் சொல்லப்பட்ட இந்தக் கிருஷ்ண பூபதியானவன் எப்படிக்கொத்தவன்? அவனுடைய தைர்யமானது எப்படிக்கொத்தது? அவனுடைய இருப்பிடமான பட்டணத்துடைய நாமதேயமானது என்ன? இவன் கோத்ரமானது என்னா? ஐந்நூறு வில்லு உன்னதத்தை உடையவராயும், பத்மநாபர் என்றும் பெயரை உடைய மகாசக்கரவர்த்தியானவர், பத்துவில்லு உன்னதத்தை உடைய அனுவிரததாரியாகிய நாரத மகாமுனியைத் தன்னுடைய ஹஸ்தத்தில் ஸ்தாபித்துப் பகுதூரம் உன்னதத்தில் தூக்கிக்கொண்டு, கணதரரைப் பார்த்துக் கிருஷ்ணபூபதியினுடைய புத்ரனானவன் எவ்விடத்திலிருக்கிறார்? அந்தப் புத்திரனானவன் எத்தனை வயசில் வருவான்? தன் ஹஸ்தத்திலிராநின்ற இந்த முனியினுடைய நாமதேயம் என்னா?

இப்படிக் கணதரஸ்வாமிகளை இந்தப் பிரகாரம் கேட்டார்.

கணதரஸ்வாமிகளானவர்கள் சக்கரவர்த்தியைப் பார்த்துச் சொல்லுகுறதாவது.

யாதவ வம்சத்திலே விசேஷமான ஐஸ்வர்யங்களுடன் கூடியிருக்கிற கிருஷ்ண பூபதிக்கும் ருக்மணி என்ற நாமதேயத்தை உடைய பிராணகாந்தைக்கும் புத்ரனானவன் உத்பன்னமானான்.

இந்தப் புத்ரனைப் பிறந்த ஆறாநாள் ராத்திரியில் சத்ருவினால் பூர்வபவ சம்பந்த வைரத்தை அறிந்து, புத்ரனைத் தூக்கிக்கொண்டு போகி, தக்ஷக பர்வதோபரியில் அடைவித்து, புத்ரன் மிசை ஒரு பாறையினால் மூடிவிட்டுப் போயினன்.

காளசம்பரனென்று நாமதேயத்தை உடைய வித்யாதர ராஜனானவன், தனது பத்னியுடன் கூடினவனாய், இந்தத் தக்ஷக பர்வதத்தை அடைந்து, பாலகனைப் பார்த்து, ஹஸ்தத்தினால் ஸ்வீகரித்துப் பட்டணத்தை அடைவித்துப் பாலச்சந்திரனைப் போல் சாஸ்திர, கலைகளினால் விருத்தியடைந்து, பிரத்யும்னன் என்று நாமதேயத்தினால் பூமியில் பிரசித்தனாகி விசேஷலாபங்களுடன் கூடினவனாகியும், வித்யாத்துவயத்தை அடைந்து, பதினாறாம் வயசை அடைந்தவனாகிப் பித்ருவினுடைய புரத்தை வருவான்.

இவன் வருகிறகாலத்தில், ருக்மணி மகாதேவிக்கு சுபச் சூச்சகங்களுண்டாகும். அதாவது, ருக்மணி மகாதேவியினுடைய கிருதோத்தியானத்தில் இராநின்ற வாபியானது விகசித்த தாமரைப் புஷ்பங்களுடன் ஜலபூரிதமாயும் அநேக விருட்சங்கள் அடிதொடங்கிச்

---

உன்னதத்தை - உயரத்தை

சிரசு பர்யந்தம் புஷ்பங்களினாலே சம்பூர்ணமாயும் அந்த வனத்தில் இராயிருக்கிற விருட்சங்களானதுகள் கட்டப்பட்ட இலைகளினாலேயும், ஒரு சமயத்தில் ஷட்காலங்களினாலேயும் உண்டாயிருக்கிற பலங்கள் சீக்ரமாக உண்டாகா நின்றதுகள்.

மேலும், அந்த வனத்தில் இராநின்ற ஊமைகள் நானாவிதமான வசனங்களுடன் பேசப்பட்டளாகியும், முடங்களான மனுஷ்யர்கள் சரளமான நடைகளை உடையவர்களாயும், குருடர்கள் பார்வையுடன் கூடின நேத்ரங்களை உடையவர்களாயும், மயில்கள் ஆனந்த நர்த்தனங்களினாலே இறக்கைகளை விரித்துக் கொண்டு கேகார வத்வனியுடன் கூடி ஆடாநின்றதுகள்.

வாராய், ராஜேந்திரனே, உன்னாலே உள்ளங்கையிலே அரித்துயிராநின்ற லோகத்திலே நாரதர் என்று நாமதேயத்தை உடையவனாயும் பூஜிக்கிறதுக்கு யோக்யமானவராயும் இருக்கிற இந்த முனியானவர் மோக்ஷமார்க்கத்தில் சமர்த்தனாயும் நவநாரதருக்குள் அத்யந்தம் உத்பன்னனாயும் அனுவிரததாரியாய் இராநின்றான்.

இவன் திரிகண்டாதிபதிகளுக்கு என்பதாயிருக்குற கிருஷ்ணபூபதி என்று நாமதேயத்தை உடைய வாசுதேவனுக்குச் சௌக்யத்தைச் செய்யவேணுமென்கிறத்தின் பொருட்டு, இவ்விடத்தில் வரப்பட்டவனென்று கணதர ஸ்வாமியினால் சொல்லப்பட்டது.

மறுபடி சக்ரவர்த்தியானவர் ஸ்வாமியை நமஸ்கரித்துச் சொல்லுகுறதாவது,

வாராய், ஸ்வாமியே, கம்பீரத்தரமான செய்கையுடைய கிருஷ்ண பூபதிக்கு உத்பன்னமான புத்ரனுடைய வைரகாரணத்தையும், ஜன்மாந்தரங்களான பூர்வபவங்களையும், சத்ருவுடைய பூர்வபவங்களையும், இவாளுடைய புண்ய பாவங்களையும் சொல்ல வேண்டியதென்று சக்ரவர்த்தியினால் கேழ்க்கப்பட்ட பிரச்னையைக் குறித்து ஸ்வாமியினால் சொல்லுகுறதாவது, அது எப்படியெனில்,

இந்த ஜம்பூத்வீபத்தில் அனந்த குணத்தையுடைய பரதக்ஷேத்திரத்தில் புண்யத்தைச் சம்பாதிக்கப்பட்ட ஜன சமூகங்களுக்கு இருப்பிடமாயும், லோகத்தில் பிரசித்தமாயிருக்கிற மகத தேசமானது இராநின்றது.

அந்த தேசத்தில் சாலிகிராமம் என்று நாமதேயத்தை உடைய கிராமத்தில், சோமதத்தன் என்று பெயரை உடைய பிராமணனுக்கும், அக்னிகலை என்னும் நாமதேயத்தை உடைய பத்னிக்கும் சமஸ்தவேத சாஸ்திரமாகுற சமூகத்துனுடைய கரையை அடைந்தவர்களாயிருக்குற தன் வம்ச குலங்களினால் லோகத்திலிராநின்ற சமஸ்த வஸ்துக்களைப் புல்லுக்குச் சமானமாக எண்ணப்பட்டவர்களாகியும் இருக்கிற அக்னிபூதி என்றும், வாயுபூதி என்றும் நாமதேயங்களை உடைய இரண்டு புத்ரர்கள் உண்டானார்கள்.

இவர்கள், எப்படிக்கொத்தவர்கள் மித்யாதிருஷ்டிகளாயும் பிராமண மந்திரத்தை ரக்ஷிக்கிறத்தின் பொருட்டு அஞ்ஞானி ஜனங்களைச் சேர்க்கப்பட்டவர்களாயும் மித்யா சாஸ்திரார்த்தங்களைக் கிரந்த ரூபங்களினால் பூர்த்திசெய்யப்பட்ட பரிணாமத்தை உடையவர்களாயும் இராநின்ற இந்த இரண்டு புத்ரர்கள் வாசு பூஜ்யத் தீர்த்தங்கரருடைய தீர்த்தச் சந்தான காலத்தில், சந்தோசச் சித்தத்தை உடையவர்களாயும் இருந்தார்கள்.

அந்தக் காலத்தில், மன்மதனை ஜயிக்கிறவர்களாயும், கம்பீரமான வசனத்தை உடைத்தானவராயும் மதிசுருதாவயிமனப் பர்யயஞ்ஞானமாகுற நேத்ரத்தை உடையவராயும் அணிமாதி அஷ்ட சித்திகளினாலேயும் கால யோகங்களினாலேயும் அடைந்து இராநின்ற முனிகணங்களாகுற சிஷ்யர்களுடன் கூடினவராயும், விசேஷ சாஸ்திர கதைகளினால் அலங்கிருதமானவராயும் நந்திவர்த்தன் என்னும் நாமதேயத்தை உடைய மகாமுனீஸ்வரானவர் சாலிக்கிராமத்தினுடைய பாஹ்யத்தில் இராநின்ற நந்தனவனோத்யானத்தை அடைந்து வன ரக்ஷகனுடைய உத்தரவைப் பெற்று சாஸ்திரோக்தப் பிரகாரம்.... பததோஷங்களை பிராயச்சித்த கிரியைகளினால் முடிந்து, அந்த வனத்துடைய மத்யத்தில் இராநின்ற அசோக விருட்சத்தின்கீழ் ஒரு பாறையின் மீதில் ஜபதபாத்யனுஷ்டானத்துடன் அலங்கிருதமா இருந்தார்.

அந்தச் சமயத்தில், மகாமுனீஸ்வரர்களுடைய பிரபாவத்தினால் ஆகஸ்மிகமாக ருதுகாலங்களில் உண்டான பழ புஷ்பத் தளிர்களினால் ஒருங்க ஒரு சமயத்தில் உண்டாயிருக்குற சோபைகளைப் பார்த்துவர ரக்ஷகனானவன் ஆச்சரியத்தை அடைந்து, மகாமுனீஸ்வரர் சமீபத்தை அடைந்து, பிரதட்சின பூர்வமாக ஸ்தோத்திரங்களை ஸ்துதித்தனன்.

அது எப்படியெனில் அனந்த குணங்களை உடையவராய், ஸ்வாமி என்றும் பரிகிருகங்களான கர்தம ரகிதமானவரென்றும், பாபங்களாகுற விருட்சத்துனுடைய வேரைப் பிடுங்கப்பட்டவர் என்றும், கர்வமாகிற கஜத்திற்குச் சிம்மத்தைப்போலவரென்றும், சத்ருவினுடைய சதுரங்கச் சேனையை ஜயிக்கப்பட்டவரென்றும், சாஸ்திரோக்கமான விரதங்களிலே எப்பொழுதும் பிரீதியை உடையவரென்றும், ஸ்துதித்தபின் அருகபரமேஸ்வரனுடைய பாதமாகுற தாமரைப் புஷ்பத்தினால் வண்டுபோலச் சாலிக்கிராமத்தில் இராநின்ற ஜனசமூகமானது, வன ரக்ஷகரால் முனீஸ்வரருடைய வரவை அறிந்து, வந்தனாஸ்தோத்திரங்களைச் செய்குறதுக்கு வந்திராநின்ற முனீஸ்வரருடைய சமீபத்திலடைந்து, வினயபூர்வகமாகப் பிரதட்சிணம் செய்து இராநின்ற பவ்யஜனங்களைக் குறித்து ஷட்திரவிய பஞ்சாஸ்திகாய சப்த தத்துவ நவ பதார்த்தங்களையும் லோகாலோகச் சொரூபங்களையும்,சிராவக தர்மங்களையும், யதி தர்மங்களையும் உபதேசித்தார்.

இப்படிபட்ட தர்மோபதேசங்களைக் கேழ்க்குறதுக்குப் போகுறதும் வருகுறதும் இருக்குற ஜனத்தைப் பார்த்து, கர்விஷ்டமாயிருக்குற பிராமணப் புத்திரர்களினால் வஸ்திராலங்காராதி அர்ச்சனா திரவியங்களும் கூடின இந்த ஜனமானது, எங்கே போகாநின்றதுகள்? என்று கேட்டார்கள்.

இப்படிக் கேழ்க்கப்பட்ட பிராமண புத்ரர்களுடைய வசனத்தைக் கேட்ட, ஒரு பவ்யனால் சொல்லுகுறது எப்படியெனில், சமஸ்த சாஸ்திரங்களாகுற சமுத்திரத்தினுடைய கரையை அடைந்தவராயும் சத்புருஷர்களுக்குச் சேவிக்கிறதுக்கு யோக்யமானவராயும், உபசமமாகுற முனியை உடையவராயும், நானாவிதமாகுற ருத்திகளுடன் கூடினவரராயும், அனேக முனீஸ்வரர்களுக்கு யஜமானத்வத்தை உடையவராயும், இராநின்ற நந்திவர்த்தன மகா முனீஸ்வரரை நமஸ்கரிக்கிறதுக்கு, இந்தச் சமூகமானது போகாநின்றது என்று சொல்லப்பட்டது.

இந்த வசனத்தைக் கேட்ட, பிராமண புத்ரர்களாலே சொல்லுகுறதாவது, எப்படியெனில்,

திகம்பர ஹனைமுனி என்றும், சாது என்றும் சொல்லப்பட்டது பின்னை எவர்களை என்றால், நிர்தோசமான காலத்தில் உத்பன்னனாயும், வேத சாஸ்திரார்த்தங்களையும் அறியப்பட்டவனாயும் இராநின்ற பிராமணோத்மனனானவன், தன்னையும் இதரர்களையும் சம்சார சமுத்திரத்தினின்றும் கரையேத்துகிறதில் சமர்த்தனாகுற யாதொருவனையே சாது என்றும், முனி என்றும் சொல்லப்பட்டது.

அதுகாரணத்தினால் இந்தப் பூமியிலே நாங்கள் உங்களாலே பூஜிக்கிறதுக்கு யோக்யனமானவர்கள். எங்களுக்கு சத்ருசமானவன் பூத பவிஷ்ய வர்த்தமான காலங்களில் இராநின்றதில்லை.

இந்தப்பிரகாரம், அந்தப் பிராமண புத்ரர்களுடைய குரூர வசனப் பலத்தினாலே கோபத்தை அடையப்பட்டு இருக்குற ஜைனோத்தமனானவன், நந்திவர்த்தன மகாமுனீஸ்வரர்களுடைய பக்தியினால் சொல்லின், அது எப்படியெனில்,

வாராய், பிராமணப் புத்ரர்களே! பவ்யப் பிராணிகள் யாதொரு மகா முனீஸ்வரர்களுடைய பாதமாகுற கமலப் பத்மதூளிகளினாலே பவித்ரதரமான சரீரக் காந்தியை உடையவராகி, மோட்சே பதமான முக்தியை அடைந்து, சௌக்யத்துடன் கூடியிராநின்றார்கள். மேலும் அப்படிக்கொத்த மகாமுனீஸ்ரர்கள் லோகத்திலிராநின்ற சர்வ பிராணிகளுக்கு, சௌக்ய ஹிதகரத்தைச் செய்யப்பட்டவர்கள் அவர்களே பஞ்சேந்திரிய விஷயாஸக்தர்களான உங்களுக்குச் சத்ருசமான இருக்கிற பிராமணர்கள் நமஸ்காராதி வந்தனைகளுக்கு யோக்யமாக

இராநின்றதில்லை. மேலும், வாராய், பிராமணப் புத்ரர்களே, பண்டக்கதை, ராஜகதை, ஸ்திரிகதைகளை விடப்பட்டவர்களாய், லோகாயவாத விஷயத்திலேயும் எப்போதும் மௌனமானவர்களாய் இருக்கிற சாதுக்களை நிந்திக்கப்பட்டு இருக்குற உங்களிரண்டு பேர்களுடைய நாக்கானது, அனேகத் துண்டுதுண்டாக அடைந்துவிடும், எனச் சொல்லிய வசனத்தினால் அபஜயத்தை அடைவர்களாயிருக்கிற பிராமணப் பசங்களைப்பார்த்து, ஜயலனாயிருக்குற ஜைனோத்தமனுடைய வசனத்தைக் கேட்டு அநேகப் பவ்யஜனங்கள் சந்தோஷத்துடன் ஒருவர்க்கொருவர் ஹஸ்தங்களைத் தட்டிப் பரிகாசம் செய்யப்பட்ட கோலாகலக் கூச்சலால் வாடப்பட்ட முகக்காந்தி ஹீனர்களாயும், மிகவும் லஜ்ஜையை உடையவர்களாயும் இராநின்ற பிராமணப் புத்ரர்கள் மறுபடி வசனாடம்பரத்தை அடைந்து, குஞ்சிரிப்புடன் கூடியிராநின்ற ஜைனோத்தமனைப் பார்த்துப் பிரதிக்ஞை செய்தார்கள்.

அது எப்படியெனில், வாராய் அஞ்ஞானியே, உங்களுடைய குருவை இப்போது யுக்தி சாமர்த்தியத்தால் சமஸ்தஜனங்கள் சாட்சியாக நாங்கள் ஜெயிக்கப்போறோம். உங்களோட வீணான வசனங்களைப்பேசுகுறதினால் என்ன பிரயோஜனமென்று பிரதிக்ஞா பூர்வமான வசனத்தைச் சொல்லிவிட்டுக் கிருகத்தை அடைந்து மாத்ரு பித்ருக்களை நமஸ்கரித்துச் சொல்லப்பட்டதாவது, எப்படியெனில்,

வாராய், தந்தை! இந்தக் கிராமத்திலே யாதொரு திகம்பரரான முனிக்கூட்டங்கள் வந்து இராநின்றதுகள். அவர்களை ஜெயிக்கிறதுக்கு எங்களிரண்டு பேர்களுடைய சித்தமானது வாஞ்சியாநின்றது.

அது ஏனென்றால் திகம்பரர்களாகியும் வேதசாஸ்திர மார்க்கத்துக்குச் சத்ருக்களாயும் இராநின்ற அந்த முனிக்கூட்டங்கள், இந்தக் கிராமத்தில் இரண்டு மூன்று திவசங்கள் தைவ வசத்தினின்றும் இருப்பார்களேயாகில்,ஜீன தர்மசாஸ்திரங்களினாலே சமஸ்த ஜனத்துக்குப்போதித்து தன் வசமாக்கி, நம்பளுடைய மார்க்கத்தையும் மார்க்கத்திலிராநின்றவர்களையும், சீக்கிரமாகலே வேருடன் பிடுங்கித் தெறித்திடுவார்கள்.

"ஆகையால், வாராய், என் தந்தையே, நாங்கள் அவர்களைச் சீக்கிரத்தினாலே வாதத்தில் ஜயம் செய்வித்து, இந்தக் கிராமத்தில் நெமை கொட்டுகுற சமயத்துக்குள் இருக்காதவண்ணம் எவ்வழியோ அவ்வழிப் பிரகாரம் தெறித்துவிடுகிறோம்" என்று, சொல்லப்பட்ட புத்ரர்களுடைய வசனத்தைக் கேட்டுச் சந்தோஷத்தை அடைந்து, அப்படிச்செய்யுங்களென்று சொல்லின தகப்பனுடைய உத்தரவைப் பெற்றுக்கொண்டு, மகா முனீஸ்வரர்கள் இராநின்ற வனப்பிரதேசத்தைக் குறித்துப் போகப்பட்டவர்களாயும், ஜயிக்கவேணுமென்கிறத்தில் இச்சை உடையவர்களாகியும் சுபாசுபக் கர்ம சமூகத்தை உடையவர்களாயும், துர்ப்புத்தியை உடையவர்களாயும் நந்திவர்த்தன முனீஸ்வரர்களுடைய

அபிமுகமாகப் போகப்பட்ட பிராமணப் புத்திரர்களைப் பார்த்து, சத்யகீர்த்தி என்னும் நாமதேயத்தை உடைய முனீஸ்வரரால் தடையிடப்பட்டது.

அது எப்படியெனில், ஆரண்யத்தில் பயங்கரமாக இராநின்ற எருமைக்கிடாக்கள்போல் நடக்கைகளை உடையவராய்ப் பிராமணப் பசங்களே! நீங்கள் இரண்டுபேர்களும் முனிசமூகமாகிற ஹம்ச பக்ஷிகளினாலே அலங்கிருதனாயிருக்கிற நந்திவர்த்தன மகா முனீஸ்வரராகிற தாமரைத் தடாகத்தைக் கல்மஷம் செய்கிறதுக்கு ஏன் போகாநின்றீர்கள்? ஆகையால், நீங்கள் போகவேண்டாம். இவ்விடத்தில் இராநின்ற என்னுடைய சமீபத்தில் வாருங்கோளென்று சொல்லப்பட்ட சத்யகி மகாமுனீஸ்வரர் வசனத்தினாலே பிராமணப் புத்திரர்களான இரண்டுபேர்களும் கோபத்தை அடைந்து, பிறகு, முனீஸ்வரரைப் பார்த்து, "வாராய், வெட்கமில்லதவனே" என்றும் "மலினமான சரீரத்தை உடைய அடே முனி" என்றும் வேதசாஸ்திர மார்க்கத்துக்கு நின்றவனே-எங்களாலே ஸ்தோத்திரப் பூஜையினாலே ரஹிதனாயிருந்து ஏன் சாபத்தைக் கொடுக்கிறாயென்று சொல்லிக்கொண்டு முனீஸ்வரர்களுடைய சமீபத்தை அடைந்து, பிராமணப் புத்ரர்களான இரண்டுபேர்களும் மறுபடி சத்யகி மகாமுனீஸ்வரரைப் பார்த்துச் சொல்லுகுறதாவது,

அது எப்படியெனில், வாராய், முனியே! அநேக வசனங்களினாலே பேசுகுறத்தினாலே என்ன பிரயோஜனம் என்கிறத்தின்பொருட்டு, எங்களைஸ்ரயிலே வித்வான்களுடைய சாட்சியாக ஜயிப்பேயானால், வாராய் மூடனே, உன்னாலே என்ன வசனம் சொல்லப்படுகிறதோ, அந்த வசனப்பிரகாரம் நாங்கள் அங்கீகரிக்கிறோம், அல்லது இந்த வாதத்திலே தோற்கப்பட்டவருக்குச் சமீபத்திலிராநின்ற சபா ஜனங்களினாலே என்ன தண்டனை சொல்லப்படுகிறதோ, அந்தத் தட்சனைப் பிரகாரம் நடந்துவிடுகிறதுக்குச் சந்தேகமில்லை என்று சொல்லவேண்டியது.

இந்தப்பிரகாரம் சொல்லப்பட்ட பிராணப்பசங்களுடைய வார்த்தையைக் கேட்டு, முனீஸ்வரரானவர் சொல்லுகிறார்கள்.

நீங்கள் எந்தப் பிரதிக்ஞை செய்கிறீர்களோ, அந்தப் பிரகாரம் நடந்துவிடுகுறேனென்று சொன்னார். அப்பொழுது பிராமணப் புத்திரர்கள் சொல்லுகுறார்கள்.

அது எப்படியெனில், வாராய் முனியே! நீயானவன் எங்களிரண்டுபேர்களுடைய வாதங்களைச் ஜயிக்கும் பட்சத்தில் உன்னுடைய சமீபத்தில் நிச்சயமாகச் சிஷ்ய யோக்யத்தை அடைகிறோம், அல்லது எங்களாலே உன்னுடைய வாதத்தை ஜயிக்கும் பட்சத்தில் என்னைத் திரஸ்காரமான தண்டனையுடன், இந்தக் கிராமத்தினின்றும் ஓடுகிறோம் என்று, இந்தப்பிரகாரம் ஒருவர்க்கொருவர் பிரதிக்ஞையை வித்வான்களுடைய சாட்சியாக அடைந்து பேசப்பட்ட விவாதங்களைக் கேட்டு, அநேக ஜனங்கள் சந்தோஷத்தினால் ஓடிவந்து, அவர்களைச் சூழ்ந்து நெருங்கியிருந்தார்கள்.

சமஸ்த சபா ஜனங்கள், சபையிலே கோலாகல சப்தத்தினால் இருந்துள்ளவில், சத்யகி மகாமுனீஸ்வரர், பிராமணப் புத்திரர்களைப் பார்த்து, வாராய், பிராமணப் பசங்களே, உங்களாலே யாதொரு சந்தேகமானது இராநின்றதோ அந்தச் சந்தேகப் பிரச்னையை முன்னே என்னைக் கேட்கக் கடவீர்களென்று சொல்லப்பட்ட முனீஸ்வரருடைய வசனத்தைக் கேட்டு கற்விஷ்டர்களாய் இருக்கிற பிராமணப் புத்திரர்களான இரண்டுபேர்களும் குஞ்சிரிப்புடன் சொல்லுகிறார்கள்.

"வாராய், பூபதியே! எங்களை நமஸ்காராதி வந்தனை பூஜ்யத்தைச் செய்து, இப்பொழுது உன் கருத்து எந்தச் சுலோகம் பூர்வக முதலான பதார்த்த விஷயத்திலே சம்சயம் இருந்தால், அந்தச் சம்சயப் பிரச்னையை நீயானவன் எங்களுடைய முன்னே கேட்கவேண்டியது'' என்று சொன்னார்கள்.

அப்பொழுது, யதீஸ்வரரானவர், அப்படியே உங்களுடைய வாதத்துக்கு முன்னாலே என்னுடைய சந்தேகத்தைக் கேட்கிறேனென்றும், சத்யதி மகாமுனீஸ்வாரால் கேட்குறதாவது,"வாராய், கர்விஷ்டர்கள், உங்கள் வரவானது எவ்விடத்தினின்று வந்தீர்கள்?'' என்று யதீஸ்வரரானவர் கேட்டார்.

அப்பொழுது, பிராமணப் புத்திரர்களால் சொல்லுகிறதாவது, "வாராய், மூடனே, இந்தக் கிராமத்தினின்றும் வரப்பட்டவர்களாய் இருக்கிற எங்களை நீயானவன் பார்க்க இல்லையாகில், உனக்குச் சூர்யசந்திரர்களுடைய காந்தி கமனரூபமானது அறியவில்லை என்று சொல்லப்பட்ட பிராமணப் புத்திரர்களைப் பார்த்து, யதீஸ்வரானவர் சொல்லுகிறதாவது,

''வாராய், பிராமணப் பசங்களே, சோமதத்த பிராமணனுக்குப் புத்திரர்களாயும், அக்னிபூதி என்றும், வாயுபூதி என்றும் நாமதேயத்தை உடைய நீங்கள் இரண்டுபேர்களையும், இந்தச் சாலிக்கிராமத்தில்நின்று வாதம் செய்யவேணுமென்கிறதில் அபிப்பிராயப் புத்தியை உடையவர்களாகி வரப்பட்டவர்கள் என்று யானறியானேனெனில், வாராய், மூடர்களே! பின்னை என்ன கேழ்க்கப்பட்டது, அப்போது,பிராமணப் புத்திரர்கள் அந்தப்பிரகாரம் சொல்லிப் பிரச்னை என்று கேட்டால்,

"வாராய், பிராமணப் பசங்களே, எந்தப் பூர்வ பவத்தில்நின்றும் இந்தப் பிராமண மதத்தில் உத்பன்னமாயி வந்தீர்கள்?'' என்று கேட்கப்பட்டது,

---

1. சம்சயம் -- சந்தேகம்

அப்போது, இந்தப் பிராமணப் புத்திரர்கள் இந்தப் பிரகாரம் சொல்லப்பட்ட முனீஸ்வரருடைய வசனத்தைக் கேட்டுச் சொல்லுகிறதாவது,

வாராய், முனியே, இவ்விடத்தில் இராநின்ற சபாஜனங்களுடைய மத்யத்திலே, பூர்வப்பவத்தை அறியப்பட்டவர்கள் ஒருவருமில்லை, அப்படி இருக்க, "வாராய், மூடனே நீயானவன் எங்களுடைய பூர்வப் பவத்தைக் கேட்கப்பட்டவன் ஒருவனுமில்லை, அப்படியிருக்க, வாராய், மூடனே நீயானவன் எங்களுடைய பூர்வம் பவத்தைக் கேழ்க்கப்பட்ட பிரச்னையானது சித்தபூமணத்தை அடையப்பட்ட பைத்தியக்காரர்களுடைய வசனத்துக்குச் சத்ருசமாய் இராநின்றது" என்று சொன்னார்கள்.

இப்படிச்சொல்லப்பட்டவர்களுடைய வசனத்தைக் கேட்டு முனீஸ்வரரால் சொல்லுகிறதாவது,வாராய், "பிரமாணப் புத்ரர்களே! நீங்கள் இரண்டு பேர்களும் அறியப்பட்டதில்லையாகில் உங்களிரண்டு பேர்களுடைய பூர்வப் பவத்தைச் சபா ஜனங்களுடைய சாட்சியாக நான் சொல்லுகிறேன், நீங்கள் கேட்கத் தக்கினது என்று முனீஸ்வரராய் சொல்லுகுற பூர்வப்பவச் சம்பந்தக் கதாவதரமாவது,

இந்தச் சாலிகிராமத்திலே, விப்ர குலத்தில் உத்பன்னாயும், தனவந்தனாயும், பிரசித்தவனாயும், அநேகச் சேத்திரங்களுக்கு யஜமானனாயும் பிரமரன் என்று நாமதேயத்தை உடைய ஒரு பிராமணன் உண்டானான். அந்தப் பிராமணனுடைய சேத்திரத்தில் இராநின்ற ஆலவிருட்சச் சமீபத்தில் பிரதேசத்தில், கர்ம விதியினுடைய யோகத்தினின்றும் உத்பன்னனாய் இருக்குற, இரண்டு குள்ள நரியானது மாம்சத்தினாலே விருத்தியைச் கிரமேன அடைந்து, சிலகாலங்கள் கழிந்தபின், அந்தப் பிரமரனுடைய சேத்திரத்தை வேலைசெய்யப்பட்ட ஆண்களுடன் புறப்பட்டவனாய் இருக்குற பிராமணனாலே, பகு தூரத்திலே நின்ற ஆகாசத்தில் இடைவிடாமல் சுர்ஜிக்கப்பட்ட கம்பீரமான சப்தத்தை உடையதாயும், இந்திர தனுசுவுடன் கூடினதாயும், மின்னலுடையதாயும் இராநின்ற மேகத்தைப் பகு தூரத்தில் பார்த்து, அந்தப் பிராமணனானவன் காத்துகளினால் குளிரப்பட்ட சமஸ்த ஜனங்களையும் பயசலிதத்தைச் செய்யப்பட்டிருக்கிற மழைகளானது வர்ஷித்துள்ளளவில், சமஸ்தமான கலப்பைகளுடைய உபகரண வஸ்துக்களைப் போட்டுவிட்டுத் தன்னுடைய ஆறுகளுடன் உதறப்பட்ட சரீரத்தை உடையவனாகிக் கிருகத்தை அடைந்து சேர்ந்துவிட்டான்.

அதன்பிறகு, மழையானது, ஏழ திவசங்கள் இடைவிடாமல் வர்ஷித்துதுகள், எட்டாம் திவசத்தில் மழையானது, மெதுவாக நின்ற தருணத்தில், முன் சொல்லபட்ட இரண்டு குள்ள நரிகளும் தீவ்ரதரப் பசியினால், துக்கத்துடன் செடி, புதர்களில் நின்றும் வெளிப்புறப்பட்டுக் கொல்லையில் இராநின்ற கலப்பையில் கட்டின மிருதுதரமான வடக்கயிறை மிகுதியான பசியினால், பட்சித்தன.

பிறகு, சூலை ரோகத்தினால் அதிகமான துக்கத்தை அடைந்து, பாதங்களைப் பரப்பிக்கொண்டு, ஒரு சமயத்துக்குள்ளாக மரித்து, தெய்வச்செயலாக இந்தக் கிராமத்தில் நீங்கள் மிகவும் தன்னால் பூஜிக்கப்பட்ட வடக்கயிறுகளான அஞ்ஞானத்தினாலே இப்போது இறக்கப்பட்டது, ஆகையால் மனுஷ்யர்கள் பாபத்தினாலே, சஜ்ஜாதியென்ன, சக்குலமென்ன, ரூபமென்ன, கோத்ரமென்ன, காந்தியென்ன இவைகளினாலே ரகிதர்களாயும், புண்யத்தினாலே சமஸ்தத்தினால் கூடினவர்களாய் இராநின்றார்கள்.

இந்தப் புண்யபாபச் சொரூபங்களை அறியப்பட்டிருக்குற வித்வான்கள், ஜாதி குலங்களினாலே கர்வத்தை அடையமாட்டார்கள். மேலும், வாராய், பிராமணப் பசங்களே, உங்களிரண்டு பேர்களும் பூர்வப் பவமானது தெரியவில்லையாகில், இவ்விடத்திலிராநின்ற சகலமான பேர்களுக்கு சாட்சிபூர்வமாக நம்பிக்கையைச் செய்குறேன்

அது எப்படியென்றால் என்னால் முன் சொல்லப்பட்டிருக்கிற பிராமணன் மழைகள் விட்டபிற்பாடு தன்னுடைய ஆண்களுடன் கொல்லையை அடைந்து, பிரசண்டதனமான காற்றினாலே விழுந்து இராநின்ற சமஸ்தமான கலப்பைகளினாலே ...... உபகரண வஸ்துவைப் பார்த்த மறுபடி அரசமர ரஜ்ஜுக்களைப் புசித்து உதரத்தினுடைய நோவை செய்யப்பட்டிருப்பதாயும் அதின்பிறகு ஒருசமயத்தில் மரணத்தை அடையப்பட்டிருக்குற குள்ளநரியைப் பார்த்துத் தயாரகிதமான சித்த விருத்தியினால் பிரமரன் என்கிற பிராமணனானவன் தன்னுடைய ஆண்களினால் கோபத்தினினிறும் அதின் தோலை உரித்து எடுத்துக்கொண்டு, தன் கிருதத்தை அடைந்தான்.

இந்த வசனமானது அசத்யமென்று சொல்லும் பட்சத்தில், வாராய், பிராமணப் பசங்களே, நீங்கள் இரண்டுபேர்களும் இந்தச் சபையில் இராநின்ற இந்த உண்மை தன்னுடைய கிருகத்திலே அந்தக் குள்ள நரிகளுடைய தோலுகளை இப்பொழுது நிச்சயமாக இராநின்றது. நீங்கள் இரண்டு பேர்களும் சீக்கரமாக இந்த உண்மையானவன் பூர்வப்பவத்தில் பிரமரன் என்கிற பிராமணராகப் பிறந்து, கிருஹி, வியாபாரங்கள் நேத்திரங்களினால் பாருங்கள், மேலும், பிராமணமதப் பக்தியுடையவனாயும் எப்பொழுதும் வேதசாஸ்திரோபதேசத்தினால் யக்ஞங்களைச் செய்திராநின்றவன் ஆதுஷ்யாவசானத்தினாலே மரித்துத் தன்னுடைய புத்ரனாக ............ உண்டானான்.

பின்பு, வ்ருங்களுடைய விருத்தியினால் கிரமேண வளர்ந்து பேசுகிற சமயங்களில், அந்தப் புத்திரனானவன் பூர்வப் புண்யத்தினால் ஜாதி ஸ்மரணத்தை அடைந்து பூர்வப் பவத்தில் பிரமரன் என்கிற பிராமணனாக

---

பட்சித்தன - சாப்பிட்டன
பவம் - பிறப்பு

இருந்ததை அறிந்து, மிகவும் துக்கத்தை உடையவனாகிக் இப்பொழுது தன்னுடைய புத்திரனைத் தகப்பனென்றும், தன் மருகனைத் தாயென்றும் சொல்லுகுறதுக்கு எப்போது இந்தப் பவத்தில் நான் வெட்கத்தை அடைகுறேனென்று தீர்க்க காலம் மனசிலே ஆலோசனை செய்து, மௌனமாக இருந்த காரணத்தினால் ஊமையானென்று நாமதேயத்தை உடையவனாகிக் காலவிருத்தியினால் கிடைக்கிறதுக்கு அரிதான எளுவ வனத்தை அடைந்திராநின்ற இந்த ஊமையானவன் தம் பனிரண்டு பேர்களுடைய வாதங்களான சப்தக் கூச்சலைக் கேட்டு, இவ்விடத்தில் வந்திராநின்றான்.

வாராய், பிராமணப் புத்திரர்களே, இதுவும் அஸத்தியம் என்று சொல்லும் பட்சத்தில், உங்களிரண்டு பேர்களுக்குப் பிரத்யட்சமாகக் காண்பிக்கறேனென்று சொல்லப்பட்ட சத்யகி மகாமுனீஸ்வரரால் ஊமைகளைப் பார்த்துச் சொல்லுகுறதாவது,

அது எப்படியெனில், வாராய், பிராமணனே! நீயானவன் மௌனத்தை விட்டுப் பந்துக்களை இனிமையான வசனாம்ருதத்தினால் விசுவாசம் பண்ணக்கடவாய், அது ஏனென்றால், வாராய், பூஜ்யனே, சம்சாரம் பிராணிகளுக்கு ஜன்மாந்தரங்களிலே சக்கரத்தைப் போலச் சுழலப்பட்ட பவங்களிலே அநேக வாரம் புத்ரியானவள் தாயாயும், தகப்பனாயும் புத்ரனாகி, யஜமானும் வேலைக்காரனாயும், அந்த வேலைக்காரனும் யஜமானனாயும் ஆகுறார்கள்.

இது நிச்சயமென்று அறிந்து, யாதொரு தர்மத்தினால் நீ பந்துஜன விடுகையினுடைய காரணத்தினால் உண்டாயிருக்குற துக்கத்தைப் பவங்களிலே பார்க்கப்படாமல் இருக்குற யாதொரு தர்மமானதோ அப்படிக் கொத்த பவங்களுடைய பவத்தை நாசம் செய்குறதுக்குக் காரணமாயும் இருக்குற முக்யமான ஜன சமூகத்துக்கு ஹிதகரமான ஜினதர்மத்தைச் சீக்கரமாக அனுஷ்டிக்க வேணுமென்று சொல்லப்பட்வராயும், ஆசிர்வாத வசனங்களினால் விருத்தியடைந்து இருக்கவேண்டிதென்று சொல்லப்பட்ட மகாமுனீஸ்வரர்களால் பவங்களுடைய கிரமவரிசைகளை அறியப்பட்ட ஊமையானவன் கண்ணீர் ஜலதாரைகளினால் சொரியப்பட்டவனாகி, முனீஸ்வரருடைய பாதக்கமலங்களில் சாஷ்டாங்கப் பிரணுதனாகி, இரண்டு ஹஸ்தங்களினால் தழுவிக்கொண்டு மன்மதனாகிற நீ யானைக்குச் சிம்மப் போல் இராநின்றவராய், பகவானே பவங்களை நாசம்செய்யப்பட்ட தீட்சை கொடுங்களென்று சொல்லப்பட்ட ஊமையினுடைய ஜீன தீட்சாமுத வசன சமூகத்தைப் பார்த்து, மறுபடி அந்தச் சத்யகி மகாமுனீஸ்வரா பாதமூலத்தில், சில பவ்யப் பிராணிகள் சம்யத்வத்தைச் சுவீகரித்தார்கள்

மறுபடி, சில பவ்யப் பிராணிகள், மகா விரதங்களைச் சுவீகரித்தார்கள். மறுபடி, சில பவ்யம் பிராணிகள் நிச்சய பூதமான ஜீன தர்மத்திலே பக்திபுரசரமான பிரீதியை உடையவர்களாக ஆனார்கள்.

இப்படிப் பவ்யப் பிராணிகள் சம்யத்வம் முதலான தீட்சா சுவீகாரங்களைக் கைக்கொள்ளுமளவில், இந்தச் சபையில் இராநின்ற சில ஜனங்கள், கிராமத்தை அடைந்து, ஊமையினுடைய கிருகத்தில் இராநின்ற, குள்ளநரிகளுடைய சர்ம யுகளத்தைச் சுவீகரித்துக் கொண்டு சத்யகி மகாமுனீஸ்வரருடைய சமீபத்தில் கொண்டுவந்து வைத்தார்கள்.

பிராமணப் புத்திரர்களான இந்த இரண்டு பேர்களும் ஜனங்களுடைய கோலாகலமான ஹாஸ்ய வசனங்களினால் நிந்திக்கப்பட்டவராயும் முனீஸ்வரர்களுடைய சமீபத்தில் வைத்திராநின்ற சர்ம யுகளத்தையும் பார்த்துப் பிரத்யியட்சமாகச் சாட்சி பூதமாக இருப்பதினால், பிராமணப்புத்திரர்கள் இரண்டுபேர்களும் மௌனத்தை உடையவர்களாயும், சரீரக் காந்தி ஹீனர்களாயும் மிகவும் வெட்கத்தை அடையப்பட்டவர்களாகி, ஆச்சரியமான புத்தியை உடையவர்க்கும் ஜெனங்களினால் திக்கார......வார்த்தைகளை அடைந்து, மறுபடி, கிருகத்தை அடைந்து மூவெட்டத்துடன் கூடினவர்களான புத்ரர்களைப் பார்த்து, மாத்ரு, பித்ரு இரண்டு பேர்களும் கோபத்துடன் சிரித்து, பௌருஷ வார்த்தைகளினால், வாராய் புத்திரர்களே, அநேகத் திரவ்யங்களைக் கொடுத்துப் படிக்கப்பட்ட சாஸ்திரங்களை நிஷ்பிரயோஜனமாகச் செய்துவிட்டீர்களென்று உச்சிஷ்டமான திவலையினால் காரி உமிழ்ந்து சொல்லப்பட்ட வசனத்தினால் அதட்டியும், வாராய் புத்திரர்களே, வேத மார்க்கத்துக்குப் பாக்கிவர்த்திகளான இந்த முனிக்கூட்டங்களை வித்வான்களுடைய சாட்சியாக நீங்களிரண்டு பேர்களும் சாஸ்திரத்தினாலே ஜயிக்கிறதுக்குச் சாமர்த்யிமானீர்களில்லை, அப்படி இருந்தபோதிலும் இன்றைய ராத்திரியில் துஷ்டர்களான முனிக்கூட்டங்களைச் சஸ்திரங்களான கட்கத்தினால் நீங்களிரண்டு பேர்களும் கொன்றுவிட்டுச் சீக்கிரமாக வரவேண்டியதென்று, மாத்ரு பித்ருக்களான அக்னிலைவென்றும் சோமதத்தனென்றும் நாமதேயங்களை உடைய இரண்டு பேர்களினால் அனுப்பப்பட்ட இரண்டு புத்திரர்களும் உத்திரவைப் பெற்றுக்கொண்டு சந்தோஷத்தை அடைந்து, ஒருவர்க்கொருவர் ரகஸ்யமாக இந்த உத்திரவைச் செய்யச் சங்கதி சரியென்று நிச்சயத்தை உடையவர்களாக மனசிலே இந்தப் பிரகாரம் செய்தால் சௌக்கியத்தை அடையலாமென்று சிந்தனையை அடைந்து கூர்மையான கட்கங்களை ஹஸ்தங்களில் தரிக்கப்பட்டவர்களாகியும் மூன்று மடிப்பான கஞ்சுகிப் பட்டையினால் இடுப்பில் கட்ட வஸ்திரங்களை இறுக்கிக்கொண்டு, அந்தக் கஞ்சுகிப் பட்டையில் சொருகப்பட்ட தீட்சணதரமான சாணையினால் தரமான கத்தியை உடையவர்களாகியும், இடதுக் காதுப்பக்கத்தில மயிர்களை முடிக்கப்பட்டவர்களாகியும் புறப்பட்டச் சத்யகி மகாமுனீஸ்வரருடைய வனப்பிரதேசத்தில் வருகுற அந்தச் சத்யகி மகாமுனீஸ்வரரும் நந்திவர்த்தன மகாமுனீஸ்வரருடைய சமீபத்தில் அடைந்து, சமஸ்தமான

---

1. யுகளம் - இரட்டை

தன்னாலுண்டான வாதமுதலான தோஷங்களைச் சொன்னபிற்பாடு, நந்திவர்த்தன மகாமுனீஸ்ரரானவர், அந்தச் சத்யகி மகாமுனீஸ்வரருக்குத் தோஷங்களுக்கு யோக்யமான பிராயச்சித்தங்களைப் பிரார்த்தித்துச் சொன்னபிற்பாடு, துக்கத்துக்குக் காரணமாய் இருக்கிற மற்றொரு சங்கதியைச் சொன்னார்.

அதாவது, மிகவும் துஷ்டபுத்தியை உடையவர்களாயும் நாசம் செய்யப்பட்ட அபிமானத்தினாலே லஜ்ஜையை உடையவர்களாயும் அந்தப் பிராமணப் புத்திரர்கள் நிச்சயமாக உமை இன்றைய ராத்திரியில் இப்பொழுது கொல்லுகிறதுக்கு வருகிறார்கள்.

அதுகாரணத்தினால், ரத்னாராசிகளை ரட்சகிறதின் பொருட்டுத் தாங்கள் சீக்கிரமாக இந்த வனப்பூமியினுடைய சமீப வழிமார்க்கப் பிரதேசத்தில் அடைந்து, தபோருடனாகிச் சேத்திரபாலதேவன் பொருட்டுப் பூர்வங்களை அறிவித்துச் சூர்யோதயகாலப் பர்யந்தம், சமாதித் தியானத்தை அடைந்து இருக்கவேண்டியதென்று சொல்லப்பட்ட குருவான நந்திவர்த்தன மகாமுனீஸ்வருடைய உத்தரவை அடைந்து, நமஸ்காராதி வினையங்களினால் ஆசிர்வாதங்களில் நின்றும் விடைகொண்டு போய்ச்சொன்ன பிரகாரம் சலன ரகிதமான ஹீரத்தை உடையவராய வழிமார்க்கத்தில் இராநின்ற சத்யகி மகாமுனீஸ்வரரை ராத்திரியில் பார்த்துப் பிராமணப் புத்திரர்கள் ஒருவர்க்கொருவர் பாபத்துக்குக் காரணமாய் இருக்குற நித்யமான வசனத்தினால், இந்த முனியானவன் நம்பளுடைய இஷ்டசித்திப் பிரகாரம் கர்ம விரி வசத்தினால் வழிமார்க்கத்தில் இராநின்றான் என்று சொல்லப்பட்டவர்களாக இருக்குற பிராமணப் புத்திரர்களான இரண்டுபேர்களும் முனீஸ்வரருடைய சமீபத்தை அடைந்து, அவர்களில் அசுருஜனானவன் அனுஜனைப் பார்த்து,

வாராய், தம்பியே! இந்த முனியை முன்னாலே கொல்லுகிறேனென்று சொல்லிய அண்ணனைப் பார்த்து, நான் உனக்கு முன்னாலே கொல்லுகிறேனென்று ஒருவர்கொருவர் விசேஷ வாத வசனங்களை அடைந்து எவ்வளவு காலத்துக்குள்ளாகத் கட்கங்களைக் ஹஸ்தங்களினால் தாக்கினார்களோ, அவ்வளவு காலத்துக்குள்ளாகவே வன மத்யத்தில் சஞ்சரிக்கப்பட்ட சேத்திரபால்க தேவனானவன், யட்சரால், அந்தச் சத்யகி மகாமுனீஸ்வரரை ஒருங்காகக் கொல்லுகுறதுக்கு முயற்சியான சித்த ஆசையை உடையவர்களாயும், நெரிக்கப்பட்ட புருவங்களினால் பயங்கரமான நேத்ரங்களை உடையவர்களாயும் பூர்ணதரமான பாபங்களுக்குச் சத்ருசமானவர்களாயும், ராத்திரியிலே துர் நடக்கை உடையவர்களாயும் இருக்கிற பிராமணப் புத்திரர்களைப் பார்த்துச் சிந்திக்கிறதாவது, சமஸ்த பிராணிகளுக்கு இதமானவராயும், சத்ருவினிடத்திலேயும் சுக துக்கங்களிலேயும் சமான புத்தியை உடையவராயும் யோகீஸ்வரரான இந்தச் சத்யகி மகாமுனீஸ்வரருடைய உபத்திரவத்தை இப்பொழுது ரட்சணை செய்யாமல் இருப்பமேயானால்,

என்னுடைய வன ரட்சணையான யஜமானத்வமானது, நிச்சயமாக நிஷ்பிரயோஜனத்தை அடையுமென்று சூர்யோதய காலத்தில் இந்த இரண்டு பிராமணப் புத்திரர்களுடைய துர்நடக்கையான பாபக் கார்யங்களை தேசங்களிலே இராநின்ற ஜனங்களுக்குக் காண்பித்து, யோக்யங்களான தண்டனைகளைச் செய்யவேண்டியதென்றும், மனசிலே ஆலோசனையை அடைந்து, கட்கங்களினாலே தூக்கப்பட்ட ஹஸ்தங்களை உடைய பிராமணப் புத்திரர்களைப் பாதமாக மனத்தினால் மற்றொரு பிரதேசத்தில் பாதத்தைத் தூக்கிவைக்காமல் ஸ்தம்பனம் செய்துவிட்டு வந்த யட்ச தேவன், தன்னுடைய ஆஸ்தானத்தைப் போய்விட்டான்.

மறுபடி, கம்பீரதரமான இந்தச் சத்யகி மகாமுனீஸ்வரருடைய உபசர்க்கத்தைப் பார்த்து ராத்ரியானது பயத்தை அடைந்து, ஓரிடத்திலும் இருக்காமல் சீக்கிரமாக மறைந்துவிட்ட பிறகு, சூர்யோதய காலத்தில் அதி ரௌத்திரமானவர்களாயும், ஆகாசத்தில் தூக்கப்பட்ட கட்க ஹஸ்தங்களை உடையவர்களாயும், சத்ருக்களான பிராமணப் புத்திரர்களுடைய குந்தங்களுக்கு யோக்யமான ஸ்தம்பித தண்டங்களைப் பார்த்து, ஜன சமூகங்கள் இக்காரமான இவர்களைச் சுடுங்களென்கிற வசன சமூகத்தை உடையவர்களாகி, நிந்தித்துச் சொல்லுகுறார்கள்.

அது எப்படியெனில், சகலப் பிராணிகளுக்கு ஹிதகரமான முனீஸ்வரர்களுடைய தர்மமானது இந்தப் பாவத்திலும், மறு பவத்திலும் ரட்சிக்கக் கடவதென்று இந்தப்பிரகாரமான ஜனங்களுடைய நிந்தையை அடையப்பட்டவர்களாயும், ஸ்தம்பிதமான அந்தப் பிராமணப் புத்திரர்களுடைய ஹிம்சா தண்டங்களுக்கு யோக்யத்தை அடைந்து இருப்பதை ஜனத்தினால் மாத்ருபித்ருக்கள் அறிந்து கண்ணீர்களினால் சொரியப்பட்டவர்களாயும் ஐயையோ என்கிற புத்திரர்களாவென்று அழுகைத்தொனியை உடையவர்களாகி, வனச் சமீபத்தில் இராநின்ற முனீஸ்வரருடைய உபய பக்கத்தில் இராநின்ற புத்திரர்களுடைய சமீபத்தில் வந்தடைந்து, முனீஸ்வரருடைய பாதமாகுற தாமரைத் துகளத்திலே சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, அயோமுகமான நேத்ரத்தை உடையவர்களாகி, இந்தச் சத்யகி மகாமுனீஸ்வரரைப் பார்த்துச் சொன்னார்கள்.

அது எப்படியெனில், வாராய், ஸ்வாமியே, உங்களுடைய மதமானது சமஸ்தபிராணிகளுக்கு ஹிதகரமாயும் பிரசித்தமாயும் இராநின்றது. அது காரணத்தினால் எங்களுக்குப் புத்திர பிட்சை கொடுக்கவேண்டியதென்றும் யாசித்தார்.

அவ்வளவு காலத்துக்குள்ளே சத்யகி மகாமுனீஸ்வரர் சீக்கிரமாகத் தபோ யோகாஷ்டானங்களை முடித்துவிட்டு இவர்களுடைய காரியங்களைப் பார்த்துக் கொஞ்சம் ஆச்சரிய புத்தியை அடைந்து

சொல்லுகுறார். என்னுடைய உபசர்க்க பரிகாரத்தைச் செய்யப்பட்ட யாதொரு யட்ச தேவனாலே........ பிராமணப் புத்திரர்களை விடுகுறதுக்கு இவ்விடத்தில் பிரசன்னமாக வரக்கடவதென்று சொல்லப்பட்ட அந்த யதீஸ்வரரைக் குறித்து தேவனானவன் சொல்லுகிறதாவது,

வாராய், ஸ்வாமியே! நீங்கள் மௌனத்தை அடைந்திருக்க வேண்டியது, உங்களுக்குச் சிந்தையில் வரப்பட்டது என்னால் தோஷமில்லாமல் கொல்லுகுறத்துக்கு இச்சிப்பனேயானால், இவ்விடத்தில் தங்களால் தடைசெய்குறதுக்கு யோக்யனாகுறேன்; மறுபடி குற்றம் செய்யப்பட்டவனைக் கொல்லுகுறதினுடைய கார்யத்தைத் தடை செய்குறதுக்கு யோக்யனாகுறேன், மறுபடியும் குற்றம் செய்யப்பட்டவனைக் கொல்லுகுறதுடைய கார்யத்தைத் தடை செய்குறதுக்கு யோக்யமில்லை. மேலும், சூர்யோதய காலப்பர்யந்தம் இவர்களைக் கொல்லாமல் இருந்த காரணமாவது, உங்களுக்கு ஜீன சமூகத்தினுடைய அபவாத வார்த்தையானது வரும், அதுவும் வரக்கூடாதென்று ஜீன சமூகத்துக்கு இவாளுடைய துர்நடத்தையை அறிவிக்குறதின் பொருட்டு, ராத்ரியில் என்னாலே தடைசெய்யப்பட்டவர்களாகியும், எப்பொழுதும் கர்வங்களினாலே அகங்காரத்தை உடையவர்களாயும் இருக்கிற இவர்களை நிச்சயமாக இப்பொழுது கொல்லுகிறேன் என்று சொல்லுகுற யட்சதேவன் பார்த்து, முனீஸ்வரரானவர் சொல்லுகுறதாவது,

வாராய், வனபாலக தேவனே! இந்த ஹிம்சா தோஷமான முயற்சியானது வேண்டாம். மேலும் இந்த இரண்டு பிராமணப் புத்திரர்களுக்கு வருகுற நேமி தீர்த்தங்கரருடைய காலத்தில் மோட்சமானது நிச்சயமாக உண்டாகா நின்றது,.

இந்தப்பிரகாரம் சொல்லப்பட்ட முனீஸ்வரருடைய வசனத்தைக்கேட்டு யட்சதேவனானவன், முனீஸ்வரரை நமஸ்கரித்துப் பிராமணப் புத்திரர்களையும் ஸ்தம்பனத்தை நீக்கிவிட்டு மறைந்துவிட்டான்.

அதனபிறகு ஆச்சரியத்தைக் கூடின ஜனங்களாலே பார்க்கப்பட்டவர்களா இருக்குற அந்தப் பிராமணப் புத்திரர்களான இரண்டு பேர்களும் முனீஸ்வரருடைய சமீபத்தில் அடைந்து, விதிப் பூர்வகமாக நமஸ்கரித்து சொல்லுகுறார்கள்.

வாராய், ஸ்வாமியே, எங்கள் பேர்களுடைய பாபக் கார்யத்தைச் க்ஷமை செய்யவேண்டியது.

மேலும், அஞ்ஞானி ஜனத்தின்பொருட்டுச் சாது ஜனமானது ஒருபொழுதும் கோபத்தை நினைக்கிறதில்லை என்று சொல்லப்பட்ட பிராமணப் புத்திரர்களைப் பார்த்து, முனீஸ்வரரால் சொல்லுகுறதாவது,

வாராய், பிராமணப் புத்திரர்களே! சமஸ்தப் பிராணிகளுக்கு என்னாலே நிச்சயமாகச் ஷமையானது செய்யப்பட்டது, மேலும், லோகத்தில் தன்னுடைய கர்வ வசத்தினால் வர்திக்கப்பட்ட கார்யத்தில் ஒருவனுக்கு ஒருவனால் தோஷமானது ஆகிறது, இல்லை, மேலும், உங்களிரண்டு பேர்களினாலே செய்யப்பட்ட கார்யமானது அனர்த்தப் பரம்பரையான பாபங்களுக்குக் கர்மமானது காரணமாக இராநின்றது.

இந்தப்பிரகாரம் முனீஸ்வரருடைய வசனத்தினின்றும் சந்தோஷத்தை உடையவர்களாகி, ஞானத்தை அடையவேணும் என்கிற சித்தத்தை உடையவர்களாகிச் சொல்லுகுறதாவது,

வாராய், முனீஸ்வரரே! எங்களிரண்டு பேர்களுக்கு உம்முடைய சரீரத்தைக் கொல்லுகுறதுக்குச் காரண ஹிதமாக எப்படி ஆரம்பிக்கப்பட்டது மிகவும் துஷ்டப் புத்தியை உடையவர்களாய் இருக்கிற எங்கள் இரண்டு பேர்களுடைய ஹிம்சையினால் உண்டான பாபங்களைய ஒரு தர்மத்தினால் நாசமடைகிறதோ, அந்த உத்கிருஷ்டமான தர்மத்தை எங்களுக்குச் சொல்லவேண்டியதென்று கேட்கப்பட்ட, பிராமணப் புத்திரர்களைப் பார்த்துச் சத்யகி மகாமுனீஸ்வரர் சொல்லுகிறார்.

தர்மமாகுற அமிர்த சமூகத்தில் ஸ்நானம் செய்துவைத்துப் பிரகாசமான லக்ஷணத்தையும், அணுவிருதப் பஞ்சகத்தையும், சிக்ஷாவிரதச் சதுஷ்கத்தையும், குணவிருத்ருதத்தையும், உபதேசிக்கப்பட்ட விரதங்களைக் கேட்டுச் சுவீகரிக்கப்பட்டவர்களாய் இருக்கிற இந்தப் பிராமணப் புத்திரர்கள், சத்யகி மகாமுனீஸ்வரரை அநேக வந்தனாஸ்த வசனங்களில் துதித்து, நமஸ்கரித்து, விடைகொண்டு கிருகத்தை அடைந்து, தீர்க்ககாலம் ஜினேஸ்வரருடைய பாதமாகுற தாமரைத் தூள்களினால் பவித்ரமான சிரசை உடையவர்களாய் இருக்கிற புத்திரர்களைப் பார்த்துச் கர்மத்தினால் கிருகிக்கப்பட்ட மாத்ரு பித்ருக்கள் சொல்லுகுறதாவது,

வாராய், புத்திரர்கள், இப்பொழுது வேதமார்க்கத்துக்கு சத்ரு பூதமான ஜினமத ஆஸ்ரயத்தை அடைந்து, அனுஷ்டித்து இராநின்றீர்களென்று மௌனமாய் இருக்கிற பிராமணப் புத்திரர்கள், அணுவிரத, குணவிரத, சிக்ஷா விரதங்களை ரக்ஷித்து 1. விசுத்தமான 2. சம்யக்துவத்தை உடையவர்களாகிச் சதுர்க்கமான தானத்தைக் கொடுத்துச் சைத்யாலயங்களிலே பஞ்சபரமேஷ்டிகளுக்குத் தீர்க்ககாலம் பூஜைகளைச் செய்து, சாப்ஸதிரோக்த விதிப்பிரகாரம் சந்நியாசமரதை அடைந்து, சௌதர்ம கல்பத்தை அடைந்து, உபபாதச் சயனத்திலே சௌக்யமான ஜனனத்தை அடைந்து, ஏழு முழமான சோசசாபரண லட்சணத்தை உடைய விக்ருதி சரீரத்தை அடைந்து, தேவஸ்திரீகளுடைய சங்கீத வந்தனாதிஸ்தவனங்களைப் பார்த்து, ஆச்சரியத்தை அடைந்து,

---

*1. விசுத்தம் - பரிசுத்தம்*

*2. சம்யக்துவம் - நல்ல அறிவு*

"இது என்னா ஆச்சரியம்" என்று, எஜமானத்துவம் என்ன, படுக்கை என்ன, விமானம் என்ன, பரிவாரங்கள் என்ன, சௌக்யங்கள் என்ன, இவை முதலானவைகள் எப்படி உண்டாச்சுதென்று ஆலோசிக்கிற காலத்தில் அவதி ஞானத்தினால், அர்ஹ பரமேசருடைய விரதப் பலத்தை அறிந்தும், பூர்வபவத்தை ஸ்மரிக்கப்பபட்டவர்களாயும் சௌதர்மேந்திரனுடைய சபா யோக்யர்களாகியும் அஞ்சுப்பல்ல ஆதுஷ்ய ஸ்திதியை உடையவர்களாய் இருக்கிற இந்த இரண்டு தேவர்கள் சம்யக்துவத்தை அடைந்து, சந்தோஷ சித்தத்தை உடையவர்களாயும், பஞ்சகல்யாணங்களுடைய அர்ஹ பரமேஷ்டிகளுக்குப் பூஜனை செய்யப்பட்டவர்களையும் பக்தியினாலே தீர்க்காலம் இந்த *ஆஷ்யாவசானத்தில் மரணத்தை அடைந்து, இந்த ஜம்புத்தீபத்தினுடைய தட்சிண மார்க்கமான பரத க்ஷேத்திரத்தில், தேவலோகத்துக்குச்சத்ருசமான கோசல தேசத்தில், அமராவதியில், மோகாலங்கார அயோத்யாபுரிப் பட்டணத்துக்கு அரிஞ்ஜைய மகாராஜனானவர், பிரீதிக்கரன் என்கிற நாமதேயத்தை உடைய பிராண காந்தைனாலே, போக ஐஸ்வர்யத்துடன் கூடியிராநின்றார்.

அந்தப் பட்டணத்தில் பரிசுத்தமான வம்சத்தில் உத்பன்னமான சமுத்திரதத்தன் என்கிற சிரேஷ்டிக்கும், ஹரிணி என்கிற தேவிக்கும், சௌதர்ம கல்பத்தில் இராநின்ற துவிஜோத்தம சாரர்களான இரண்டு தேவர்கள் கர்பத்தில் அடைந்து, நவ மாசம் பரிபூரணமாகியபின், இந்த இரண்டு பேர்களில், மூத்தவன் பூர்ணபத்திரன் என்றும் மற்றொருவன்,

மாணிபத்திரன் என்னும் நாமதேயத்தை உடையவர்களாயும் சாஸ்திரம், கலை சமூகத்தினாலே சம்பூர்ணமானவர்களாயும், பூர்ணச்சந்திரனைப் போலே காந்தியை உடையவர்களாயும் களத்திராதிகளுடன் கூடின பரிகிருகத்தை உடையவர்களாயும், தர்ம, அர்த்த, காமச் சௌக்கியத்தை உடையவர்களாய் இராநின்ற காலங்களில், மற்றொரு தினத்தில், அந்தப் பட்டணத்துனுடைய உத்பான வனத்தில் மகேந்திராசார்யர் என்னும் நாமதேயத்தை உடைய மகாமுனீஸ்வரர் வந்தார். அந்த யதீஸ்வரருடைய பிரபாவத்தினால், சத்ருக்களுடைய சோபையினால் அலங்கிருதமான உத்யாவனத்தை வனபாலகன் பார்த்து, ஆச்சரித்தை உடையவனாயும் விகசிதமான புஷ்பங்களை ஹஸ்தத்தில் தரித்துக்கொண்டு ராஜ அரண்மனையை அடைந்து, துவாரபாலகனுடைய மூலமாய், தூரத்தினின்றும் ராஜாவை நமஸ்கரித்து, "வாராய், சுவாமியே, வண்டு சமூகங்களுடைய சப்தங்களினால், தச திக்குகளிலும் செவிடு படப்பட்டு இருக்குற வனத்திலே, பவ்ய ஜனங்களாகுற தாமரைப் புஷ்பங்களை மலரச்செய்யப்பட்ட சூரியனுக்கு சத்ருசமான முனீஸ்வரரானவர் வனத்திலிராநின்றார் என்று, வனபாலகனுடைய வசனத்தைக் கேட்டு, அரிஞ்சய மகாராஜாவானவர் சந்துஷ்ட சித்தத்தை உடையவராகி, அந்தப்புர ஸ்திரீமார்களுடன் கூடி சாமந்த ஜனங்களினால்,

---

1. அவசானம் - முடிவு

வந்தாஸ்தவங்களைச் செய்குறத்துக்கு அநேகப் பேரி வாத்யங்களுடன் புறப்பட்டிருக்குற ராஜாவைப் பார்த்து, ராஜாவானவர் உத்யான வனத்தை அடைந்து வாகனாதி பரிவாரங்களினின்றும் விட்டு இழிந்த, பாதக்கமனத்தில் நின்றும் சென்று, முனீஸ்வரரைப் பிரதட்சிணத்துடன் வந்தனாஸ்தவனங்களைச் செய்து, பிறகு, பவ்யஜனங்களை, யதாஸ்தானத்தில் உட்கார்ந்து இருந்துள்ளவில், ராஜாவானவர், யதிகளைப் பார்த்து,

''வாராய், சுவாமியே! எங்களுக்குக் கர்ம பந்த மோட்சக் கமனத்துடைய காரணத்தைச் சொல்லவேண்டியதென்று" கேட்டார். முனீஸ்வரர், ராஜாவைப்பார்த்துச் சொல்லுகுறார். அது எப்படி எனில், ''வாராய், ராஜனே, மித்யாத்வமும் அணுவிரதமும் யோகங்களும், பிரமாதங்களும்,கஷாயங்களும், பந்தத்துக்குக் காரணமென்று ஜினேஸ்வரரால் சொல்லப்பட்டது, கர்மபந்தங்களை நிவிருத்தமூலம் செய்யப்பட்ட சம்யக தர்சன ஞான சாரித்ரங்கள் மோட்சத்துக்குக் காரணமாகுமென்று கணதராதி பரமேஷ்டிகளால் சொல்லப்பட்ட தென்று சொன்னபிறகு, ராஜாவானவர் மறுபடி முனீஸ்வரரைப் பார்த்து,

'வாராய், ஸ்வாமியே! என்னால்கர்ம பந்த மோட்சங்களுடைய காரணத்தை எப்படி அறியப்பட்டதோ, அப்படியே தங்களிடத்தில் கேட்கப்பட்டது. ஆகையால் வாராய், சுவாமியே சார வர்ஜமான சம்சாரத்திலே எப்பொழுது அநேக ரோகங்களினாலே பூர்ணமான தேகமானது இராநின்றது என்றும், யௌவனமானது க்ஷண நாசமென்றும் பஞ்சேந்திரிய விஷயங்களினால் உண்டாயிருக்கிற சௌக்கியங்கள் விஷயத்துக்குச் சமானமென்றும் இராநின்ற சம்சாரசாரமான சமுத்திரத்தின்றும் வைராக்கியத்தை உடையவனாயிருக்கிற எனக்குத் தீட்சையைக் கொடுங்களென்று கேட்கப்பட்ட ராஜாவானவர், குருவுனுடைய ஆக்ஞையைச் சுவீகரித்து அநேக ராஜாக்களுடய் பாஹ்யாப்யாந்தர பரிகிருகங்களை விட்டு, ஜினேஸ்வர சம்பந்தமான ஜினதீட்சையைச் சுவீகரித்தார்.

மறுபடி, சமுத்திரத்தத்த சிரேஷ்டியானவர் தன்னுடைய சிரேஷ்ட பந்தத்திலே புத்திரர்களின்பேரில் ஸ்தாபித்துவிட்டுச் சம்சாரமாகிற சமுத்திரத்தைத் தாண்டவேணுமென்கிற இச்சையை உடையவராகி பரிகிருகங்களைவிட்டு, ஜின தீட்சா பிராப்தானகி, பின் சிரேஷ்டி புத்திரர்கள் முனீஸ்வரரை நமஸ்கரித்து, கிருகஸ்தரர்களுடைய சிராவக தர்மத்தையும், யதிதர்மத்தையும் கேட்டு, அணுவிரதங்களைச் சுவீகரித்துச் சம்யத்துவாபரணங்களை அலங்கிருதராகி, சந்தோஷத்தில் நின்றும் முனீஸ்வரரை நமஸ்கரித்து, கிருகத்தை அடைந்து, சைத்யாலயங்களில் ஜினேஸ்வரரர்களுக்குப் பூஜைகளைச் செய்யப்பட்டவர்களாயும், சத்பாத்திரங்களிலே பக்தியினாலே, சதுர்விதத் தானங்களைக் கொடுக்கப்பட்டவர்களாயும்,

---

1. சாரவர்ஜமான - சாரமில்லாத

மனோவாஞ்சிதமான போகங்களை அனுபவிக்கப்பட்டவர்களாயும், சௌக்கியமாகுற சமூகத்தில் முழுகப்பட்டவர்களாயும் சொல்லபட்ட காலத்தை அறியப்படாதவர்களாயும் இராநின்ற சிரேஷ்டி புத்திரர்களை மற்றொரு தினத்தில் முனீஸ்வரரை நமஸ்கரிக்கிறதுக்குப் போகப்பட்ட மார்க்கத்தில் பெட்டைஸ்வாவுடன் போக சம்சர்க்கம் செய்யப்பட்ட நிக்ருஷ்ட சரீரராகத்தை உடைய சண்டாளனைப் பார்த்து, அப்படிபட்ட செய்கையுடன் கூடிவைனாய் இருந்தபோதிலும் இரண்டு புத்திரர்களுடைய மனசானது சிநேகத்தினாலே பிரதிவசனத்துடன் போகப்பட்டவர்களாகி, அவதிக்ஞான தரிசனத்தை உடைய முனீஸ்வரருடைய சமீபத்தை அடைந்து நமஸ்காரம் செய்தபிறகு, எங்களிரண்டு பேர்களுக்கு என்ன காரணத்தினால் பெண்ஸ்வாவியினுடன் கிரீடிக்கப்பட்ட சண்டாளன் பேரில் சிநேகபாவப் பரிணாமத்தினுடைய காரணத்தைச் சொல்லவேண்டியதென்று கேட்டார்,

அப்பொழுது, முனீஸ்வரரானவர் சிரேஷ்டி புத்திரர்களைப் பார்த்து, உங்களுக்கு மூன்றாம் பவத்திலே இந்தச் சுவாவானது அக்னியை என்று பெயரை உடைய...... மாதாவும் இந்தச் சண்டாளன் சோமதத்தன் என்று நாமதேயத்தை உடையவன் தகப்பனாயும் பிராமண வம்சத்தில் பிறந்து வேத தர்மத்திலே பிரீதியை உடையவர்களாயும், எப்போழுதும் யக்ஞ கர்மத்திலே தளத்பர்யத்தை உடையவர்களாயும், கிருகம்தோறும் அடையப்பட்ட, திரவியத்தினால் பூர்ணமானவர்களாயும் ஜின மார்க்கத்துக்குச் சிரேஷ்டிகளாயும் ஜாதியினுடைய கர்வத்தினால் ஜகத்தைத் திருணத்துக்குச் சமானமாக எண்ணத்தை உடையவர்களாயும் மரணத்தை அடைந்து பிரதம நரகத்தை அடைந்து அஞ்சு பல்லாயுசு பர்யந்தம் மகாதுக்கத்தை அனுபவித்து வந்து, சண்டாளனும் * ஸ்வா ஜனனத்தை உடையவர்களாயும் பிறந்தார்கள்.

அது காரணத்தினால், ஜன்மாந்தர பிரீதியானது உண்டாச்சுது. இந்தப் பிரகாரம் முனீஸ்வரரால் சொல்லப்பட்டிருக்குற வசனத்தினாலே, அந்தச் சிரேஷ்டி புத்திரர்கள் சீக்கிரமாக வசனத்து சண்டாளனுக்கும், ஸ்வாவினுக்கும் சிநேகக் காருண்பத்தினால் அணுவிரதபஞ்சகமும், குணவிரதத் திரயமும், சிஷா விரத சதுஷ்கமாகிய தர்மத்தைப் போதித்தார்கள். இந்தத் தர்மத்தினால் ஞானத்தை அடைந்து, மறுபடி பூர்வஜன்மத்தில் உண்டான புத்திரர்கள் முதலான ஜனங்களைக் கேட்டு, சோக விஸ்மயத்தினால் பூர்ணமான சரீரத்தை உடையவனாயிருக்குற சண்டாளன் முனீஸ்வரர் சமீபத்தில் வந்து, நமஸ்கரித்துச் சொல்லுகிறான்.

"வாராய், ஸ்வாமியே, உங்களுடைய பிரசாதத்தில் நின்றும் என்னாலே பூர்வ ஜன்மத்திலே அனுபவிக்கப்பட்ட பிராமண ஜனனத்தையும் சண்டாள ஜனனத்தையும் அறிந்து என்னுடைய

---

1. ஸ்வா - நாய்
ஹிம்சானந்தமான - ஹிம்ச ஆனந்தமான
திருணம் - வைக்கோல்

சித்தமானது சோகாக்கினியினாலே ஸ்வலனத்தை அடையாநின்றது. அது காரணத்தினால் வாராய், ஸ்வாமியே, குரோத சோக பயோன்மாத மிருத்யு ஜன்மரை முதலான ரோகங்கள் யாதொரு தர்மத்தினால் அகலும், அந்தத் தர்மத்தை எனக்கு உபதேசிக்க வேண்டியதென்று சொல்லிய வசனத்தைக்கேட்டு முனீஸ்வரரானவர் சண்டாளனைக் குறித்து அகிம்சாதி விரதங்களைப் போதித்தப்பிறகு, உனக்கு ஒருமாச ஆயுஸ்யம் என்று சொல்லியும், சல்லேகன விரதகங்களைக்கொண்டு தைர்யமான புத்தியினாலே சமாதி மரணத்தை அடைந்து, ஒரு பல்லாயுஷ்யத்தை உடையவனாயும், பரிவார தேவர்களுடன் கூடினவராயும் நந்தீஸ்வர சதவனாய்ப் பிறந்தான்.

வேட்டை ஸ்வாவும் தர்மத்தைக்கேட்ட முனீஸ்வரரால் சப்தமதினிம் மரணாந்தத்தைக்கேட்டுச் சல்லேகனா விரதங்களைக்கைக்கொண்டு, அசாரசம்சாரச் சித்தத்தினால் மரணத்தை அடைந்து, அந்த அயோத்தியாபுரிப் பட்டணத்து அரசனுக்குப் புத்திரியாகப் பிறந்து, சௌதர்ம சரீரத்தை அடைந்தவளாகிச் சுலோசனை என்று நாமதேயத்தை உடைய யௌவன காலத்தில் அவளுடைய சுயம்வரத்தினால் சமஸ்த ராஜாக்கள் சூழ்ந்துள்ளளவில், நந்தீஸ்வரதேவனால் போதித்த சம்சார வைராக்கியத்தினால் தீக்ஷையைக் கைக்கொண்டு, சல்லேகனா விதியினால் மரணத்தை அடைந்து, தேவகதி அடைந்தான்.

இப்பால், சிரேஷ்டி புத்திரர்கள் தர்ம விஷயத்தினாலே சௌக்கியமாகச் சில வர்ஷங்கள் கழிந்த பின்பு, ஆயுஷ்யாந்தத்திலே சல்லேகன மரணத்தை அடைந்து, சௌதர்ம கல்பத்தில் தேவர்களாய் பிறந்து, மகாமேரு பர்வதங்களில் இராநின்றிருக்கிற அநேக அக்ருத்ருமச் சைத்யாலயங்களில் இராநின்ற, ஜின பிரதிமைகளை வந்தனைகளைச்செய்யப்பட்டவர்களாகி, தேவஸ்திரீகளுடன் சௌக்கியத்தை அனுபவித்து, பின்பு ஆயஸ்யாந்தத்தில் தேவசரீரத்தை விட்டு, கௌசலை என்கிற தேசத்தில் சோபிதமான கௌசலாபுரத்துக்கு ஹேமநாபன் என்று நாமதேயத்தை உடைய ராஜாவானவர் தேவேந்திரனைப்போலே ரட்சித்தார்.

இவருக்குத் தாரணி, என்று நாமதேயத்தை உடையவள் பிராணகாந்தையானவள், சௌக்கிய பிரீதியுடன் உண்டானாள். இவாள் இரண்டுபேருக்கும் முன் சொல்லப்பட்ட தேவர்கள் கர்ப்பத்தை அடைந்து, நவமாவம் வரிபூர்ணமானபின் மது என்று நாமதேயத்தை உடையவனாயும், மற்றொருவன் கைடபன் என்று நாமதேயத்தை உடையவனாகிப் பிறந்தார்கள்.

இவர்கள் ரூப யௌவன சாஸ்திர கலா குணங்களினால் சம்பூர்ணமாய் இருக்கிற புத்திரர்களைப் பார்த்து, ஹேமநாப ராஜாவானவர் வைராக்கியத்தை அடைந்து, மதுவென்று நாமதேயத்தை உடைய மூத்தவன் பேரில் ராஜ்யத்தையும், கைடபன் பேரில்

---

பயோன்மாத=பய உன்மாத, உன்மாதம் - பித்துப்பிடித்தது போன்ற உணர்ச்சி

யௌவராஜ்யத்தையும் ஸ்தாபித்து, போகபரிகிருகங்களை விட்டு, அநேகத்தேவிமார்களுடன் ஜின தீட்சா பிராப்தனாகியபின், சூர்ய சந்திரர்களுக்குச் சமானமாய் இருக்கிற இவாள் இரண்டுபேர்களுக்கும் அநேத ராஜாக்களுடைய சிரசினாலே வணங்கப்பட்ட பாதத்தை உடையவர்களாகி, ராஜ்ய பரிபாலணம் செய்துவருகிற காலத்து ஒரு நாள்.

மதுராஜன், தன்னுடைய தேசத்தை நாசம் செய்யப்பட்ட பீமராஜனுடைய குரூரச் சங்கதியைக்கேட்டுச், சதுரங்க சைன்யங்களுடன் புறப்பட்டு, அநேகத் திவசங்களினால் வழிமார்க்கத்தில் வருகுற மதுராஜனை வரபுரத்துக்கு ராஜனாயிருக்குற கணகரதன் தனக்கு எஜமானன் என்கிற பயத்தினால் தன்னுடைய நயனாபி முகமாக வரப்பட்டவனை எதிர் முகமாகச் சென்று, நமஸ்கரித்து,

"வாராய், ராஜனே! என்னுடைய பட்டணத்தில் ஒரு திவசம் இருந்து, போகவேண்டியது" என்று அழைத்துக்கொண்டு வந்து, அநேகச் சேவக ஜனங்களினால் ஜயமங்கள ஸ்தோத்திரத்தை உடைய அரமணையில் புகுந்து, ஆகாராதி போஜன விஷயங்களை வைத்து, சொர்ணமயமான சிம்மாசனத்திலே,பிரிய வசனத்தினால் உட்கார்ந்தபின்பு, கனகரத ராஜன், ரதி தேவியை ரூபத்தினால் ஜயிக்கப்பட்டவளாயும், சந்திர சஞ்சலமான நேத்ரத்தை உடையவளாயும், சந்திரபாலை என்னும் நாமதேயத்தை உடைய பிராணகாந்தையோடும், ரத்னமயமான பாத்திரத்தில் அநேகக் காணிக்கையாகத் திரவியங்களைக் கொடுத்துப் பூஜித்தபின் மதுராஜன், இவனுடைய தேவியைப் பாத்து, மன்மதனுடைய பாணங்களினாலே ஒருசமயத்தில் அடிப்பட்டு மயங்கினவானிப் பின் சிந்திக்கிறதாவது,

இவளுடைய ரூபத்தை பிரம்மாவானவன் எப்படிச் செய்தானோ? என்றும், ஆச்சரியத்தை அடைந்து, காமாக்கினியினாலே தவிக்கப்பட்டவனாகி இருக்கிற மதுராஜனை, மந்திரியானவன் பார்த்து, என்ன காரணத்தினால் ராஜனானவர் பித்தபுமணாத்தை உடையவன் போலவும், உதறப்பட்ட சரீரத்தை உடையவன் போலவும், திருடப்பட்ட சோரனைப்போலவும், சுடப்பட்ட சரீர காந்தி ஹீனமானவன் போலவும் இராநின்றான் என்று மனசிலே ஆலோசித்துப் படுக்கையான சயன தலத்தை அடைந்து ராஜனைப் பார்த்துச் சொல்லுகுறதாவது,

"வாராய், ராஜனே! உமக்கு முன்போல வஸ்திராலங்காரமான சரீரச் சோபையானது இப்போது இராநின்றதில்லை, ஆகையால் உம்முடைய சித்தத்திலே சத்ருவான பீமராஜனை ஜயிக்க முடியுமோ முடியாதோ என்கிற எண்ணமானது இராநின்றதோ" என்று சொல்லப்பட்ட மந்திரியைப் பார்த்து, ராஜனானவன் சொல்லுகிறான்.

"வாராய், பூஜ்யனே! எனக்குச் சத்ருவினால் உண்டாயிருக்கிற யுத்தரங்கப் பயமானது இராநின்றதில்லை, பின்னை என்ன காரணமெனில் கணகரத ராஜனுடைய சந்திராபாஸையான தேவியினுடைய ரூபத்தைப் பார்த்து, என்னுடைய சித்தமானது,

காமாக்கியினுடைய தகனத்தை அடையாநின்றது" என்று சொல்லப்பட்ட ராஜனைப் பார்த்து, என்னுடைய மந்திரியானவன் சொல்லுகிறான்,

"வாராய், ராஜனே! உன்னுடைய எண்ணத்தில் உண்டாயிருக்கிற கார்யமானது, இகபர பவத்துக்கு விருத்தமாக இராநின்றது. ஆகையால் இந்தக் கார்யமானது உனக்கு யோக்யமில்லை, அல்லது இந்தக் கார்யத்தை முடிக்கவேணுமென்று நிர்ப்பந்தமான எண்ணமானது இருந்தபோதிலும், இப்பொழுது சமயம் இல்லை. ஆகையால், சித்தப் பிராந்தியை விட்டுப், பரிவாரமான சாதுரங்க சைன்யத்தை ரட்சித்து, விரோதியான பீமராஜனை ஜெயித்துப் பட்டணத்தை அடைந்தபிறகு, ஒரு வியாஜ காரியத்தினால் தேசத்திலிராநின்ற ராஜாக்கள் வரவழைத்து, சந்திரஹாசனுடைய புணர்ச்சி போக்யத்தை முடிக்கலாமென்று" சொல்லிய மந்திரி வசனத்தைத் தைரியத்துடன் கேட்டு அடைந்து,யுத்தோன் முகனாகிய கர்ஜனை செய்யப்பட்ட அநேகப் பேரியை அடித்து, கனகரதனுடைய அனுமதியை அடைந்து, அநேகத் தேசங்களையும் வனங்களையும் கடந்து, பீமராஜனுடைய தேசத்தை அடைந்து, தன்னுடைய பலத்தினால் அவனுடைய சதுரங்க சேனையை ஜெயித்து,ராஜனை நாகபாசத்தினால் கட்டி, அவனுடைய ராஜ்யத்தை மந்திரிகளுக்கு ஸ்தாபித்துத், தன் பட்டணத்தை வந்து, சத்ருவாகிய பீமராஜனைச் சிறையில் வைத்துப் பின்பு சிலநாள் சென்றபின், மந்திரியானவன் மதுராஜனோடு ஆலோசித்து வசந்தோத்சவங்களைச் செய்யவேணும் என்கிற வியாஜத்தினால் ஒரு வனத்தை நிர்மாணம் செய்து, தேசத்தில் இராநின்ற ராஜாக்களையும் குத்திராங்களுடன் வரவேண்டியதென்று அனுப்பட்ட பத்திரிகைகளைப் பார்த்து, கனகரதன் முதலாயிருக்கிற ராஜாக்கள் தங்களுடைய பார்யைகளுடன் வந்தபின், மதுராஜனால் செய்யப்பட்ட வசந்தோர்சவங்களைப் பார்த்துச் சிலநாள் கழிந்தபின், மதுராஜனும் வந்திராநின்ற அநேக ராஜாக்களுக்கு வஸ்திர வாகன ஆபரண தானங்களினாலே மரியாதையைச் செய்வித்து, அவானவாளுடைய களத்திரங்களுடன் ராஜாக்களை அனுப்பிவிட்டுப் பின், கனகரத ராஜனைப் பார்த்து, "வாராய், பூஜ்யனே, உன்னுடைய தேவிக்கு யோக்யமான வஸ்திராபரணங்கள் இப்பொழுது இல்லை. ஆகையால் நீயானவன் தேவியை விட்டு உன்னுடைய பட்டணத்தைக் குறித்து உபத்திரவம் செய்யப்பட்ட சத்ரு ராஜாக்களை ஜெயம் செய்து, ராஜ்ய பரிபாலனம் செய்து இருக்கவேண்டியது, அநேகத்தாதிகளுடன் இந்தப் பட்டணத்திலிருக்கும்படி தேவிக்குச் சொல்லிவிட்டுப் போகவேண்டியதென்று சொல்லிய மது ராஜனுடைய உத்தரவைப் பெற்றுக்கொண்டு, அநேக மரியாதைகளுடன், சீக்கிரமாக அனுப்புகிறேன் என்கிற வார்த்தையினால் நம்பிக்கையை அடைந்து, தன்னுடைய தேவியைப்பார்த்து வாரஸ்திரீகளுடன் இருக்கும்படி செய்துவிட்டு, சம்சய ரகிதனாகத் தன்னுடைய பட்டணாமுகமாகக் கனகரத ராஜன் போனபின்பு, சூர்யனானவன் காமாக்கினியால் தபிக்கப்பட்ட மதுராஜனைப் பார்த்து, சகியாதவனாகிப் பச்சிம சமுத்திரத்தை அடைந்து, பின்பு அந்தகாரங்களினாலே இருளானது மூடினபின்பு, சந்திரனானவன், உதயனாயுள்ளளவில், மதுராஜன் தன்னுடைய தூதினுடைய மூலமாகச்

சந்திரபாஸையைத் தன்னுடைய கிருகத்தில் வரவழைத்து, மனோக்யமான பரிபவ வசனங்களினாலே அங்கீகாரம் செய்து, அவளுடன் காம சௌக்கியத்தை அனுபவித்துப் பின்பு, அந்த இரண்டு பேர்களும் காமசௌக்கியமாகிற காமசமுத்திரத்திலே முழுகப்பட்டவர்களாகிச் செல்லப்பட்ட காலங்களை அறிந்தார்களில்லை.

இவர்களுடைய இஷ்ட விஷய சௌக்கிய வார்த்தைகளைக்கேட்டுக் கனகரத ராஜன், பிராண காந்தையினுடைய சிந்தையினாலே துக்கத்தை அடைந்து, காமச்சிந்தையினால் சித்தபூமணத்தை அடைந்து, பைத்தியக்காரியாகிக் கண்ணீர்த் தாரைகளினால் சொரியப்பட்ட சரீரத்தை உடையவனாகிக் காமாக்னியாகுற பிசாசினாலே ராஜ்யம் ஐஸ்வர்களை விட்டு, "ஹா, பிராண காந்தையே, அநேகப் புத்திரர்களினால் சூழப்பட்டவனாகி, தூளியினாலே 1. மலீமஸமான சரீரத்தை உடையவனாகியும் ஜீர்ணமான வஸ்திரத்தினாலே கண்டத்தில் நின்றும் மாலையாக உடையனாகிற பூமியெங்கும் பிரமிக்கப்பட்டவனாகிக் கொண்டு, அநேகப் பட்டணங்களுடைய மார்க்கத்தை உடையவாகிக் கோசல புரத்தை அடைந்து, ராஜமார்க்க வீதியிலே சந்திரபாஸையினுடைய நாமதேயத்தைச் சொல்லப்பட்டவனாகி, அநேக ஜனங்களினாலே சூழ்ந்து போகப்பட்டவனைச் சந்திரபாஸையினுடைய தாதியானவள் பார்த்து, சந்திரபாஸையினுடைய சமீபத்தில் வந்து,

"வாராய், தாயே! உன்னுடைய வியோகத்தினால் உண்டாயிருக்கிற துக்கத்தினால் சித்த பூமரணத்தை அடைந்து, உன்னுடைய பர்த்தாவானவன் இந்தப் பட்டணத்தினுடைய ராஜமார்க்க வீதியிலே வந்து, இராநின்றாரென்று சொல்லிய தாதியினுடைய வசனத்தைக் கேட்டு, கோபத்தை அடைந்து, சந்திரபாஸையானவள் தாதியைப் பார்த்து, "உன்னால், என்ன கடூரமான வசனம் சொல்லப்பட்டதென்று சொல்லியும் என்னுடைய புருஷன் பூர்ணச்சந்திரனுக்குச் சத்ருசமான முகக் காந்தியை உடையவானயும், மனோக்யமான நேத்ர புருவங்களை உடையவனாயும், தீர்க்கதரமான பெருத்த புஜ ஹஸ்தங்களை உடையவனாயும், அநேக ராஜாக்களினாலே வணங்கப்பட்ட பாதத்தாமரையை உடையவளாயும் மன்மதனை ஜெயிக்கப்பட்ட ரூப சௌந்தர்யத்தை உடையவனாயும் இருக்கப்பட்டவன்.

அப்படி இருக்க, பிதத பூமணத்தை உடைய ஒருவனைப் பார்த்து, என்ன வசனம் சொல்லப்பட்டதென்று கோவித்துத் திரஸ்காரமான வார்த்தைகளைச் சந்திரபாஸையைப்பார்த்துத் தாதியினால் சொல்லுகிறதாவது,

"வாராய், அம்பிகையே! உன்னுடைய புருஷனுக்கு என்ன லட்சணங்கள், நடைகள், வார்த்தை, த்வனிகள் இருக்குமோ, அவைகளெல்லாம் இவனிடத்தில் இருக்கிறதென்று காண்பிக்க அடையாளங்களினால் அவனைப் பார்த்து, சந்திரபாஸையானவள் தாதியைப்பார்த்து, உன்னால் என்ன கடூரமான வசனம் சொல்லப்பட்டதென்று சொல்லியும் என்னுடைய புருஷன் பூர்ணச்

---

1. மலீமஸம் - அழுக்கு

சந்திரனுக்குச் சத்ருசமான முகக்காந்தியை உடையவனாயும் தீர்க்கதரமான பெருத்த புஜத்தை உடையவனாயும் அநேக ராஜாக்களினாலே வணங்கப்பட்ட பாதத் தாமரையை உடையவனாயும் மன்மதனை ஜெயிக்கப்பட்ட ரூபச்சௌந்தர்யத்தை உடையவனாயும் இருக்கப்பட்டவன், அப்படியிருக்கப் பித்தப்பிரமணத்தை உடைய ஒருவனைப் பார்த்து, என்ன வசனம் சொல்லப்பட்டதென்று, திரஸ்காரமான வார்தைகளை உடைய சந்திரபாஸையை பார்த்துத் தாதியினால் சொல்லுகிறதாவது,

"வாராய், அம்பிகையே! உன்னுடைய புருஷனுக்கு என்ன லட்சணங்கள், நடைகள், வார்த்தைகள், த்வனிகள் இருக்குமோ அவைகளெல்லாம் இவனிடத்தில் இருக்கிறதென்று காண்பிக்க, அடையாளங்களினால்அவைகளைப் பார்த்து , சந்திரபாஸையானவள் தன் புருஷனென்றறிந்து, பிராணகாந்தனைப்பார்த்துத் துக்கத்தை அடைந்து, சப்ததச பிராதச மெத்தைகளின் பேரில் கூடமாகத் துயரவார்த்தைகளுடன் அழப்பட்டவனாய் இருக்கிற சந்திரபாஸையினிடத்தில் மதுராஜனானவன், காம விஷயத்தினால் சோபான மார்க்கமாக அவளுடைய சமீபத்தை அடைந்து, காமக்ரீடாச் செய்கையை முன்போலவே புணர்ச்சி செய்யாமல், கோபிக்கப்பட்டவளாயிருக்கிற சந்திரபாஸையுடன் இஷ்ட விஷயகாம வசனத்தை உடையவனாகி, அவளுடன் சப்தபிரசாத மெத்தையின்பேரில் எவ்வளவு காலத்தில் இராநின்றானோ அவ்வளவு காலத்துக்குற் சண்டகர்மன் என்கிற தலைவரனானவன், அந்நியனுடைய தாரத்தைச் சேவிக்கப்பட்ட ஒருவனைக் கட்டிக்கொண்டு, அரண்மனையினுடைய சமீபத்தில் வந்து,

"வாராய், ஸ்வாமியே! அந்நிய ஸ்திரீயைச் சேவிக்கப்பட்டவன் என்னுடைய ஹஸ்தங்களினால் அகப்பட்டிராநின்றான். இவனுக்கு என்ன தண்டனை? " என்று கேட்கப்பட்ட தளவரனனப் பார்த்து, மதுராஜனை கோபத்தை அடைந்து, சொல்லுகிறான்:

"வாராய், தளவரனே! இவனைச் சீக்கிரமாக உயிர்க்கழுமரத்தில் ஏற்றி, சூலாயுதத்தினால் கண்டத்தை மாட்டிக் சொல்லவேண்டியதென்று சொல்லிய உத்தரவின்பேரில் தளவரன் ராஜனுடைய ஆக்ஞா பிரகாரம் செய்தனன். அந்த உயிர்க்கழுமரத்தின்பேரில் தொங்கப்பட்டவனையும் இவனுடைய ஆக்ஞா வசனத்தையும் சந்திரபாஸையானவள் பார்த்தும் கேட்டும் குபிதமான மனசினால், மதுராஜனைப்பார்த்து,

"வாராய், ராஜனே! இவன் என்ன குற்றத்தினால் தண்டிக்கப்பட்டதென்று கேட்கப்பட்ட சந்திரபாஸையைப் பார்த்து, "வாராய், தேவியே, அந்நியனுடைய களத்திரத்தைப் புணர்ச்சிபோகம் செய்யப்பட்டதினால், இவனை விசித்திரமான ஹிம்சா வதையினாலே கொல்லப்பட்டானென்று சொல்லப்பட்ட மதுராஜனைப் பார்த்து சந்திரபாஸையானவள் சொல்லுகிறாள்.

"வாராய், ராஜனே! இந்தப் பட்டணத்தில் அவனைவிட அந்நியருடைய களத்திரத்தை அபகரிக்கப்பட்டவன் ஒருவனுமில்லையோ என்றும் மர்மஸ்தானத்தைப் பேதிக்கப்பட்ட சந்திரபாஸையினுடைய வசனத்தை கேட்டுச் சொல்லுகிறான்.

''வாராய், சந்திரபாஸையே! நான் நியாயமார்க்கத்தில் சமர்த்தனாயிருந்து உன்னை ஸ்வீகரிக்கப்பட்டவனாக இராநின்றேன். மேலும் பெருத்திராநின்ற நெருங்கின ஸ்தனபாரங்களினாலே வணங்கப்பட்டவர்களாயும் மனோக்யமான ரூப சௌந்தர்யங்களை உடையவர்களாய் இருக்குற அநேக ஸ்திரீமார்கள் எனக்கு இருந்தும், யாதொரு மோகக் கர்ம வசத்தினாலே நித்யமான காரியமானது என்னால் செய்யப்பட்டதென்றும் நிந்தித்தும் மறுபடியும் சொல்லுகிறான், அநேகக் களத்திரங்களும் பரிசனமும் புத்திரர்களும் யௌவனமும் பஞ்சேந்திரிய விஷயங்களும் தனமும் பந்துக்களும் தெளிவான சித்தமும் சௌக்கியமும் ஆயுஷ்யமும் இவைகள் ஸ்திரமில்லை என்று வைராக்கிய பரிணாமத்தை அடைந்து, சம்சார விஷயத்தை ஆசாரமென்று தியானிக்கப்பட்ட மதுராஜன் தன்னுடைய கிருகத்தில் சில திவசங்கள் இராநின்ற காலத்தில் ஒருநாள், விமலவாகனரென்று நாமதேயத்தை உடைய முனீஸ்வரரானவர், ஆகார நிமித்தமாக சார்யா மார்க்கத்தினால் ராஜ அரண்மனையைக் குறித்து வரப்பட்டவரை மதுராஜனானவர் உத்கிருஷ்டமான சந்தோஷப் பரிணாமத்தினால் நவ புண்யக்கிரமத்தில் நின்றும் எதிர்கொண்டுவந்து நமஸ்காரப் பூர்வாகமாக முனீஸ்வரர் பொருட்டு தோஷரகிதமான பவித்ரதரமான ஆகாரத்தைக் கொடுக்கப்பட்டுள்ளளவில் அந்தமான பலத்தினின்றும் சீக்கிரமாகக் கிடைக்கிறதுக்கு அரிதான பஞ்சாஸ்சர்த்யங்களை அடைந்தார்.

அந்த விமலவாகன முனீஸ்வரரானவர் அஷ்டவிதக்கர்ம நிர்மூலனம் செய்து கேவல ஞானத்தை அடைந்துள்ளளவில் சதுர்விதத் தேவர்கள் கேவலபூஜை செய்து, சமவசரண விபூதியை நிர்மாபணம் செய்து, அஷ்ட மகாபிராதிஹார்யங்களினாலே சோபிதமான கேவல பூஜா ஐஸ்வரியத்தை வனப்பாலகனால் மதுராஜனை சந்துஷ்டனாகி, அந்தப்புர ஸ்திரீகளுடன் அநேகராஜாக்களினாலே பரிவிரதனாகி, ஸ்வாமியை வந்திக்கிறதுக்கு, சமவசரணத்தை அடைந்து, கிரிப் பிரதட்சிணம் செய்து, ஸ்வாமியைப் பார்த்து, அநேக ஸ்தோத்திர சதங்களினாலே ஸ்துதித்து, ஜின தர்மத்தைக் கேட்டு, சம்சார வைராக்கியத்தை அனுஜனான கைடபனுடன் ஜினதீட்சா சமுத்திரனுடைய கரையை அடைந்து, சமாதி மரணத்தை அடையப்பட்டவர்களாகி, அச்யுத கல்பத்திலே இரண்டு பேர்களும் தேவர்களானார்கள்.

சந்திரபாஸையும், வரபத்ம ஆர்யாங்கனையிடம் தீக்ஷித்து, தேவத்வத்தை அடைந்து, ஆயுஷ்யாந்தத்தில் மரணத்தை அடைந்து, பர்வதப் பிரதக்ஷிண ஸ்ரேணியில் கிரிப்பட்டணம் என்று நாமதேயத்தை உடைய பட்டணத்தில் ஹரிராஜனுக்குப் புத்திரியாய்ப் பிறந்தாள்.

மதுராஜனுடைய பட்டமகிஷியான தேவியானவள் தீக்ஷித்து, அச்யுத் கல்பத்தில் தேவனாகிப் பிறந்து, விஜயார்த்த பர்வதபிரதக்ஷின 1. ஸ்ரோணியில் வித்யாதர ராஜனுக்குப் புத்திரியானாள்.

அச்யுத கல்பத்தில் மதுபூசரண் என்கிற தேவன் சௌக்கியத்தை அனுபவித்து, ஆயுஷ்யத்தை விட்டுத் துவாராபுரத்துக்கு ராஜனான கிருஷ்ண பூபதிக்கும் ருக்மணி மகாதேவிக்கும் பிரத்யும்னன் என்கிற புத்திரனாகப் பிறந்தான்.

கைடபசரண் என்கிற தேவன், அச்யுத கல்பத்தில் சௌக்கியத்தை அனுபவித்து வந்து, கிருஷ்ண பூபதிக்கும் ஜாம்பவதி என்கிற தேவிக்கும் புத்திரனாக வரக்கடவள், கனகரதன் என்கிற ராஜனானவன் சதுஸ்ருதி பூமணமான சம்சாரத்தில் தீர்க்ககாலம் பரிபிரமித்து மியாத்வ தபோபலத்தால் தூமகேது என்கிற அசுரனாகப் பிறந்துவந்து, பூர்வஜன்மத்தில் உண்டாயிருக்கிற களத்திரத்தை ஸ்வீகரிக்கப்பட்ட வைரானுபந்தத்தால் பாலகனை, ஸ்வீகரித்து தக்ஷகசிலையில் வைத்துவிட்டுப்போனபின்பு, காலசம்பர ராஜனானவன் காஞ்சனமாலை என்கிற தேவியுடன் கூடி புத்திரனை ஸ்வீகரித்துத் தன்னுடைய பட்டணத்தை அடைந்து புத்திரனானவன் வளர்ந்து இராநின்றனன்.

இந்தப்பிரகாரம் பத்மநாபச் சக்கரவர்த்தியினுடைய ஹஸ்தத் தலத்தில் இராநின்ற நாரதரானவர் பிரத்யும்ன புத்திரனுடைய பவாந்தர வைர பந்தத்தினுடைய விசேஷங்களைக் கேட்டு, சீமந்தர சுவாமினுடைய பாதத்துவயத்தைப் பூஜித்துப் புத்திரனைப் பார்க்கிறதின் பொருட்டு விஜயார்த்த பர்வதத்தை அடைந்து, காலசம்பர ராஜனுடைய கிருகத்தில் வளரப்பட்ட புத்திரனைத் தீர்க்கநேரம் பார்த்து, ஆசிர்வாத வசனங்களைக் கொடுத்து, விஜயார்த்த பர்வதத்தை விட்டுச் சந்தோஷமான சித்தத்தினால் துவாராபுரத்தை அடைந்து, கிருஷ்ணருக்குப் புத்திரனுடைய இருப்பிடமான வார்த்தையினாலே சந்தோஷம் செய்துவைத்துப்பின், அந்தப்புரத்தை அடைந்து, புத்திரனுக்கு மாதாவான ருக்மணி மகாதேவிக்குப் புத்திரனுடைய பவாந்தரங்களையும் இருப்பிடத்தையும் ஆயுஷ்ய பிரமாணத்தையும் சோடசலாபங்களுடன் வருகிற காலத்தில் உண்டான அடையாளக் குறிகளையும் சொல்லப்பட்டிருக்கிற நாரத மகாமுனீஸ்வரரானவர், ருக்மணி மகாதேவிக்குச் சந்தோஷம் செய்துவித்து, ஆசிர்வாத வசனத்துடன் ஆகாரத்தை அடைந்து, ஆகாச கமனமாக யதேஸ்டானத்துக்குப் போய்விட்டார்.

அதகாளசம்பர ராஜனுடைய கிருகத்தில் பாலச்சந்திரனைப்போல் விருத்தியை அடையப்பட்டிருக்கிற புத்ரனானவன் அநேகச் சத்ரு ராஜாக்களை ஜெயம் செய்து, அநேகச் சம்பத்துகளுடன் சத்ருசாமராதித்வஜங்களுடன் புடைசூழ்ந்து, அநேக ஜனங்களுடைய நேத்ரங்களுக்கு மனோகர ரூபமான யௌவன வயசுடன் தேவேந்திரனைப்போலே பட்டணத்தை ஜயபேரி வாத்யங்களுடன் வந்து, நமஸ்கரிக்கப்பட்ட பிரத்யும்ன புத்திரனைப் பார்த்து, மந்திரியினுடைய அனுமதியுடன்,

---

ஸ்ரோணி - மூலை

"வாராய், புத்திரனே! வனத்திலே என்னாலே தேவியினுடைய முன்பாகக் கொடுக்கப்பட்டிருக்கிற யௌவராஜ்யத்தை உனக்கு இப்பொழுது கொடுத்தேனென்று சகல ஜனங்களுக்குத் திரவிய விசேஷங்களைத் தானமாகக் கொடுத்த மகோத்சவ பூர்வகமாகப் பிரத்யும்னபுத்திரன் பொருட்டு யௌவராஜ்ய பதத்தைக் கொடுத்தான்.

இந்தப் பிரகாரம், யௌவராஜ்யச் சௌக்கியத்துடன் கம்பீரமான ரூபலாவண்யத்தை உடைய குமாரனைப் பார்த்து, காலசம்பர ராஜனுடைய பட்டமகிஷியான காஞ்சன மாலைக்குப் பரதரமான தேவிமார்கள், தங்கள் தங்களுடைய புத்ரமார்களை யௌவராஜ பதத்தைச் சுவீகரிக்கப்பட்டிருக்கிற பிரத்யும்ன குமாரனைக் கொல்லவேண்டியதென்று சொல்லிய வசனத்தினாட்ல சகலபுத்திரர்கள் குமரனுடைய சயனத்திலேயும், ஆசனத்திலேயும், வஸ்திரத்திலேயும் ஸ்நானம் செய்யப்பட்டிருக்குற ஜலபானம் முதலான ஆகார பதார்த்தங்களிலேயும் மரணத்தை அடைவிக்கும்படியான ஔஷத விசேஷங்களைச் செய்தபோதிலும் பிரத்யும்ன குமாரனுடைய அதிகமான புண்யவசத்தில்நின்றும் அபகாரமான ஆபத்துகள் நிஷ்பிரயோஜனம் ஆகிவிட்டன.

மற்றொரு தினத்தில், வஜ்ரதம்ஷ்டிரன் முதலான பஞ்சசதப் புத்திரர்கள்,ஒருவர்க்கொருவர் ஆலோசித்துக்கோபத்தை உடையவர்களாகி, வக்ரதரமான புத்தியுடன் குமாரனை அழைத்துக்கொண்டு, விஜயார்த்த பர்வத்துடைய சிகரத்தை அடைந்து, சரத்காலச் சந்திரனுக்குச் சத்ருசமான ஜினேஸ்வரனுடைய சைத்யாலயத்தை அடைந்து, கிரிப்பிரதட்சிணம் செய்து, தேவேந்திரர்களில் நமஸ்கரிக்கப்பட்ட ரத்னமயமான ஜினப்பிரதிபிம்பத்தைப் பார்த்து, வெளிமண்டபத்தை வரப்பட்டிருக்கிற சகல பேர்களும் குமரனுடன் சூழ்ந்திராநின்ற சமயத்தில், வஜ்ரதம்ஷ்ட்ர புத்ரனானவன்,

"வாராய், தம்பிமார்களே, இந்தக் கோபுர துவாரத்தில் யாதொருவர் பிரவேசிக்கிறார்களோ அவன் பலவந்தனென்றும் புருஷமுக்யனென்றும் எப்போதும் வித்யாதர ஜனங்கள் சொல்லுகிறார்கள். அதுகாரணத்தினால் உங்களுக்கு முன்னாலே உன்னதமான கோபுரத்தின்மிசை நான் பிரவேசிக்கிறேனென்று சொல்லிய வசனத்தினால், சகலபுத்திரர்களும், வஜ்ரதம்ஷ்டிரனைப் பார்த்து, கபடப் புத்தியினால் ஒருவர்க்கொருவர், உன்னால் முடியாது, நான் போகிறேனென்றும் சொல்லிய கோலாஹல சப்தத்தைக்கேட்டு பிரம்யும்ன குமாரன் அவர்களுடைய எண்ணத்தை அறியாமல் நான் ஏறுகுறேன் என்று தைர்ய வசனத்தை உடையவராகக் கோபுரமிசை விளங்கப்பட்ட துவாரத்தைப் பிரவேசித்து, எவ்வளவு காலத்தினுள் இராநின்றாரோ அவ்வளவு காலத்துக்குள்ளாக அதி ரமணீயமான என்னுடைய ஸ்தானத்தில் எவன் பிரவேசித்தானென்று ஒரு தேவனானவன் பெருத்த ஆகாரத்தை உடைய சர்வ ரூபத்தை உடையவனாகிச் சீறப்பட்ட சப்தக் கூச்சலுடன் வந்து, "அடா துஷ்டனே"

என்றும் "அடா நீசனே" என்றும் "என்னுடைய ஸ்தானத்தில் ஏன் பாதத்தை வைத்தாய்" என்றும் குரூர வசனத்தினாலே அதட்டப்பட்டிருக்கிற பயங்கரமான சர்வ நேத்ரத்தைப் பார்த்து, பிரத்யும்ன குமாரரானவர், யுத்தோனுமுகராகி, அந்தச் சர்பத்தைச் சீக்கிரத்தினாலே ஜெயிக்கப்பட்டிருக்கிற குமாரனுடைய பாதத்தை நமஸ்கரித்து, நாகதேவன் ஹஸ்தத்தைக் குவித்துக்கொண்டு சொல்லுகிறான்.

"வாராய். ஸ்வாமியே, உன்னதமாயிருக்குற இந்தக் கோபுரத்திலே நெடுங்காலமாக ஸ்ததியை அடைந்திராநின்ற நான், உனக்குச் சமஸ்தமான கதாவதாரத்தைச் சொல்லுகிறேன். அது எப்படியெனில், இந்த விஜயார்த்த பர்வத்தில், பிரசித்தமான அளகாபுரம் என்கிற பட்டணத்துக்கு அதிபதியான கனகநாப ராஜனுக்கும் அனிலா தேவிக்கும் லோகத்தினின்றும் நழுகப்பட்ட ஒரு தேவனானவன் கர்பத்தில் அடைந்து, ஹிரண்யநாபன் என்று நாமதேயத்தை உடைய புத்ரனாக உண்டானான்.

பிதாவானவர், வித்யாதரராஜ விபவத்தைத் தீர்க்ககாலம் அனுபவித்து, சம்சார 1. விபவத்தை ஷண விநாசமென்று பஞ்சேந்திரிய விஷயத்திலே விருத்தமான சித்தத்தை உடையவனாகிப் புத்திரன் பேரில் ராஜ்ய பாரத்தை வைத்துவிட்டுப் பிஹிதாஸ்ரவ முனீஸ்வரரை நமஸ்கரித்து, ஜின தீஷையை அடைந்து, சுக்லத்தியான மாகிற அக்னி ஜீவாலைகளினாலே கர்மமாகுற வசனத்தை பஸ்மீகரமாக்கி, மோஷத்தை அடைந்தார்.

ஹிரண்யநாபன் என்கிற புத்ரனானவன் ராஜ்ய விபவத்தை அடைந்து, உன்னதமாயிருக்கிற சப்த பிராசாத மெத்தையின் பேரில் தன்னுடைய ஸ்திரீமார்களினாலே பரிவிரதனாயிருக்கிற காலத்தில் ஆகாசத்திலே விசேஷமான சேனைகளுடன் போகப்பட்டிருக்கிற அசுரதேவனுடைய ஐஸ்வர்யத்தைப் பார்த்து, வித்யாதர ராஜவிபவத்தை மூரப்பட்டதென்று அபிமானத்தை உடையவனாகி, அனுஜனான தம்பியின் பேரில், ராஜ்ய பாரத்தை வைத்துவிட்டு, சித்தாயதனச் சைத்யாலயத்தை அடைந்து நிரயோதச சங்கியைகளுக்கு சத்ருசமான தபசை அனுஷ்டித்துப் புருரோகிணி முதலான மந்திர சமூகத்தைச் சாதித்து, தீர்த்தங்கரருடைய காலத்தில் அனுஜனுடைய அனுமதியால் ராஜ்யத்தைச்செய்தான்.

மறுபடி இந்த ஹிரண்யநாப ராஜாவானவன் நேமி தீர்த்தங்கரருடைய சமவசரணத்தில், தீக்ஷையை அடைகுற சமயத்தில் புருரோகிணி முதலான மந்திர சமூகமானதும் அவனைப் பார்த்து, எங்களுக்கு யஜமானனைச் சொல்லிவிட்டு, தீஷையைக் கைக்கொள்ள வேண்டிதென்று நிர்ப்பந்தமான இந்த மந்திர சமூகங்களுக்கு எவன் எஜமானன் என்று கேட்கப்பட்டவனுக்குச் சொல்லுகுறதாவது,

---

*1.* விபவம் - நலமான செயல்.

ஹரிவம்சத்தில் உத்பன்னமான நேமி தீர்த்தங்கரருடைய காலத்தில், கிருஷ்ண பூபதிக்குப் புத்திரனான பிரத்யும்ன குமாரன் இந்தப் புருரோகிணி தேவதை முதலான மந்திரங்களுக்கு யஜமானனாகக் கடவதென்று சொல்லப்பட்ட ஜினேஸ்வரருடைய வசனத்தைக்கேட்டு, ஹிரண்யனானவன் மந்திரி சமூகத்தைக் குறித்து, இந்த சித்தாயதனச் சைத்யாலத்துடைய பிராகாரக் கோபுரத்தின் மிசை, பராக்கிரமத்தினாலே கர்வத்தினால் ஏறப்பட்டவன், உங்களுக்கு யஜமானனாகக் கடவதென்று என்னிடத்தில் கொடுத்து, அவன் வருகிற காலத்தில், யுத்தோன்முகப் பரீக்ஷையைப் பார்த்துக் கொடுக்கவேண்டிதென்று ஆக்ஞை செய்துவிட்டுத் தீட்சையை அடைந்து, அனந்த ஞானாதி ஐஸ்வர்யத்துடன் மோட்சத்தை அடைந்துவிட்டார்.

அன்றுமுதல் இவ்வளவு காலப்பர்யந்தம் மந்திர சமூகத்தை ரட்சித்து இராநின்ற நான், இப்பொழுது உனக்கு கொடுத்துவிட்டேனென்று சொல்லி, மந்திர சாதனமாக உபதேசித்தையும் ரத்னங்களினால் செய்யப்பட்டிருக்கிற மகுடகிரி கடகத்தையும் குடுத்து, நாகதேவன் நேமி தீர்த்தங்கரர் காலமுதல் உனக்கு ஊழியக்காரனாக இருக்கிற எனக்கு,என்ன ஏவலென்று கேட்கப்பட்டவனுக்குப் பிரசஸ்தமான அங்கீகாரப் பூஜ்ய வசனத்தைச் சொல்லிவிட்டு நாகதேவனால் கொடுக்கப்பட்ட மகுடத்தைத் தரித்துக்கொண்டு, கோபுரத்தைவிட்டு இறங்கிவராநின்ற பிரத்யும்னகுமாரனைப் பார்த்து, வஜ்ரதம்ஸ்ட்ர முதலான வித்யாதர புத்திரர்கள் வாடப்பட்ட அயோமுக நேத்ரத்தை உடையவர்களாகியபின், ஒருவர்க்கொருவர் ரகசியமாக ஆலோசித்துக் காளகுகை என்று நாமதேயத்தை உடைய பர்வதாபிமுகமாகக் குமாரனை அடைவித்து, பகு தூரத்தில் உட்கார்ந்து சொல்லுகிறார்கள்,

இந்தப்பர்வதக் குகையை யாதொருவன் சீக்கிரமாகப் பிரவேசிக்கிறானோ அவனுக்கு அநேக இஷ்டமான வஸ்திராலாபங்கள் வரப்பட்டதென்று சொல்லிய புத்திரர்களுடைய வசனத்தைக் கேட்டு, பிரத்யும்ன குமாரன் சந்துஷ்டனாகி, வஜ்ரபாதத்துக்குச் சமானமாகிய சப்தத்தை உடைய குகையைக் கிருகத்தைப்போல் பிரவேசிக்கப்பட்ட குமாரனைப்பார்த்து, ராஷஸனானவன் ருதிரத்தை அருணதரமான நேத்ரத்தை உடையவனாயும், கோபத்தினால் தந்தங்களைப் பிடிக்கப்பட்டவனாயும், கிருஷ்ணவர்ணமான பெருத்த சரீராகாரத்தைத் தரித்துக்கொண்டு வந்து, குமாரனைப் பார்த்து, என்னுடைய புஜத்தினாலே ரஷிக்கப்பட்டிருக்கிற குணமானது, உன்னுடைய கர்ணத்துவாரத்தில் கேட்கப்பட்டதில்லையோ என்று,

"வாராய், அவவித்ரனே! பாதத்துடைய தூளியினாலே பவித்ரதர என்னுடைய குகையை ஏன் வந்தாயென்று சொல்லப்பட்ட ராக்ஷஸனுடைய பௌருஷ வசனத்தைக் கேட்டு மிகவும் கோபத்தை உடையவனாகி இருக்கிற பிரத்யும்ன குமாரன், ராக்ஷஸனைப் பார்த்துப் பரிகாச வசனத்துடன்,

"வாராய், துர்ஜனே! ஏன் வீணாகச் சபதம் செய்கிறாய்? யுத்தரங்கத்திலே பிரீதியானது இராநின்றதாகில், காலதாமசம் இராமல் வரக்கடவதென்று சொல்லிய வசனத்தினால், ராக்ஷஸனானவன், குமாரனைப் பார்த்து, "ஹே, வாராய், அஞ்ஞானியே, யமனுடைய கிருகத்தை அடைகுறத்துக்கு சமானமானது இருக்கும் பக்ஷத்தில், யுத்தோன்முகனாக வரக்கடவதென்று சொல்லப்பட்ட ராக்ஷஸனுடைய வசனங்களினால் இரண்டு பேர்களுக்கும் வஜ்ரபாதத்துக்குச் சமானமாய் இருக்கிற ஹஸ்தங்களுடைய முஷ்டி பந்தங்களினாலே யுத்தமானது உண்டாச்சுது. இந்தப் பிரகாரம் யுத்தரங்கம் செய்யுங்காலத்தில் அபஜயத்தை அடையப்பட்டிருக்கிற ராக்ஷஸனானவன் குமாரனுக்குச் சந்தோஷ மனோக்யமான சாமர துகளத்தையும் தவளத் சத்ரத்தையும் வசுநந்தகம் என்னும் நாமதேயத்தை உடைய கட்கத்தையும் புஷ்பமயமான துவஜத்தையும் கொடுத்தார்.

இந்தப் பிரகாரம் ராக்ஷஸனுடைய பாதசேவா புரஸ்கரமான அநேக லாபங்களை அடைந்து, வரப்பட்டிருக்கிற குமாரனைப்பார்த்துக் காளசம்பர ராஜனுடைய புத்ரர்கள், மற்றொரு கபடப் புத்தியினால் அபகாரத்தைச் செய்கிறத்துக்கு அத்தியந்த பயங்கரனான ராஜனுடைய நாகக் குகையை அடைந்து பகுதூரத்தில் உட்கார்ந்து இருந்த குகையை யாதொருவன் பிரவேசிக்கிறானோ அவன் சௌக்யத்தை அடையக்கடவன் என்று சொல்லப்பட்ட புத்ரர்களுடைய வசனத்தைக்கேட்டுப் பிரத்யும்ன குமாரன் அந்த நாகக்குகையைப் பிரவேசித்து யுத்தரங்கத்தினாலே சர்வத்தை ஜெயம் செய்து, மிருதுதரமான சிம்மாசனத்தையும், சர்ப்பரூபமான சயன மெத்தையையும் வீணையையும், பாதரட்சையான ஒரு ஜோடியையும் சாதுரங்க சைன்யங்களையும் ரக்ஷிக்கப்பட்டு அநேக வித்யைகளையும் அடைந்து சந்தோஷமான சித்தத்தினால் வரப்பட்ட குமாரனைப்பார்த்து, கபடப் புத்தியை உடைய பஞ்சசதப் புத்ரர்கள் பயத்தைக் கொடுக்கப்பட்டதாயும், தேவனால் ரக்ஷிக்கப்பட்டிருக்கிற வாவியை அடைந்து, பகு தூரத்திலும் உட்கார்ந்து, யாதொருவன் இந்த வாவியை அடைந்து, ஸ்நானம் செய்யப்பட்டவனுக்கு லோகத்துக்கு யஜமானனாக போகச் சம்பத்துக்களுடன் ஆகக் கடவதென்று சொல்லிய வசனத்தினால் குமாரன் சந்தோஷச்சித்தத்துடன், கஜேந்திரனைப் போல் தடாக வாவியை அடைந்து, ஸ்நானம் செய்யப்பட்டுள்ளளவில்,

ஒரு தேவனானவன், குமாரனைப்பார்த்து, "வாராய், மூடனே! உன்னாலே இப்பொழுது என்னுடைய தடாக ஜலத்தில் ஸ்நானம் செய்யப்பட்டதென்று சொல்லப்பட்ட நித்யதரமான வசனங்களினால் கர்ஜய சப்தத்துடன் வரப்பட்டவனை யுத்தரங்கக் கிரமத்தினால் ஜெயிக்கப்பபட்ட குமாரனைப் பார்த்து, சந்தோஷச்சித்தத்தினால், மகரத்வஜத்தைக் கொடுத்ததினாலே மகரதேசதனன் என்று நாமதேயத்தை உடையவனாகி வரப்பட்ட குமாரனைப் பார்த்து, வக்ரதரமான புத்தியையுடைய புத்ரர்கள் அவ்விடத்தில் நின்று புறப்பட்டு, அக்னி

குண்டத்தைப்பார்த்து, இந்த அக்னி குண்டத்தைப் பிரவேசிக்கப்பட்டவன் வீதிபரியாகக் கடவனென்று சொல்லிய வசனத்தினால் குமாரன் அக்னி ஜ்வாலையினால் கூடியிராநின்ற குண்டத்தைப் பயரஹிதனாகிப் பிரவேசித்தான்.

அப்பொழுது, அக்னி குண்டத்தை யஜமானனாயிருக்கிற அசுர தேவனானவன் கோபத்தினாலே ஹீங்கார வசனத்தினாலே பயங்கரமான ரூபத்துடன் வந்தவனை யுத்தத்தில் ஜெயிக்கப்பட்டிருக்கிற குமாரனை நமஸ்கரித்து அக்னியிலே தோய்க்கப்பட்டிருக்கிற வஸ்திரத்தை அடைந்து வரப்பட்ட குமாரனைப் பார்த்து, குடிலமான சைகையுடைய புத்ரர்கள் அவ்விடத்தைவிட்டுப் போகி எப்பொழுதும் ஒன்றோடென்று கர்ஜனை சப்தத்துடன் இடிக்கப்பட்டிருக்கிற மேஷங்களுக்குச் சமானமான இந்த இரண்டு பர்வதத்தினுடைய ரந்திரத்தில் யாதொருவன் பிரவேசிக்கிறானோ, அவனுக்கு லாபங்கள் உண்டாகும் என்றும் சொல்லிய வசனத்தைக் கேட்டுப் பிரத்யும்ன குமாரன் பிரவேசிக்கின்ற காலத்தில், கர்ஜன சப்தத்துடன் வேகமாக வரப்பட்டிருக்கிற பர்வதத்துவயத்தை ஹஸ்தத்தினுடைய முழங்கையினாலே இடிந்த காலத்தில் பயப்பட்டு, நமஸ்கார பூர்வமாக மனோக்யமான கர்ண குண்டத்வயத்தைக் கொடுத்துப் பிரிய வசனத்துடன் அனுப்பப்பட்ட குமாரனைப் பார்த்து, அநேகப் புத்தியையுடைய புத்திரர்கள் குமாரனைச் சூழ்ந்துகொண்டு அவ்விடத்தினின்றும் புறப்பட்டுப் போகி, மாமரத்தினுடைய சமீபத்திலடைந்து இந்தப்பிரக்ஷத்தினுடைய ருசிதரமான பலத்தை யாதொருவன் ஸ்வீகரித்து, ரக்ஷிக்கிறவன் எப்பொழுதும் யௌவன வயசுடைய ரூபத்தை அடைந்து இருப்பானென்று சொல்லிய வசனத்தைக்கேட்டு பிரத்யும்னகுமாரன், ஸந்துஷ்டனாகிச் சூத விருட்சத்தின் பேரிலேறி, பக்குவத்தினால் ரமணீயமான பலத்தைப் பக்ஷிக்கப்பட்ட குமாரனைப் பார்த்து, தனதேவன் பாணரூபத்தையுடையவனாகி கோபத்தினால் பயங்கரப் பார்வையுடன் அதப்பட்ட சப்தத்தைப் பார்த்து, பிரத்யும்ன குமாரன் குரங்குகளுடன் யுத்தத்தைச் செய்து, ஹஸ்தத்தினால் வாலைப் பிடித்து, பூமியில் ஆகாச மார்க்கத்தில் சுழற்றி அடிக்கிற காலத்தில் யட்ச தேவனானவன் தன்னுடைய ரூபத்துடன் குமாரனை நமஸ்கரித்துப் புஷ்பமாலையும், கிரீடத்தையும், ஆகாசத்தில் போகப்பட்ட பாதரக்ஷத்துவத்தையும் கொடுத்துச் சந்தோஷ வசனத்துடன் அனுப்பப்பட்டிருக்கிற குமாரனைப் பார்த்து, அநேக ராஜபுத்திரர்கள் அவ்விடத்தில் நின்றும் புறப்பட்டு விளாம் விருட்சங்களினால் சூழ்ந்திராநின்ற கபித்த வசனத்தைப் பார்த்து, யாதொருவன் இந்த வனத்தைப்பிரவேசிக்கிறானோ அவனுடைய ஹஸ்தத்தில் லோகப் பிரபுத்வமான ராஜேந்திர பதவியானது வருமென்று சொல்லிய வசனத்தைக் கேட்டு, பிரத்யும்னகுமாரனானவன் சந்தோஷச் சித்தத்துடன் பிரவேசித்த பொழுது அஞ்சன பர்வதத்துக்குச் சமானமான கிருஷ்ண வர்ணத்தை உடைய கஜ ரூபத்தை தரித்து, ஒரு தேவனானவன் கோபத்துடன் கூடிய யானையைத் தன்னுடைய வசமாக்கின குமாரனைப் பார்த்து,

உனக்கு எப்போதும், வாஞ்சிதார்த்தத்தைக் குடுக்கப்பட்டிருக்கிற வாகன கஜமாக இருக்கிறேன் என்று சொல்லிய வசனத்தினால் அனந்தத்துடன் வரப்பட்டவன் வரப்பட்டிருக்கிற குமாரனைப் பார்த்து, இவன் மரணத்தை அடையாமல் லாபத்துடன் வருகிறானென்று வியசனத்துடன் கூடியிராநின்ற கசர ராஜபுத்திரர்கள் மறுபடி கிருகத்தில் நின்றும் குமாரனை இட்டுக்கொண்டு தூரத்திலிராநின்ற சர்பத்தினால் துவாரங்களுடைய புற்றைப் பார்த்து யாதொருவன் இந்தப் புற்றின் பேரில் ஏறிச் சிலநேரம் இருந்துவருகிறவனுக்கு லாபங்கள் கிடைக்குமென்று சொல்லிய வசனத்தினால், குமாரனானவன் பய ரகிதனாகி, வீர்யப் பராக்கிரமத்தினால் வேகத்துடன் போகி, அசுர தேவனானவன் சர்ப்பாக்ருதியை உடையவனாகி, சீறப்பட்ட பயங்கரமான சப்தக்கூச்சலுடன் எழுப்பப்பட்ட புஜங்கத்தைப் பார்த்து, பயரகிதனாகிப் பாதத்தினால் மெறித்துச் சௌர்ய பராக்கிரமத்தை அடைந்திராநின்ற குமாரனைப் பார்த்து, அசுரதேவன் தன்னுடைய ரூபத்துடன் வந்து, நமஸ்கரித்து, யுத்தரங்கத்தில் பாண மழைகளினாலே ஜயத்தைக் கொடுக்கப்பட்டிருக்கிற புஷ்ப சாபத்தையும், அநேக கத்திகளையும் ரத்னக்கவசங்களையும் நவரத்னங்களினால் இழைக்கப்பட்டிருக்கிற சிந்திதா ரூபக் குணங்களை உடைய முத்ரை மோதிரத்தையும் அடைந்து, சந்தோஷத்துடன் சரீராலங்காரத்தினால் வரப்பட்டிருக்கிற குமாரனைப் பார்த்து கபடப் புத்தியை உடைய புத்ரர்கள் அவ்விடத்தில்நின்றும் புறப்பட்டுச் சப்தங்களுடன் கூடியிராநின்ற பர்வத சமீபமடைந்து,

யாதொருவன் இந்தப் பர்வதச் சிகரத்தைப் பிரவேசிக்கிறானோ, அவனுக்கு அநேக ஐஸ்வர்யங்களை அடைவான் என்று சொல்லிய வசனங்களைக் கேட்டுக் குமாரன் சந்தோஷத்துடன் ஏற்பட்ட காலத்தில், கோபத்துடன் வரப்பட்டிருக்கிற பயங்கர ரூபமான தேவனை புஜ யுத்தத்தினாலே அபஜயத்தை அடையப்பட்டிருக்கிற தேவனானவன், கண்டாபரணத்தையும் உத்திருஷ்டமா இருக்கிற கடகத்துவமும், கடிசூத்திரமும் அங்க பூஷணத்தையும் குடுத்து, நமஸ்கார பூஜா வசனத்துடன் வரப்பட்டிருக்கிற குமாரனைப்பார்த்து, வைரப் புத்தியை உடைய புத்திரர்கள், அவ்விடம் நின்றும் புறப்பட்டு, வராஜ பர்வத்தை அடைந்து,

யாதொருவன், சப்தமயமாக இருக்கிற இந்த பர்வதத்தைப் பிரவேசிக்கிறானோ, அவனுக்கு அநேக லாபங்களை அடையுமென்று சொல்லிய வசனத்தைக்கேட்டுக் குமாரன் பிரவேசித்த காலத்தில் சுகரரூபமாகக் கோபத்துடன் வரப்பட்டிருக்கிற அசுரனை யுத்தரங்கத்திலே ஜயத்தை அடையப்பட்டிருக்கிற குமாரனுக்கு ஜய கோஷணச் சப்தத்தைத் தரிக்கச் சம்பவத்தையும் புஷ்ப தனுசையும் கொடுத்து, பூஜ்ய வசனத்துடன் அனுப்பப்பட்ட குமாரனுடைய ஐஸ்வர்ய விசேஷத்தைப் பார்த்து, மறுபடி விரோதப் புத்தியை உடைய புத்திரர்கள் பாலைவனத்துடைய சமீபத்தை அடைந்து, வனத்திலிரா நின்ற பாலை விருட்சத்தில் கட்டப்பட்டிருக்கிற

ஒரு வித்யாதரனை, ஒரு சத்ருவினால் கட்டப்பட்டது இவனை விடுவித்து ராஜ்யம் ஸ்தாபிக்கப்பட்டவனுக்கு அநேக லாபங்கள் உண்டாகுமென்று சொல்லிய வசனத்தைக் கேட்டு பிரத்யும்ன குமாரன் பாலைவனத்தினுடைய மத்யத்தில் அடைந்து, விருட்சத்தில் நாகபாசம் என்கிற ரஜ்ஜிவினால் கட்டப்பட்டிருக்கிற வசந்தக வித்தியாதரனுடைய துயரமான சப்தத்தைக் கேட்டு, அவனுடைய சமீபத்திலடைந்து கட்டின பந்தத்தை அவிழ்த்துவிட்டு, என்ன காரணத்தினால் கட்டப்பட்டதென்று கேழ்க்க,

குமாரனுக்குச் சொல்லுகிறான், "வாராய் ஸ்வாமியே! எனக்குத் துர்ப்புத்தியை உடைய ஒரு சத்ருவானவன் இதோ இராநின்றான் என்று சொல்லிய வசனத்தினால், குமாரன் அந்தச் சத்ருவைப் பார்த்து, "வாராய், துஷ்டனே, நீயாவன் என்ன காரணத்தினால் கட்டப்பட்டதென்று யுத்தோன்முகராகி வருகிற காலத்தில், அந்தச் சத்ருவானவன், பயந்து, எனக்கு என்ன ஏவலென்று பாதத்தில் விழுந்தவனை அபய தானத்தைக் குடுத்து, இரண்டு சேதிகளுடைய விரோத பாவங்களை நீக்கிவிட்டு, ஒருவர்க்கொருவர் ஸ்நேகானுபந்தமாகச் செய்யப்பட்ட குமாரனுக்கு இந்த இரண்டு வித்யாதரர்களும் பிரசஸ்தமான இரண்டு வித்யைகளையும் அநேக விலை பெறும்படியான ஆபரணங்களையும் தங்கள் தங்களுடைய ரூப யளவனத்துடன் கூடியிராநின்ற இரண்டு புத்ரிகளையும் கொடுத்து அநேகப் பூஜ்ய வசனத்துடன் குமாரனுடன் வரப்பட்டிருக்கிற சத்ருத்வம் விட்டு, மித்ரத்துவத்தை அடைந்து, இராநின்ற வித்யாதர ராஜாக்களைப் பார்த்து, துர்ஜனங்களான பஞ்சதசப் புத்ரர்கள் இவண் எவ்விதத்திலும் மரணத்தை அடையாமல் ஸ்நேக பாவத்துடன் வருகிறானென்று விரோத பரிணாமத்தைக் கூடினவர்களாகிக் குமாரனை அவ்விடத்தில் நின்றும் இட்டுக்கொண்டு போகிப் பயத்தைக் கொடாநின்ற மாருவன் (?) சமீபத்தை அடைந்து, குமாரனைப் பார்த்து,

இந்த வனத்தை யாதொருவன் பிரவேசிக்கிறானோ அவனுக்கு அநேகப் பாவங்களுண்டாகுமென்று சொல்லப்பட்ட புத்ரர்களுடைய வசனத்தைக் கேட்டு, பிரத்யும்ன குமாரன் அந்த மருவனத்தைப் பிரவேசித்துள்ளவில்,

இவனுடைய புண்ய மகிமையினாலே அபாஜயத்தை அடையப்பட்டிருக்கிற அசுரதேவனானவன் குமாரனுக்கு அநேக ஆபரணங்களுடன் புஷ்ப தனுசுவைக் கொடுத்துப் பூஜித்தபின், சந்தோஷத்துடன் வரப்பட்ட குமாரனைப் பார்த்து, சத்ரு பாவத்தை உடைய பஞ்சதசப் புத்ரர்கள், சர்ப்ப ரூபத்தை உடைய தேவனாலே பயங்கரமான குகையை அடைந்து, குமாரனைப் பார்த்து, "இந்தக் குகையைப் பிரவேசிக்கப் பட்டவனுக்கு அநேக லாபம் கிடைக்குமென்று சொல்லிய வசனத்தைக் கேட்டுக் குமாரன் பிரவேசிக்கிற குகாத்துவராத்தின் மத்யத்தில் நின்றும் பயங்கரமான சர்ப்ப ரூபத்தினால் வரப்பட்ட அசுரதேவனை யுத்தத்தில் ஜெயித்து, அவனால் புஷ்பசக்ரத்தையும் புஷ்ப சயனத்தையும்

கொடுத்து, பூஜித்தபின் அந்தக் குகையைநின்றும் வரப்பட்ட குமாரனைப் பார்த்து, அட்டபுத்தியை உடைய பஞ்சதசப் புத்ரர்கள் குமாரனைப் பார்த்து, இட்டுக்கொண்டு விழலாமென்று நாமதேயத்தை உடைய வனசமீபத்தில் உட்கார்ந்து குமாரனைப் பார்த்து ஊர்ஜயந்த பர்வதத்தினுடைய ஒரு சிலையினுடைய சமீபத்திலிராநின்ற தமால விருக்ஷத்தினுடைய மூலத்தில் குஸனத்தின் பேரில் ஸ்திரதரமான தியானத்துடன் ஸ்படிகக்கல்லினால் செய்யப்பட்ட ஜபமாலையுடன் கூடினவளாயும் வெண்மயமான வஸ்திர தாரியும் அவிழப்பட்ட கூந்தலைக் கோடாலி முடிச்சை உடையவளாயும், கும்கும் வர்ண நகச்சாலை உடையவளாயும் முகமாகிற அம்புஜ பரிமணத்தினுடைய ரேணுவை வண்டுகளினால் சூழப்பட்டி முககமலத்தினால் அழகை உடையவளும் குசபாரத்தினால் வணங்கப்பட்டவனாயும், நிதம்பமாகிற புட்டத்தினால் ஆலஸ்ய கமனத்தை உடையவனாயும் ஹஸ்தத்தில் தரிக்கப்பட்ட மதுர ஸ்வரமான வீணையைத் தரிக்கப்பட்டவனாயும் கருநெய்தல் புஷ்பத்துக்குச் சமானமான நேத்ரத்துவயத்தை உடையவளாயும் தன்னுடைய ரூப யௌவன சாஸ்திர கலா ஐஸ்வர்யங்களினாலே திரிலோகத்தில் இராநின்ற ஸ்திரீகளை ஜெயிக்கப்பட்டவளாயும் இராநின்ற கன்யகையை விவாக மகோத்சவத்துடன் போகானுவிஷயமான ரதிக்ரீடையை அனுபவிக்கக் கூடினவன் பூர்வத்திலேயும், தத் பவத்திலேயும் புண்யவந்தனென்று சொல்லப்பட்ட பஞ்சதசப் புத்ரர்களுடைய வசனத்தைக்கேட்டுப் பிரத்யும்ன குமாரன் அவ்விடத்தில் பிரவேசித்துத் திரிலோகத்தில் இருக்கிற ஸ்திரீகளை ரூபசௌந்தர்யங்களினால் அபஜயம் செய்யப்பட்டிருக்கிற மன்மதனுக்குச் சத்ருசமான சுலக்ஷண புருஷனுடைய நிமித்தமாகத் தர்ப்பாசனத்துடன் தபசைச் சொல்லப்பட்ட கன்யகையைப் பார்த்து, ஆஸ்சர்யத்தை அடைந்து சிந்திக்கிறதாவது,

''இந்தக் கன்யகை ரூபமாவது சூர்ய காந்தியை ஜெயிக்கப்பட்டவளோ என்னா அல்லது சந்திரகாந்தச் சிலையை ஜெயிக்கப்பட்டவளோ என்னா மன்மதனுக்காகவே அவதரித்து, ரதி என்கிற பேரை வைத்துக்கொண்ட தேவியானவள், இத்தலத்தில் வரப்பட்டாளோ என்னா அல்லது சமஸ்து சரீரோபாங்க சௌந்தர்ய நிர்மாபண விதியிலே பிரம்மாவுக்கு சாமர்த்யமானது எப்படி உண்டாச்சுது என்று சித்த பூமணத்துடன் இராநின்ற பிரத்யும்ன குமாரன் இவளுடன் போகசௌக்கியமானது எப்படி அகப்படுமென்று சிந்தாக்ராந்தனாகி இருந்துள்ளவில், அந்தச் சமயத்தில் நமஸ்கரிக்கப்பட்ட வசந்தக வித்யாதரனைப் பார்த்து, ''இவள் எவனுடைய புத்ரி'' என்று கேட்டுள்ளளவில் சொல்லுகிறதாவது,

"வாராய், ஸ்வாமியே! பிரயஜேன வித்யாதரனுக்கும் சரஸ்வதி தேவிக்கும் ரதிதேவி யென்று நாமதேயத்தை உடையவளாகி, மன்மதனை ஸ்வயமவரிக்கவேணுமென்று தீவ்ரதரமான தபசுடன் இந்த வனத்தை அடைந்து,தபசைச் செய்கிறாளென்று சொல்லப்பட்ட மனோக்யமான

வசனத்தைக்கேட்டு, பிரத்யும்னகுமாரனாலே தபோநிஷ்டிதமான ரதிதேவியினுடைய இஷ்டப்பிரீரியான....வனென்றும் விவாக விதிப்பூர்வமாக பாணிக்கிரகணம் செய்தனன்.

அப்பொழுது, ஒரு தேவனானவன் குமாரனை நமஸ்கரித்து 1. வாஞ்சிதார்த்த வஸ்துவைக் கொடுக்கப்பட்ட காமதேனு என்ற தனுசையும், புஷ்பரதத்தையும் கொடுத்தான்.

இந்தப்பிரகாரம் ரதிதேவியுடன் புஷ்பவிமானாரூடானாகி வனத்துநின்றும் சந்தோஷத்துடன் புறப்பட்டுத் தன்னுடைய லீலாவிநோதத்தினால், ஆகாசக் கமனமாக வரப்பட்ட பிரத்யும்ன குமாரனைப் பார்த்துப் பஞ்சசதப் புத்ரர்கள் முக வாட்டத்துடன் பயத்தை அடைந்து ஓடினார்கள்

அது ஏனென்றால் அதிகமான புண்யோதயத்தினின்றும் சத்ருக்கள் ஊழியக்காரர்களாக இராநின்றார்கள். இந்தப்பிரகாரம் உத்கிருஷ்டதரமான சோடசலாபத்துடன் கூடிவரப்பட்ட பிரத்யும்ன குமாரனுடைய வரவை அறிந்து மேககூடப் பட்டணத்திலிராநின்ற ஸ்திரீமார்கள் அதிகச் சந்தோஷச் சித்ததுடன் சப்த தலப்பிராசாதங்களில் இராநின்ற கவாக்ஷத்தினுடைய 2. ரந்திரங்களில் முகங்களினால் மறைத்துக்கொண்டு நிற்கப்பட்டவர்களாயும், பார்க்கப்பட்டவர்களாயும், இன்னும் சில ஸ்திரீமார்கள், ராஜவீதி மார்க்கத்தில் இராநின்ற மெத்தைகளுடைய சுற்றுச்சுவர்களைப் பிடித்துக்கொண்டிருப்பவர்களாயும் இன்னும் சில ரூபவதிகளான கன்யைகள் குமாரனுடைய மோக வாஞ்சையினால், மாலையிட வேணுமென்று சோபான மார்க்கமாக மேல் உப்பரிகையின் பேரில் ஏறப்பட்டவர்களாயும் இன்னும் சில ஸ்திரீமார்கள் அவிழப்பட்ட கூந்தல் சமூகங்களினால் வீதிமார்க்கங்களில் ஓடப்பட்டவர்களாயும் இதற்கு முன் நிற்கப்பட்டிருக்கிற ஸ்திரீமார்களை ஒருவர்கொருவர் புஜங்களினால் தள்ளி, எனக்குப் பார்க்க இடம் விடுங்கோளென்று கோலாஹல சப்தத்துடன் இரைச்சலிடப்பட்டவர்களாயும் இராநின்ற 3. காலாவத ருணத்தில் புஷ்பக விமானத்தின் பேரில், அநேகத் துந்துபி வாத்யங்களுடன் பஞ்சசதப் புத்ரிகளினால் சூழப்பட்டு ரதி தேவியுடன் வரப்பட்டிருக்கிற பிரத்யும்ன குமாரனுடைய ரூபத்தைப் பார்த்துச் சகல ஸ்திரீமார்களும், இவரை மாலையிடப் பட்டிருக்கிற இந்தக் கன்யகையானவள் எந்தத் தபத்தினுடைய புண்யத்தினால் மாலையிடப்பட்டவர்களுடைய இவர்களுடைய இப்படிக்கொத்த புருஷனை ஆலிங்கனம் செய்தால், பெறப்பட்ட மனுஷ்ய ஜன்மத்துக்குச் சபலமென்றும் தங்கள் தங்களுடைய ஸ்தனபானம் செய்யப்பட்டிருக்கிற பாலகர்ளைப், பிரத்யும்ன குமாரனுடைய மோக விஷயத்தினால் சும்பனம் செய்யப்பட்டவர்களாகித் தங்கள் தங்கள் புருஷர்பேரில் வைராக்ய

---

வாஞ்சிதாத்த - விருப்பமான
ரந்திரம் - ஓட்டை
காலாவதருணம் - காலத்தின் முடிவு

புத்தியையுடையவர்களாயும், இராநின்ற காலத்தில் 'குமாரன் இதோபோகிறானென்று' சப்தக் கூச்சலைக்கேட்டு இன்னும் சில ஸ்திரீமார்கள் இடுப்பில் கட்டப்பட்ட வஸ்திரங்களை, ஹஸ்தங்களில் பிடித்துக்கொண்டு நிர்வாணமாகக் கிருகத்தில்நின்று ஓடிவரப்பட்டவளாயும், இன்னும் சில ஸ்திரீமார்கள், ஹஸ்தத்தில் போடப்பட்டிருக்கிற கடகங்களைக் காதிலிட்டுக் கொண்டு ஓடிவரப்பட்டவர்களாயும், இன்னும் சில ஸ்திரீமார்கள இடுப்பில் கட்டபபட்ட மேகலாபரணங்களைக் கண்டத்தில் அணிந்துகொண்டு ஓடிவரப்பட்டவர்களாயும், இன்னும் சில ஸ்திரீமார்கள் கண்டாபரணங்களை இடுப்பில் கட்டப்பட்டவர்களாயும், பூருவத்தில் இடப்பட்ட அஞ்சனத்தைக் கண்ணில் இடப்பட்டவர்களாயும், லலாட தலத்தில் இடப்பட்ட கும்குமத்தையும் புருவங்களில் பூசப்பட்டவர்களாயும், இந்தப்பிரகாரம் குமாரனுடைய ரூபங்களைப் பார்க்க வேணுமென்ற அபேஷையினால், சித்த பூமணத்துடன் ஒருவர்க்கொருவருடைய அங்க விகாரமாயிடப்பட்ட ஆபரண விசேஷங்களைப் பார்த்துப் பரிகாச வசனத்துடன் பேசப்பட்டவர்களுடைய சப்தங்களைக் கேட்டுப் பிரத்யும்ன குமாரனானவர், கடைக்கண் பார்வையினால் பார்த்துக் கொண்டு அரண்மனையை அடைந்து, பிதாவான காளசம்பர ராஜனுடைய பாதத்துவயங்களில் நமஸ்கரிக்கப்பட்ட புத்திரனைப்பார்த்து, ராஜாவானவன் குமாரனுடைய முகக்கமலத்தில் முத்தமிட்டுச் சும்பனம் செய்து, இரண்டு ஹஸ்தங்களினால் குமாரனை ஆலிங்கணம் செய்து, சந்தோஷப் பிரீதியினால் ஆசிர்வாத வசனத்தை அடைந்து, குமாரனானவன் பிதாவான ராஜனுடைய உத்தரவை அடைந்தபிறகு, மாத்ருவினுடைய அரண்மனையை அடைந்து, காஞ்சனமாலையினுடைய பாதக் கமலத்தில் தன்னுடைய மகுடாபரணங்கள் அழுந்த நமஸ்கரித்து, அவளுடைய முன்னே ஒரு ஆசனத்தின் பேரில், பிரத்யும்ன குமாரரானவர் உட்கார்ந்தார்.

காஞ்சனமாலையானவள், ஆசீர்வாத வசனம் சொன்னபிறகு, பிரத்தியட்ச மன்மத ரூபமான புத்ரனுடைய யௌவன ரூபத்தைப் பார்த்து, மோகத்தினால் மெய்மறந்து, இவனை எப்பொழுது புணர்ச்சி செய்யலாமென்று எண்ணத்தை உடையவளாகித் தன்னுடைய ஹஸ்தத்தைக் கன்னத்தில் வைத்துக் கீழ்ப்பார்வையையுடைவளாகித் துக்கத்தினால் கண்ணீரை விடப்பட்டவளாய் இராநின்ற காஞ்சனமாலையினுடைய பாதத்தைப் பிரத்யும்ன குமாரரானவர் நமஸ்கரித்துவிட்டு, எழுந்திருந்து அநேகத்வஜ தோரணங்களினால் அலங்கிருதமாகயிருக்கிற தன்னுடைய கிருஹத்தை அடைந்தபின் காஞ்சனமாலையானவள் காமப் பரவசத்தை அடைந்து குமாரன் என்னுடைய ஸ்தனத்துவயத்தை எப்பொழுது ஸ்பர்ச்சிப்பானோ வென்று தன்னுடைய கேசங்களினால் குசத்துவயத்தைக் கட்டியிருக்க பட்டவளாயும் சூன்யமான சித்தபூமணத்தை உடையவளாயும் அவிழப்பட்ட கேசபாரத்தை உடையவளாயும் பூமியில் விழுந்து மூர்ச்சை அடையப்பட்டவளாயும் இராநின்ற காஞ்சன மாலையைத் தாதிகள்

பார்த்து, வாழையிலையின் மிசை தேவியைப் படுக்க வைத்து 1. சந்தநசீதோபசரங்ஙளினால் செய்த போதிலும் தெளியாமல் இராநின்ற காஞ்சனமாலையினுடைய சங்கதியைக் கேட்டுப் பிரத்யும்ன குமாரரானவர் இவளுடைய சமீபடைந்து, சரீரக் குறிகளைப்பார்த்தும் ஹஸ்தம் பிடித்து, என்ன ரோகமோ என்று தாது விசேஷங்களைப் பார்த்து, யோசனைகளை செய்யப்பட்ட புத்ரனை ரகஸ்யமாக ஒருவருக்கும் இல்லாமல் சமயத்தில் லீலா விநோதமான சேஷ்டைகளுடன் கருங்காலி வனத்தில், தக்ஷக சிலையின் பேரிலிருந்து உன்னை எடுத்துவந்து, இந்த விஜயார்த்த பர்வதத்தை அடைவித்து, ஜன்மோத்சவம் முதலானதினால் நகர ஜனங்களுக்குக் கூடகர்ப்பத்தினால் எனக்குப் புத்திரன் பிறந்தானென்று அறிவித்து, இவ்வளவு காலப் பர்யந்தம் உன்னை வளர்க்கப்பட்ட பிரயாசக் கஷ்டத்தினால் என் வசனத்தைத் தடுக்காமல் இரண்டுபேரும் இந்தச் சயனத்தின்மிசை லீலாவிநோதத்தினால் என்னுடைய மனசினுடைய கஷ்டத்தை நீக்கி, என்னை ஆதரிக்க வேணுமென்ற வசன வார்த்தைகளுடன் சமீபத்தில் குறுகிவரப்பட்டிருக்கிற காஞ்சனமாலையினுடைய அங்கவிகார வசனாதிகளைப் பார்த்தும் கேட்டுச் சலனப் புத்தியை அடையாமல் தீரனாகி சதுர்கதிப் பூமணரூபமான சம்சார ஜீவன்களுடைய கர்ம விசேஷங்கள் இப்படி யிருந்தல்லவா வென்று, சிரசை அசக்கிப் பிரத்யும்னகுமாரரானவர் த்தவசாஸ்திரங்களினால் தனக்கு மாத்ருவாயிராநின்ற காஞ்சனமாலைக்கு நரகத்துக்குக் காரணமாயிராநின்ற இந்தச் சிந்தைனையை நீக்க வேண்டிதென்று நமஸ்கார வியைத்தினால் சொல்லிவிட்டு, அவ்விடத்தில் நின்ற சித்தகூடச் சைத்யாலயத்தை அடைந்து, சகல சாஸ்திரபாரங்கதராயும் அவதிக்ஞானத்தை உடையவராயும் இராநின்ற சாகர சந்திரமுனீஸ்வரரைக் கண்டு, திக் பிரதட்சிணத்துடன் நமஸ்கரித்தைச் செய்து வினயத்தினால் எழுந்திருந்து, இரண்டு ஹஸ்தங்களையும் லலாட தடத்தில் வைத்துக்கொண்டு கோபமாக காஞ்சனமாலையினுடைய சகல விருத்தாந்தங்களையும் சொல்லி, புத்ரனாயிராநின்ற என்னை வாஞ்சிக்கும்படியான காரணமானது, தாங்கள் எனக்குச் சொல்லவேண்டியதென்று கேட்டார்.

அப்பொழுது, முனீஸ்வரரானவர் அவதிக்ஞானத்தினால், இவர்களுடைய பூர்வ பவத்தில் நடத்திருக்கப்பட்ட சரித்திரத்தைப் பார்த்துச் சொல்லத் தொடங்கினார்.

இதற்கு மூன்றாம் பவத்தில் மதுராஜனாயிருக்கிற உன்னாலே கனகரத ராஜனுக்குப் பார்யையான சந்திரபாஸை என்று நாமதேயத்தினாலே பிரசித்தமான இவளைச் சுவீகரித்து, இஷ்ட விஷய காம கோபங்களினால் அனுபவிக்கப்பட்டனன்.

---

1. சந்தன சீதோபசாரம் - சந்தனத்தால் குளிர்ச்சியை ஏற்படுத்துதல்.

கனகரகனும் உன்னுடைய வஞ்சனாத் துரோகத்தினால் ராஜ்யத்தை விடப்பட்டவனாகி, மித்யா தபோனுஷ்டானத்தினால் மரணத்தை அடைந்து, ஜோதிஷ்க லோகத்தில் ஜ்வசனதூம சிவனென்ற நாமதேயத்துடன் தேவனாகிப் பிறந்து, தன்னுடைய பரிவாரத்துடன் ஆகாசக் கமனத்தில் வருகின்ற காலத்தில் மதுராஜனாயிருந்த நீயும் சந்திரபாஸையினுடைய போதனையினால் சம்சார வைராக்கியத்தை அடைந்து, ஜின மார்க்க தபோனுஷ்டானத்தினால் அச்யுத கல்பத்தில் தேவனாகி துவாவிம்சதிகடா காலம் ஆயுஷ்யத்தை உடையவனாகி, அந்தியத்தில் தேவ சரீரத்தை விட்டுத் திரிகண்டாதிபதியான கிருஷ்ணருக்குப் பார்யையான ருக்மணி மகாதேவிக்கு நீ புத்ரனாகிப் பிறந்து, அப்தான் திவசாதியில், ஆகாசக் கமனத்தில் வருகிற ஆவலக சிகன் என்கிற தேவனானவன் சலிக்கப்பட்ட தேவ விமானத்தினால் இவன் பூர்வ பல வைரி என்று அவதிக்ஞானத்தினால் அறிந்து, உன்னை ஸ்வீகரித்து, தக்ஷகசில பர்வதத்து மத்யத்து வைத்து, மேலே ஒரு பாறையினால் மூடிவிட்டு, சரம தேகமுள்ள உன்னைக் கொல்லுகிறதுக்குச் சக்தி யில்லாமல் போய்விட்டனன்.

மறுதிவசச் சூர்யோதய காலத்தில் சந்திராபாஸையாயிருந்தவள், தபோனுஷ்டானத்தினால் சரீரத்தைவிட்டு காலசம்பர ராஜனுக்குக் காஞ்சன மாலை என்கிற பார்யை ஆகி, இஷ்ட விஷய காம கோபத்துடன், தன் புருசனுடன் ஆகாசத்தல கமணத்தினால் வந்து, உன்னைப்பார்த்து, புத்ரவாஞ்சையினால் ஸ்வீகரித்துக் கொண்டுவந்து, பிரத்யும்னனென்று நாமதேயமிட்டு வளர்ந்து, யௌவன வயசுடனிருந்த உன்னைப் பூர்வ பவ வாஞ்சையால் இப்பொழுது உன்னைப் புருஷனாக அடையவேணும் என்று வாஞ்சிக்கின்றனள்.

இப்பொழுது, நீ அவளுடைய சமீபமடைந்து உன்னிஷ்டப் பிரகாரம் வருகுறேனென்று சொல்லியபின், அவளிடத்திலிராநின்ற மகாவித்யைகளான மூன்றையும், நீ ஸ்வீகரித்துக் கடவாயென்று சொல்லி, முனீஸ்வரரை வந்தித்து வந்து, இவள் சமீபம் குறுகி, முனீஸ்வரராய் சொன்னபிரகாரம் அவளிடத்தில் இராநின்ற மூன்று வித்யைகளையும் ஸ்வீகரித்துத் தன்னுடைய கிருகத்தைப் போய்ச் சேர்ந்தபின், காஞ்சனமாலையானவள், தன்னை மோச வஞ்சகம் செய்தானென்று சிந்தித்து, இவனை எவ்விடத்திலும் ராஜனால் கொல்லவேணுமென்று கபடப் புத்தியினால் தன்னுடைய அவயங்களை ஸ்பர்சித்தானென்று நகங்களினால் கீறி அழுதுகொண்டு இருக்கிற சங்கதிகளைக் காளசம்பர ராஜன் கேட்டு, இவளைப் பார்த்து, இவளுடைய வார்த்தைகளையும் கேட்டுப் புத்ரனைக் கொல்லுவேணுமென்று கோபத்தை அடைந்து, தன் பஞ்சதசப் புத்திரர்களை ஏவினன்.

---

1. அவதிக்ஞானம் - முடிவு ஞானம்

இப்படி இராநின்ற அவஸரத்தில், பிரத்யும்னரானவர் சித்தகூட சைத்யாலயத்தை அடைந்து ஜின வந்தனாபூர்வகம் சாகர சந்திரமுனீஸ்வரரை அடைந்து நமஸ்கார பூர்வகம்,

"வாராய், ஸ்வாமியே! எனக்குத் தாயாயிருக்கிற ருக்மணி மகாதேவிக்கும் எனக்கும் விரகக் காரணமானது எந்தப் பாபத்தினின்றும் உண்டாச்சுது? இதை யெனக்குச் சொல்லவேண்டியதென்று" கேட்கப்பட்ட வசனத்தைக்கேட்டு, மகாமுனீஸ்வரரானவர் சொல்லுகிறார்.

"உனக்கு மாத்ருவான ருக்மணி மகாதேவியானவள், இதற்கு பூர்வ பவங்களில், இந்த ஜம்பூத்வீதத்தினுடைய பரத க்ஷேத்திரத்தில் பிரசித்தமான மகத தேசத்திலிராநின்ற சாலிக்கிராமத்தில், ஐஸ்வர்யத்துடன் கூடியிராநின்ற சோமதேவ பிராமணனுக்குக் கமலாதேவி என்கிற பத்னியானவள் தன் கிருகத்தில் வரப்பட்டிருக்கிற ஒரு மாச உபவாசதாரியான மகா முனீஸ்வரரைப் பார்த்துக் கோபத்தை அடைந்து, நிந்திக்கபட்டவளாயினள். இந்தப் பாபத்தினால் குஷ்டரோகத்தை உடையவளாயும் சகல பேர்களால் நிந்திக்கப்பட்ட சரீரத்தை உடையவளாகி, ஏழாவதான திவசத்தில் அக்னியில் விழுந்து மரணத்தை அடைந்து பெட்டைக் கழுதையாகிப் பிறந்து, அப்பொழுது சகலபேர்களினால் நிந்திக்கப்பபட்ட ரோகங்களினால் மரணத்தை அடைந்து, பெருச்சாளியாகப் பிறந்து, அநேகர் துக்கத்தில்நின்றும் மரணத்தை அடைந்து, பெட்டை நாயாகிப் பிறந்து, தன் குட்டியினுடைய மரணத்தினின்றும் எரியப்பட்ட அக்னியில் விழுந்து மரணத்தை அடைந்து, யேக கிராமத்தில் செம்படவனுக்குப் புத்ரியாகப் பிறந்து, அதிகத் துர்கந்தமுள்ள சரீரத்தை உடையவளாகித் தன்னுடைய பந்து ஜனங்களினாலே திரஸ்காரத்தை அடைந்து, தன் கிருகத்துநின்று புறப்பட்டுச் கங்கா நதிக்கரையை அடைந்து, தன் தகப்பனாலே ஒரு குடிசை கட்டி, அதனுள் அடைந்து, ஓடத்தினாலே ஜனங்களைத் தாண்டுவிக்கும்படியான சாமர்த்தியத்தை உடையவளாகி, இதனால் ஜீவிக்கப்பட்டவளாயும் தகப்பனை ரக்ஷிக்கப்பட்டவளாயும் இராநின்ற காலங்களில், பூர்வ பவங்களில் இவளால் காணப்படுகின்ற அவதிக்ஞானமுடைய மகாமுனீஸ்வரரானவர் வந்தனர்.

இவரைச செம்படவப் புத்திரியானவள் பார்த்து, அஸ்தமய காலத்தில் பிரதிமாயோக தாரியான இந்த மகாமுனீஸ்வரருடைய தம்சமசகங்ளினால் செய்யப்பட்ட உபத்திரவத்தைப் பார்த்து, தயாபரவசத்தை அடைந்து, இவருடைய சரீரத்தை மூடிவிட்டுத் தன் குடிசையை அடைந்து, சூர்யோதய காலத்தில் யோகத்தை விட்டுப் பஞ்ச பரமேஷ்டி ஸ்தோத்திரங்களைச் செய்யப்பட்டிருக்கிற மகாமுனீஸ்வரரானவர் இந்தச் செம்படி புத்திரனுடைய விநய நமஸ்காரத்தைப் பார்த்து சோமதேவப் பிராமணனுக்குப் பத்தியாயும் கமலா வென்னும் பேரை உடையவளாயு மிருக்கிற "வாராய், புத்ரியே! உனக்கு க்ஷேமமாகக் கடவதென்று சொல்லப்பட்ட ஆசிர்வாத

வசனத்தைக் கேட்டு, இந்தச் செம்படவப் புத்திரியானவள் தன்னுடைய சித்தத்தில் இப்படிக்கொத்த ஆசிர்வாத வசனத்தைக்கேட்டு, இது என்ன காரணமென்று எவ்வளவு காலத்துக்குள் சிந்திக்கிறானோ, அவ்வளவு காலத்துக்குள் 1. பவஸ்மிருதியை அடைந்து, "வாராய் ஸ்வாமியே! தங்களைக் கோபத்தினால் நிந்திக்கப்பட்ட எனக்குத் தயாபர வசத்தினால் க்ஷேமமாகக் கடவதென்று சொல்லிய வார்த்தையானது என்ன காரணமென்றும், அபராதத்தைச் செய்யபட்ட ஜீவனுக்குப் பிரத்யபகாரம் செய்யவேணுமென்றும் அபராதம் துக்கத்தினால் கண்ணீர்களை விடப்பட்ட செம்படவப் புத்திரியைப் பார்த்து, முனீஸ்வரரால் சொல்லப்பட்ட தர்மமாவது,

"வாராய், புத்திரியே! சாதுஜனங்களை நிந்திக்கப்பட்ட பாபப் பலங்களினால் அநேகத் துக்கங்கள் உண்டாகும், ஆகையில், இனி இப்படிக்கொத்த பாபகார்யத்தை விட்டுச் சர்வக்ஞானனால் சொல்லப்பட்டிருக்கிற சாஸ்திரோத்தப் பிரகாரம் பிரதானுஷ்டானத்தைச் செய்வியேயானால் சௌக்கியங்கள் உண்டாகுமென்று வணக்கத்தினால் நமஸ்கரிக்கப்பட்ட செம்படவப் புத்திரிக்கு விரதானுஷ்டானங்களைப் போதித்து, யதீஸ்வரரானவர் அயோத்யாபுரி பட்டணத்தை அடைந்தனர்.

இவளும் அந்தப் பட்டணத்தை அடைந்து, ஆர்யாங்கனையாகி நெடுங்காலம் விரதங்களை அனுஷ்டித்து ஒரு பர்வதக் குகையுள் அடைந்து, மரணத்தை அடைந்து பதினாறாவதான தன் ஆச்யுத காலத்தில் தேவேந்திரனுக்கு தேவஸ்திரியாகித் தன் ஆயுஸ்ய முடிவில், தேவ சரீரத்தை விட்டுக் குண்டினபுரத்தில் பீஷ்ம மகராஜனுக்கு ருக்மிணி யென்று நாமதேயத்தை உடைய புத்திரியாகிப் பிறந்து, யௌவன ரூபத்தை உடையவளான இவளை வாசுதேவனுக்கு என்பதாவதான கிருஷ்ணரானவர் குண்டினபுரத்தை அடைந்து, தன் ரதத்தின் மீதில் ஸ்வீகரித்து, சங்கத்வனியினால் பிரசித்தமாகும்படி சப்தங்களை த்வனித்துத் திரும்புகின்ற அவசரத்தில் அபிமுகமாக எதிர்க்கப்பட்ட சிசுபாலனைக் கொன்றுவிட்டுத் தன்னுடைய துவாரகாபுரத்தை அடைந்து ருக்மணி மகாதேவியினிடத்தில் அப்தயந்தம் பிரீத்கரனாகிச் சௌக்கியத்தடன் இருவரும் இருந்தார்கள்.

இவர்களுக்கு நீயானவன் குணங்களுக்கு ஸ்தானமான புத்ரனாகப் பிறந்தாய் நீயானவன் பூர்வ பவத்தில் மயில் சிசுவைத் தாய்நின்றும் பிரித்திட்ட பாபதோஷத்தினால், இந்தப் பவத்தில் மாத்ரு வியோகமானது உண்டாச்சுது என்று சொல்லப்பட்ட சாகர சந்திரமகாமுனீஸ்வரருடைய வசனாம்ருதமான பவங்களைக் கேட்டுப் பிரத்யும்னரானவர் சந்தோஷத்தில்நின்றும் நமஸ்கரித்து விடைகொண்டு, அரண்மனையை அடைந்து, துவாரகாபுரத்திலிராநின்ற தனக்கு மாத்ரு பித்ருக்களான கிருஷ்ண ருக்மணி மகாதேவியினுடைய சமீபத்தில் போகவேணுமென்று உத்தேசிக்கின்ற காலத்தில் காலசம்பரராஜனால் ஏவப்பட்ட பஞ்சசதப் புத்திரர்கள் வந்து, கபடப் புத்தியினால்,

---

1. பவஸ்மிருதி - பழைய பிறப்பின் நினைவு

"வாராய், சகோதரனே! என்றும், பூஜ்யனே! என்றும் ஸ்துதித்துக்கொண்டு, சமீபம் குறுகி, ஹஸ்தத்தைப் பிடித்து ஜலக்கிரீடை செய்யவேணுமென்று அனுமதி பூர்வகம் இட்டுக்கொண்டு ஒரு கூபத்தினுடைய கரையில் சகலப்பேர்களும் ஒருவர்க்கொருவ் பிரதமத்தில் நான் குதிக்கிறேன் என்று சொல்லுகிற சமயத்தில் பிரக்ஞப்தி வித்தையானது பிரத்யும்னருடைய சிரவண மார்க்கத்தில் இவர்களுடைய கபடப்புத்திகளை ரகசியமாகச் சொல்லி மறையநிறுத்திவிட்டுத் தான் பிரத்யும்னருடைய ரூபத்தைத் தரித்து, நான் பிரதமத்தில் குதிக்கிறேனென்று சப்தங்களைத் த்வனித்து விழுந்த சமயத்தில் சகலப்பேர்களும் கட்டியிருக்குற கல்லுகளைப் பேர்த்துக்கொண்டு ஒருவர்க்கொருவர், இவனைக் கொல்லுங்ககோளென்று குதித்தனர்கள்.

அப்பொழுது, பிரக்ஞப்தி வித்தையானது ஒருவனைக் கரையில் யேறும்படி செய்துவிட்டு, ஒரு பர்வதத்தைக் தூக்கிவந்து, சகலப்பேர்களையும் வராதபடிக்கு அந்தக் கூபத்தை மூடிவிட்டது. அதுனால் அந்தகாரத்தினுடைய கூபத்துக்குள் ஜலத்தில்நின்றும் வெளியெழும்புகின்ற சகலப்பேர்களும் தங்கள் சிரசில் இடிப்பட்ட பாறையைப் பார்த்து, ஒருவர்க்கொருவர் நம்பளை பிரத்யும்னன் கொல்லுகிறதுக்கு உத்தேசித்தானென்று கோலாஹலச் சப்தங்களினால் அழுதுக்கொண்டு, ஜலத்தில் முழுகுறதும் வருகுறதுமா யிருந்தார்கள்.

அப்பொழுது, பிரத்யும்னரானவர் கோபாவிஷ்டனாகிக் கரையில் இராநின்ற காளசம்பரனுடைய புத்ரனைப் பார்த்து, உன்னுடைய தாய் தகப்பனுக்கு இந்தச் சமாசாரத்தைச் சொல்லக்கடவாயென்று அனுப்பினார். அந்தப் புத்திரனும் போகித் தாய்தகப்பனுக்குச் சொல்லினான்.

காளசம்பர ராஜனானவன் கேட்டுக்கோபத்தை அடைந்து, யுத்தரங்க பேரியை அறைவித்து, சாதுரங்கச் சேனையுடன் பிறப்பட்டு, பிரத்யும்னருடைய சமீபம் குறுகி, அப்போது, யுத்தோன்முகனாகினான்.

பிரத்யும்ன குமாரனானவர் இவனையும் சாதுரங்கச் சேனையையும் குஞ்சிரிப்புடன் மோகத்தினால் பிரக்ஞப்தி வித்தையினால் சாதுரங்கச் சேனையை உண்டுபண்ணி, ரணபேரி அறைவித்து, ஒன்றுக்கொன்று யுத்தம் செய்தார்கள்.

அப்பொழுது, பிரத்யும்னருடைய பராக்கிரமத்தைப் பார்த்து, நாரதரானவர், ஆகாசத்தில் வந்து, சந்தோஷத்தில்நின்றும் நர்த்தனம் செய்துகொண்டிருந்த அவசரத்தில், காளசம்பரன் பிரத்யும்னனுடைய சேனையினால் பூமியில் விழுந்து மரணத்தை அடையப்பட்டிருக்கிற முண்டங்களைப் பார்த்து, துக்கத்தை அடைந்தும், மறுபடி தைர்யத்தை அடைந்து, தன் பார்யையினுடைய சமீபம் குறுகிக் கேட்டனன்.

''வாராய், தேவியே! உனக்கும் எனக்கும் சத்ருவான பிரத்யும்னகுமாரன் அதிகப் பலவந்தனான இராநின்றான். இவனால், நம்பளுடைய சாதுரங்கச் சேனை மடிந்து விட்டது. ஆகையால், இவனை ஜெயிக்கிறதின் பொருட்டு, உன்னிடத்தில் இராநின்ற பிரக்ஞப்தியுரு ரோகிணிகளான வித்தைகளை எனக்குக்கொடுக்க வேண்டியதென்று கேட்கப்பட்ட தயாவார்த்தைகளைக் கேட்டுக் காஞ்சனமாலையானவள்,

“வாராய், பிராணகாந்தனே! புத்ரனென்கிற வாஞ்சையினால் பிரத்யும்னனுக்கு வித்தைகளைச் சிறுவயதில் கொடுத்துவிட்டேன், இனி என்ன செய்வேன் என்று அழுதுகொண்டு சொல்லப்பட்ட வார்த்தைகளைக் கேட்டுக் காளசம்பரராஜன் இவண் துர்நடக்கை உள்ளவனென்றும் இவனால் பிரமாதம் வந்ததென்றும் தன்னுள் சிந்தித்து, இனி என்ன செய்யலாமென்று தைரியத்தை அடைந்து, தன் பட்டணத்தில்நின்றும் புறப்பட்டு, யுத்தரங்கக்களத்தை அடைந்து மன்மதனுடன் அநேகத் திவசங்கள் யுத்தம் செய்ததன் பின்பு ஆயுதரஹிதனா யிருக்கிற காளசம்பர ராஜன், தனக்குப் புத்திரனாயிருக்கிற பிரத்யும்னருடைய இடத்திலே வெட்கத்தை அடைந்து, அதோமுகப் பார்வையால் தூக்கிக்கின்ற அவசரத்தில் நாரதரானவர் ஆகாசத்தினின்றும் இவர்களுடைய சமீபத்தில் இழிந்து, இவர்களுடைய யுத்த விருத்தாங்களை அறிந்தவராய் இருந்தபோதிலும், ஆசீர்வாத வசன பூர்வமாகப் பிரத்யும்னரைப் பார்த்து,

“வாராய், புத்ரனே! உங்கள் இரண்டு பேர்களுக்கும் என்ன காரணம் யுத்தரங்கம் விளைந்ததெ”ன்று கேட்கப்பட்ட நாரதரைக் குறித்துப், பிரத்யும்னனால் சொல்லுகுறதாவது,

“வாராய், நாரத பகவானே! காஞ்சனமாலையினுடைய விருத்தாந்தத்தையும் காளசம்பர ராஜனுடைய அஞ்ஞான யுத்த விருத்தாந்தத்தையும் தன்னுடைய விருத்தாந்தத்தையும் அறிவித்தப் பிறகு, நாரதரானவர் சிரசை அசக்கி ஸ்திரீகளுக்கு இப்படிக்கொத்த மாயா பிரவஞ்சங்கள் இருந்தல்லவா யென்றும், காளசம்பர ராஜனைப் பார்த்து,

”வாராய், வித்யாதர பூபதியே! உனக்குப் பார்யானாகிய காஞ்சன மாலையினுடைய நம்பிக்கைகளையும் பிரம்யும்ன குமாரனுடைய ஸ்வாதார சந்தோஷம் முதலான சரமதேக ரூபமுள்ள ஆசார விசேஷங்களையும் அஞ்ஞானத்தால் அறியாமல் சத்ருவாகப் பாவித்து, யுத்தரங்கம் செய்யவேணுமென்று வந்த புத்தியை விடவேண்டியதென்று சொன்னபிறகு, பிரத்யும்ன குமாரனே உன்னுடைய யதாஸ்தான விவரமாவது,

சுராஷ்டிர தேசத்தில், அதி ரமணீயமான துவாரகாவதியில் ராஜ்யபரிபாலனம் செய்யப்பட்ட கிருஷ்ணருக்கு பட்டமகிஷியான ருக்மணி மகாதேவிக்கு அத்யந்த மன்மத ரூபமுள்ள பிரத்யும்ன

குமாரனென்று உத்பவித்தனன். இப்பொழுது, சத்யபாமையால் செய்யப்பட்ட சர்ப்ப பிரதிக்ஞையால் அத்யந்தம் துக்கரோதனம் அடைந்திராநின்றனன். உனக்கு மாத்ருவான ருக்மணி மகாதேவியைச் சந்தோஷ காரணங்களைச் செய்யும்பொருட்டு, என்னுடைய விமானத்தின் மிசை தடையில்லாமல் சீக்கிரமாக ஏறவேண்டியதென்று சொல்லப்பட்ட வசனங்களைக்கேட்டுப் பிரத்யும்ன குமாரரானவர் சந்தோஷத்துடன் காளசம்பர ராஜனையும், காஞ்சன மாலையையும் மாத்ரு பித்ரு வியைத்தால் நமஸ்காரம் செய்து, பிரயாணாபி முகத்தின் பொருட்டு, உத்தரவை அடைந்து, நாரதருடைய மத்தியத்தில் தன்னுடைய ஏகபாதத்தால் ஊன்றி, மத்தொரு பாதத்தால் இடித்து, ஏறுகின்ற பொழுது, விமானம் உடைந்து, அவசரத்தில் நாரதரைப் பார்த்துப் பரிகாச வசன பூர்வகம்,

"வாராய், பூஜ்யனே! தங்களுடைய விமானம் நல்ல கெட்டிதரமென்றும், ஒரு சமயத்தில் துவாரகாபுரத்தைப் போகலா"மென்றும் சொல்லுகின்ற பரிகாச வசனத்தைக் கேட்டு, நாரதரான பிரத்யும்ன குமாரனை நோக்கி,

"வாராய், குமாரனே! வயோவிருத்தனாகிய நான் திருடதரமான விமானம் செய்யமுடியாதென்று யௌவன வயசை உடைய உன்னால் அத்யந்தம் கட்டிதரமான விமானத்தைச் செய்து, கால தாமசமில்லாமல் பிரயாணத்தைச் செய்ய வேண்டிய தென்று சொல்லிய நாரதருடைய வார்த்தையைக் கேட்டு, பிரத்யும்ன குமாரரானவர், அதிரமணீயமான நவரத்தினங்களினால் இழைக்கப்பட்ட விமானத்தில், கதலிவன சபூக நாளிகேர நாளிபத்ர அசோக விருஷங்களினாலேயும், அநேகத் தோரணப் புஷ்ப மாலைகளினாலேயும் ஸிலினசலம்பு முதலான மணிகளினாலேயும் அலங்கரித்து, நாரதரோடு பிரத்யும்ன குமாரன், ஏறினார்.

அந்தச் சமயத்தில், நாரதரானவர், "வாராய், குமாரனே! உனக்கு மாதாவாகிய ருக்மணி மகாதேவியைச் சந்தோஷம் செய்யும்பொருட்டு, சீக்கிரமாக விடவேண்டியதென்று துரிதம் பண்ணுகிற நாரதருக்கு அபய வசனத்தை உண்டுபண்ண வேணுமென்று விமானத்தைத் தலைகீழாக வரும்படி வேகத்துடன் விடுகின்ற பிரத்யும்ன குமாரனைப் பார்த்து, நாரதரானவர்,

"ஹா புத்திரனே! என்றும் அய்யய்யோ என்ன செய்வேன்? என்றும் கூச்சலிட்ட நாரதருடைய சப்தங்களைக் கேட்டுப் பிரத்யும்ன குமாரரானவர் மறுபடி நாரதருக்கு ஆயாசம் வராமற்படி விமானத்தை வேகத்துடன் விட்டுக் கொண்டு விஜயார்த்த பர்வதத்தைத் தாண்டிப் பூமி சம்பந்தமான அநேக வசனங்களையும், தேசங்களையும் கடந்து, நாரதரால் காட்டப்பட்ட என் வைரியினால் வைக்கப்பட்டிருக்கிற தக்ஷக சிலை பர்வதத்தைப் பார்த்துக் கொண்டு அநேக வசனங்களையும் தேசங்களையும்

தடாகங்களையும், பட்டணங்களையும் கடந்து போகின்ற பொழுது, துவாரகாபுரிப் பட்டணத்தைக் குறித்து, அநேக வாத்யச் சப்தங்களுடன் போகப்பட்ட ரத கஜ துரக பதாதிகளான சாதுரங்க சேனாதிகளைப் பார்த்து, என்ன காரணத்தினின்றும் வாத்யங்களினால் சோபிமான ராஜாவானவன் என்னென்று கேட்கப்பட்ட பிரத்யும்னரைக் குறித்து, நாரதரானவர் சொல்லுகிறதாவது,

"வாராய், குமாரனே! இந்தப் பரதசேக்ஷத்திரத்தில் உத்பன்னமான ஆதி தீர்த்தங்கரராகிய விருஷய ஸ்வாமிக்கு ஆகாரதானக் கர்த்தாவாகிய ஸ்ரேயாம்ஸ குமாரனுடைய குரு வம்சத்தில் உத்பன்னமான திருதராஷ்டிர ராஜனுக்குப் பிரதமப் புத்ரனாகிய துர்யோதன மகாராஜன், தனக்குப் பத்னியாகிய பானுமதிக்கு உத்பவித்து உதயி என்கிற புத்ரியைச் சத்யபாமைக்குப் பானுகுமாரன் பொருட்டு நீ யில்லாததினால் விவாஹச் சம்பந்தம் முயற்சியானது செய்யத் தொடங்கினார்கள்.

இதனால், இந்தச் சேனைகள் போகாநின்றதென்று சொல்லிய வார்த்தைகளைக் கேட்டுப் பிரத்யும்ன குமாரரானவர், ஆகாசத்தில் நாரதரை நிறுத்தி விட்டு இறங்கி, அத்யந்தம் விகார ரூபமான வேட வேஷத்தைத் தரித்துச் சேனைகளுடைய அபிமுகமாகக் கிருஷ்ணருடைய உத்தரவினால் ரஷிக்கப்பட்ட மார்க்கத்தில் போகக் கூடாதென்று தடுத்து நிறுத்தினான்.

அப்பொழுது, சேனைகளுடைய கோலாஹலச் சப்தங்ளைக்கேட்டு, அநேக வஸ்திர ஸ்வர்ணதானங்களை அவனுக்குக் கொடுத்துப் போகலாமென்று ஆலோசித்து, வேடனுக்குச் சொல்லினார்கள், அந்த வார்த்தைகளைக் கேட்ட வேடன், இது வேண்டியதில்லை யென்றும், சாரரத்மையமான யௌவன வயசு ரூபமுள்ள உதயி குமாரத்தியைக் கொடுத்துவிட்டு நீங்கள் போகவேண்டியதென்று சொன்ன வார்த்தையைக் கேட்டு, அநேக ராஜாக்கள் பரிகாசத்துடன் அலட்சியமாக வேடனைத் தள்ளிவிட்டுச் சேனைகளைப் போகும்படி செய்தனன்.

அப்பொழுது, வேடன் பிரக்ஞப்தி புருரோகிணீ வித்தையினால் இந்தச் சேனாசமுத்திரமான அநேக வேட ரூபங்களை நிர்மித்து,

"வாராய், மைத்துனரென்றும் மாமனென்றும் சகோரதனென்றும் கூப்பிட்டு வருகின்ற அந்தகார ரூபமான விகார முகங்களுடைய வேடர்களைப் பார்த்துத் துர்யோதன மகாராஜனுடைய சாதுரங்க சேனைகள் பய சலிதத்தினால் தத்தம் பாரங்களைத் தள்ளிவிட்டுக் கோலாஹல சப்தங்களுடன் திரும்பிவோடுகின்ற பொழுது பிரத்யும்ன குமாரன் அத்யந்த ரமணீயமான சிபிகையின்மிசை இராநின்ற உதயி குமாரத்தியைத் தூக்கிக்கொண்டு, தன் விமானத்தை அடைந்தபொழுது, நாரதரானவர், இவனுடைய விகார ரூபத்தைப் பார்த்து அழுகின்ற புத்திரிக்கிச் சந்தோஷமாக,

"வாராய், குமாரனே! உன்னுடைய சுய ரூபத்தைக் காண்பிக்கும்படி சொன்ன வார்த்தையினால் தத்ரூபத்தைக் காட்டின பொழுது, உதயி குமாரத்தியானவள் இவன்பேரில் ஆசக்தி உடையளாகினள்;

ததனந்தரம் பிரத்யும்னரானவர், விமானத்தை வேத்தோடும் போகும் பொழுது, துவாரகாபுரியைப் பார்த்து, இந்த நகரத்தினுடைய நாமதேயம் யாதென்று கேட்டபொழுது, நாரதரானவர்,

"வாராய், குமாரனே! சௌதர்மேந்திரன் நேமீஸ்வர சுவாமிக்கு ஜன்மஸ்தானமென்று அறிந்து, தன்னுடைய ஆக்ஞையால் குபேரன், நவரத்தினங்களினாலே கச்சிதமான ஆகாசத்தை ஸ்பர்சிக்கப்பட்ட சதுர் கோபுரத்துடன் கூடின பிராகாரத்தினாலேயும் சப்த பிரர்சாத மெத்தைகளுடன் கூடின கிருகப் பந்திகளினாலேயும், மகரதோரண ஹம்ச, கோக கஜ லாஞ்சனங்களான துவஜ வரிசைகளினாலேயும், அலங்கிருதமாகிய இந்தப் பட்டணம் உன் பிதாவாகிய கிருஷ்ணரால் ராஜ்ய பரிபாலணம் செய்யப்பட்ட துவாரகாபுரி நகரமென்றும், இது வாசுதேவரான கிருஷ்ணருடைய அரண்மணை யென்றும், இது பலதேவருடைய மாளிகையென்றும், சமுத்திர விஜயாதி வாசுதேவ ராஜாக்களுடைய பிராசாதங்களென்றும், இது சத்யபாமை முதலான ஜாம்பவதிகளுடைய கிருக பங்தி வரிசைகளென்றும், இது உனக்கு மாதாவாகிய ருக்மணி மகாதேவியினுடைய நவரத்ன சலிதங்களான உன்னதக் கிருகங்களென்றும், இவணம் அநேக வன, தடாக, உத்யான வன்ங்களுடைய சோபைகளைச் சொன்னப் பிறகு, பிரத்யும்னகுமாரன் விமானத்தை ஆகாசத்தில் ஸ்தம்பணம் செய்துவிட்டு, அநேக ராஜபுத்ரர்களாலே பந்துக்கிரீடைகளாலே விளையாடாநின்ற பட்டண பாஹ்ய உத்யான வனப் பூமியில் இழிந்து, குமாரன் பிரக்ஞப்தி வித்தையினால், இவன் பானுகுமாரரென்று அறிந்து, வித்தையை அதிக உச்சனாஷ்ட லட்சணங்களுடன் கூடின குதிரையாக நிர்மித்துத் தான் பிரடரூபமான 'ஐஸ்வர்ய வியாபாரியாக ரூப வேஷத்தைத் தரித்துக்கொண்டு, அந்தக் குதிரையை ரத்னமயமான கடிவாளத்தினால், ஹஸ்தத்தில் பிடித்துக்கொண்டு, புத்திரர்களுடைய சமீபத்தில் பாட்டசாரியாகச் சஞ்சரிக்கையில், பானுகுமாரன், தன் தோழிமார்களினால் இந்தக் குதிரை கிரயம் செய்குறத்துக்குப் போகப்பட்டவனோ என்று கேட்கிறபோதில் பிரத்யும்னகுமாரன், அவர்களுக்கு விக்கிரயம் செய்ய வந்தேனென்றும், நூறு கோடி சுவர்ணம் வந்தால், தருவேனென்றும் ஏழைகளாகிய உங்களால் வாங்கமுடியாதென்றும் பரிகாச வசனத்தினால் திக்காரம் செய்கிற வசனத்தைக் கேட்டு, பானுக்குமாரன், இந்தக் குதிரையை பரீக்ஷிப்போமென்று, அனுமதியினால் கடிவாளத்தை வாங்கிக்கொண்டு, மேலே தாண்டின பொழுது அஸ்வரத்மானது கொஞ்சதூரம் போகிக் குவசனால் சொரியப்பட்ட சக்ர கிராந்தியைப் போல் பிரமித்துப் பானுகுமாரனை ரணக்காயங்கள் வரும்படி ஒரு பாறையின்மேல் தூக்கித் தள்ளிவிட்டு, பிரடரூபமுள்ள குமாரனுடைய

சமீபம் ஹேஷாரவ சப்தத்துடன் வந்து நிற்கின்றபொழுது, பானுகுமாரன் தோழர்களால் தழுவிக்கொண்டு துக்கத்துடன் வந்து, அசுவ வியாபாரியைப் பார்த்து, "எனக்குத் துஷ்ட அசுவமென்று சொல்லாமல் ஏறும்படி செய்த காரணத்தினால் உன்னைத் தண்டிப்போ"னென்று சொன்ன வசனத்தைக் கேட்டுப் பிரத்யும்ன குமார னொன்றும் சொல்லாமல்,

''வாராய், புத்திரர்களே! உங்களுக்கு அசுவ நடைகளை விடுகிறதுக்குத் தெரியாதெ''ன்றும் திரஸ்கார வார்த்தைகளால் அதட்டினான்.

அப்பொழுது, பானுகுமாரன் இவனுடைய சாமர்த்தியத்தைப் பார்ப்போமென்று தோழர்களோடு அசுவத்தின் பேரில் தூக்கினபொழுது பிரத்யும்னகுமாரன் பானுகுமாரனைப் பூமியில் மல்லார்ந்து விழும்படி மார்பில் ஏகபாதத்தால் உதைத்துக் குதிரையின்பேரில் ஏறிக்கொண்டு அதிக வேகத்துடன் இவர்களுக்கு மறைவாகப் போகி சத்யபாமையினுடைய வெற்றியைத் தோட்டசமீபம் வந்திழிந்து, அந்தத்தோட்டத்தை ரக்ஷிக்கிறவர்களைப் பார்த்து,

''வாரீர் தோட்டக்காரர்களே! இந்தக் குதிரையானது அதிகத்தூரதேசத்திலிருந்து வந்ததினால், அதிகப்பசி தீவ்ரமாய் இராநின்றது, ஆகையால் இந்தத் தோட்டத்தில் சொல்பநாழி பர்யந்தம் புல்லுகளைப் புஜிக்கும்படி செய்யவேண்டியதென்று சொன்ன வார்த்தையைக் கேட்ட அந்தத் தோட்டக்காரர்கள், விருத்தரூப வேஷதாரியைப் பார்த்து,

"வாராய், பயித்தியக்காரனே! பானுகுமாரனுடைய கல்யாண நிமித்தம் சத்யபாமையினுடைய ஆக்ஞையால் ரஷிக்கப்பட்ட எங்களுடைய சமீபம் வந்து சொன்ன வார்த்தையானது ராஜாவானவர் கேட்டால், உனக்குத் தண்டனை உண்டாகுமென்று சொன்ன வார்த்தைகளைக் கேட்டு, குமாரன் என்னுடைய ஹஸ்தத்தில் இராநின்ற முத்திரை மோதிரத்தைத் திருகுறேனென்று சொன்ன வார்த்தையைக் கேட்டுக் தோட்டக்காரர்கள், அந்த முத்திரை மோதிரத்தினுடைய வாஞ்சையினால் அங்கீகாரத்துடனிருந்த சமயத்தில், குமாரன் அந்த அசுவத்தைத் தோட்டத்தினுடைய வாய்க்கால் மார்க்கமாகப் போகவிட்டபின்பு அநேகக் குதிரைகளாகி நிர்மித்து, அந்தத் தோட்டத்தில் இராநின்ற நாகவல்லி விசேஷங்களைச் சூன்யமாக துவம்சம் செய்து, பிறகு அந்தத் தோட்டக்காரர்கள் அதிகக் கூச்சலுடன் ஓடிவருகையில், பிரத்யும்ன குமாரன் குதிரையின் பேரிலேறிக்கொண்டு வேகத்துடன் அத்ரஸ்யமாக மறைந்து சத்யபாமையினுடைய உத்யான வனச்சமீபம் வந்திழிந்து பிரக்ஞப்தி வித்தையை வானர ரூபமாக்கித் தன் ஹஸ்தத்தில் கயிறால் பிடித்துக்கொண்டு, அந்த வன ரக்ஷகர்களைப் பார்த்து,

"வாராய், உத்யான பாலகர்களே! இந்தக் குரங்கு பசித்தீவ்கரத்தினால் மா விருக்ஷம் முதலானவைகளுடைய பலங்களைப் பார்த்து, என்னுடைய ஹஸ்தத்தில் நில்லாமல் இழுக்கப்பட்டது நீங்கள் சொல்ல நாழிகைபர்யந்தம் விடவேண்டியதென்று சொன்ன வசனத்தைக் கேட்டு, அந்த வன ரக்ஷகர்கள் "வாராய், மூடனே, சத்யபாமைக்குப் புத்ரனாகிய பானுகுமார விவாஹ நிமித்தம் வரப்பட்ட ராஜாக்களுக்குப் புஜிக்கிறத்தின் பொருட்டு இந்த ஆம்ரவன சக கிராக்ஷை நாளிகேர பலங்கள் ரஷிக்கப்பட்டனவென்று இந்த வனத்துக்குள் விடக்கூடாதென்று சொன்ன வார்த்தையைக் கேட்டு, விருத்த ரூபமுள்ள குமாரன் நான் என்ன செய்வோனென்று வானரத்தை விருக்ஷாஸ்ரங்களில் ஏறவிட்டனர்.

அப்பொழுது, ஒரு குரங்கானது அநேக சகஸ்ர வானரங்களாகி, சமஸ்தபல புஷ்ப பலாதிகளை உடைய விருக்ஷ விசேஷங்களைத் துவம்சம் செய்து, அவசரத்தில் கோலாகலக் கூச்சலுடன் வரப்பட்டிருக்கிற பட விசேஷங்களைப் பூமியில் விழும்படி தள்ளிவிட்டுப் பிரத்யும்னரானவர் பட்டணத்தில் வருகுற சமயத்தில் பானுகுமாரனுடைய விவாக நிமித்தம் சொர்ணமயமான ரதத்தில் ரத்னமயமாக கும்பங்களை ஸ்தாபித்து, அநேகத் துவஜங்களினாலேயும் அஸ்மானகிரி கண்ணாடி விசிறி சாமரைச் சக்கரங்களினாலேயும், சங்கம், எக்காளை, புல்லாங்குழல், மிருதங்கம், சதானவீணை, தம்பூர், பேரி, நத்தனம் இன்னும அநேக வாத்யம் சப்தங்களினாலேயும், விசேஷ ரூபமுள்ள சஜ்ஜனர்களினாலேயும் அதிகச் சோபையுடன் வரப்பட்டதைப் பார்த்து பிரக்ஞப்தி வித்தையினால் பானுகுமார விவாக நிமித்தமென்று அறிந்து, தான் ஒரு ரதத்தை நிர்மித்து, ஒட்டை, கழுதை ரூபத்தைப் பூட்டி, அவர்களுடைய அபிமுகமாக வருகின்ற சமயத்தில் பரிகாசத்தைச் செய்யப்பட்டிருக்கிற ஜன விசேஷத்தைப் பிரத்யும்ன குமாரன் ரதசோபாதிகளைப் பூமியில் விழும்படி செய்து, தன்னுடைய ரதத்தை வேகத்துடன் விடும் சமயத்தில் அநேக மகாவீதிகளில் பயத்தினால் ஓடுகிற ஜனங்களை தம்சமசகாதிகளினாலே உபத்திரவத்தைச் செய்கிறபோது, சகல ஜனங்களும், இவன் வித்யாதரனோ? என்றும், "தேவேந்திரனோ?" என்றும், ஒருவர்க்கொருவர் கோலாகலக் கூச்சலிடுகிற சமயத்தில் பிரத்யும்ன குமாரன் அவ்விடத்தில்நின்றும் புறப்பட்டுப் பட்டண மத்யத்திலிராநின்ற ஒரு வாபியைப் பார்த்து, வித்தையினால் சத்யபாமையினுடைய வாபிதடாக மென்று அறிந்து தான் விருத்தப் பிராமண ரூபமுள்ள சன்னியாசி ரூபத்தைத் தரித்துச் சக்ரதண்ட கமண்டலத்துடன் கூடி, அந்த வாபிசமீபம் குறுகி, வாபி ஜலத்தை ஒருவரும் ஸ்பர்சிக்கக் கூடாதென்று ரக்ஷிக்கப்பட்ட ஸ்திரீ கூட்டங்களைப் பார்த்து,

"வாராய் புத்திரிகளே! இந்த வாபி ஜலத்தைப் பானம் செய்குறது பசி தீவீரத்துடன் கூடிஇருக்கிற எனக்கு உத்திரவு கொடுக்கவேணுமென்று" கேட்கில் அந்த ஸ்திரீமார்கள்,

"வாராய், விருத்தப் பிராமணனே! இந்த ஜலமானது பானுகுமார விவாக நிமித்தம் வரப்பட்ட வீரப்புருஷர்களான பஞ்சப்பாண்டவர்களுக்குத் துரியோதனாதிகள் இந்த ஜலத்தைப் பானம் பண்ணுகைக்கு யோக்யமானது கிருஷ்ணருக்கும் பட்டமகிஷியான சத்யபாமையினால்" இதர ஜனங்கள் ஸ்பர்ஷிக்கக் கூடாதென்று எங்களை ரஷிக்கும்படி விடப்பட்டவளென்று சொன்ன வார்த்தையைக் கேட்டு, விருத்தமுள்ள ரூபகுமாரன்,

"வாராய், ஸ்திரீமார்களே! உங்களால் சொல்லப்பட்டிருக்கிற துர்யோதன மகாராஜன், அநேகச் சாதுரங்க சேனைகளுடன் கூடிக்கொண்டு, தன் புத்திரியை அலங்கரித்து, வாத்ய விசேஷத்துடன் பாதி மார்க்கத்தில் பிரயாண முகமாக வரும்போது, ஒரு வேடனால் உதயி என்கிற புத்ரியானவள் ஸ்வீகரிக்கப்பட்டாளென்றும், பானுகுமார விவாக நிமித்தம் பூர்ணகும்பத்துடன், ரத கஜாதி சக்ர சாமரைகள் ஒரு விகார வாஹத்துடன் கூடின ரதசாரதியினால் நாசமாச்சுதென்றும், இனிமேல் விவாக நிமித்தமான ராஜாக்கள் வருகிறதில்லை என்றும், சொன்ன வார்த்தைகயைக் கேட்டு, அந்த ஸ்திரீமார்கள்,

"வாராய், விருத்தப் பிராமணனே! உன்னால் சொல்லப்பட்டு இருக்கிற வசனங்கள் அசத்யம் என்றும் கிருஷ்ணரால் உத்தேசித்த காரியங்கள் எப்படி முடியுமென்றும் சொன்னபிறகு பிரத்யும்னகுமாரன் பரிஹபிரதி வார்த்தைகளினால் வாவிக்குள் பிரவேசித்துக் கமண்டலத்தில் ஒரு திவலையில்லாமல் ஜலங்களைப் பூர்த்தி செய்துகொண்டு கரையின்பேரில் வருகின்றவனைத் தாதிமார்கள், ஹஸ்தங்களைப் பிடித்து அடிக்கின்ற காலத்தில் குமாரன், அவர்களை விர ரூபமுள்ள விருத்த ஸ்திரீகளாக நிர்மித்து, இவர் போகின்ற போது, ஸ்திரீமார்கள் ஒருவர்க்கொருவர் தங்களுடைய ரூபத்தைப் பார்த்து, "இது என்னா ஆச்சரியமென்றும்" வாவியை உலரும்படி ஜலங்களைக் கமண்டலத்துக்குள் ஸ்வீகரித்தானென்றும் கோபத்தை உடையவர்களாகி வந்து, குமாரனுடைய ஹஸ்தத்தில் இராநின்ற கமண்டலத்தைப் பிடித்து இழுக்குறவர்களைக் கடை வீதியினுடைய மத்யத்தில் போகையில், மத்யத்தில் கமண்டலத்தை உடைத்தனன்.

அப்பொழுது, கடைவீதி மார்க்கத்தில் இராநின்ற நவ தானியங்களும், ரத்ன ராசிகளும் வஸ்திராதிகளும், கஜ அஸ்வாதிகளும் பாண்டங்களும் ஜல பிரவாகங்களினாலே அடித்துக் கொண்டு போகையில் வியாபாரிகளுடைய கோலாகலத் துக்க வார்த்தைகளைக் குமாரன் கேட்டு, அவ்விடத்தில் நின்றும் புஷ்ப மாலைகளை விக்கிற இடத்தில் சென்று, மாலைக்காரர்களைப் பார்த்துக் குமாரன் சப்த புஷ்ப மாலைகளை எனக்குக் கொடுக்கக் கடவீர்களென்று சொல்லத் திரவியத்தினால் கேட்குற பொழுது,

மாலைக்காரர்கள், ''வாராய், விருத்தப் பிராமணனே! சத்யபாமையினுடைய புத்ர விவாக நிமித்தம் இப்பொழுது கட்டப்பட்டதென்றும், இப்பொழுது உனக்குக் கொடுக்கிறதுக்கு யோக்யமில்லை என்றும் சொன்ன வசனத்தைக் கேட்டு, குமாரன் வாசனைகளோடு கூடியிராநின்றிருக்குற மந்தார குந்தவ குலோத்பல ஜாதி நாககேசர புன்னாக சாமந்தி பாரிஜாத புஷ்ப விசேஷங்களை துர்கந்தமான அருகம் பூவாகச் செய்துவிட்டுப் போகையில் வியாபாரிகளும் வாபி ஜலத்தை ரட்சிக்கப்பட்ட தாதிகளும் மாலைக்காரகளும் ராஜாவினிடத்தில் இவனைப் பிடித்துக்கொண்டு போகி, தண்டிக்க வேணுமென்று சித்தத்துடன் கோலாகல வார்த்தைகளினாலே சமீபம் குறுகி நெருங்கையில், பிரத்யும்ன குமாரன் அவர்களுக்கு அதிருஷ்ய ரூபத்தாற் சென்று யானை விசேஷங்களுடைய மத ஜலங்களினாலே சேராயிராநின்ற ராஜவீதியை அடைந்து, சப்த பிரசாத மெத்தைகளுடன் கூடியிராநின்றிருக்குற ஒரு கிருகத்தைப் பார்த்து, இது யாருடைய கிருகமென்று கேட்குறபோது பிரக்ஞப்தி வித்தையானது,

"வாராய், குமாரனே! உனக்குப் பாட்டனாயும் மேஷ யுத்தத்தில் சமர்த்தனாயும் அநேக ராஜபுத்திரர்களால் சூழப்பட்டவனாயும் இந்திர நீல ரத்னத்துக்கு சத்ருசமான அலிகபாரத்தை உடையவனாயும் மன்மத ரூபமுள்ள வசுதேவருடைய கிருகமென்று சொன்ன சமயத்தில் பிரத்யும்னகுமாரன் பிரக்ஞப்தி வித்தையைச் சிறு சிலம்புகளினாலே அலங்கரிக்கப்பட்ட வக்ருரூக்ஷமாகிய கொம்புத்வயத்தை உடைய மேஷ ரூபமாக நிர்மித்துத் தான் மறு மேஷ ரூபத்தை உடையவனாகி, ஹஸ்தத்தில் கயிறால் பிடித்துச் கொண்டு துவார பாலகனுடைய அனுமதியினால் வசுதேவருடைய சமீப மடைந்து நமஸ்கரித்து விநயத்துடன்,

"வாராய் பூஜ்யனே! தாங்கள் மேஷ யுத்தத்தில் சமர்த்தர் என்று வீர புருஷர்களினாலே கேள்விப்பட்டுத் தூர தேசத்தில் நின்றும் வந்தேன் என்று சொன்ன வார்த்தையைப் பார்த்து, வசுதேவரானவர், குஞ்சிரிப்புடன்கூட என்னுடைய முழங்கால் முன்பாக உன்னுடைய மேஷத்தை விடுவென்று சொன்ன வார்த்தையைக் கேட்டுப் பிரத்யும்னகுமாரன் சமீபத்திலிராநின்ற அநேக ராஜ புத்திரர்களுடைய அனுமதி பூர்வகம் தன்னுடைய மேஷத்தை ஹஸ்தத்தினால் முதுகைத் தட்டிவிட்ட சமயத்தில், அந்த மேஷம் அதிக வேகத்துடன் ஓடி, வசுதேவரைப் பூமியில் விழும்படி இடித்து ரணமாக்கி, மூர்ச்சையாகச் செய்துவிட்டுக் குமாரனுடைய சமீபம் வந்துநின்ற சமயத்தில், பிரத்யும்ன குமாரன், குஞ்சிரிப்புடன் கூடி, அவ்விடத்துநின்றும் சீக்கிரமாய்ப் புறப்பட்டு, 13,14 வயசுள்ள பிராமண யதி ரூபத்தை உடையவனாகி, சத்யபாமையினுடைய கிருகத்தை அடைந்து, எனக்குப் பசி விரீமானது விசேஷமாய் இருப்பதால், எனக்குப் போஜனம் செய்துவித்தால் உன்னுடைய குமார விவாக விருத்தியான ஆசிர்வாதத்தைத் தருகிறேனென்று சொன்ன வார்த்தையைக் கேட்டுச் சத்யபாமையானவள் தாதிமார்களைக் கூப்பிட்டு, இந்த யதிக்கும் போஜன பதார்த்த விசேஷங்களைப் போடுங்களென்று உத்தரவு செய்ததின்பேரில்,

அந்தத் தாதிமார்கள் விவாக நிமித்தம் செய்திருந்த லட்டு முதலான பலகார விசேஷப் போஜனங்களையும் போட்டும் திருப்தி இல்லாமல் கூச்சலிட்ட சன்னியாசியைப் பார்த்து, இவன் பிசாசியோ ராக்ஷஸனோ என்று பிரமித்து நின்ற சமயத்தில் பாலரூபமுள்ள சன்னியாசி சத்யபாமையைப் பார்த்து, " நீ தரித்திரை என்றும், ஒருவனுக்கு ஆகார தானம் கொடுக்கிறதுக்குச் சாமர்த்தியம் இல்லாமல் விவாக மங்களோத்சவ நிமித்தம் சாதுரங்க சேனைகளுடன் கூடிவரப்பட்ட அநேக சகஸ்ர ராஜாக்களுக்கு எப்படி விருந்து செய்வாயென்று நிந்தித்து, உன்னுடைய ஆகார தானங்களெல்லாம் தருகுறேனென்று வாந்தி செய்து சமஸ்தமான தாதி விசேஷசங்களுடன் கூடின சத்யபாமை முழுகும்படி அவளுடைய திருமுற்றத்தில் கக்கிவிட்டு, இவள் ராஜபத்னிக்கு யோக்யமல்ல என்று வெளியே புறப்பட்டு ருஸ்ஸிதமான அல்ப ஜாதி ரூபத்தை உடையவனாகிச் சத்யபாமையினால் பானுகுமார விவாக நிமித்தம் விருந்து செய்யப்பட்டிருக்குற பிராமணர்கள் உடைய போஜன மாலையுள் புகுந்து, போஜனத்தின் பேரில் ஆசையுள்ளவனாயும் பார்த்து இருந்த சமயத்தில், அந்தப் பாண்டகசாலையில் இருந்த சகலப் பிராமணர்களும் இவனைப் பார்த்து, இவ்விடத்தில் வரத் தகுமோ என்று குபிதர்களாகித் தடிகளை ஹஸ்தங்களில் பிடித்துக் கொண்டு துஷ்ட வார்த்தைகளுடன் ஓடிவருகிற பிராமணர்களைப் பிரத்யும்ன குமாரன் அவர்களை ஒருவர்க்கொருவர் அடிக்கும்படியாயும் ஒருவர்க்கொருவர் கேசங்களைப் பிடிக்கப்பட்டவர்களாயும், ஒருவர்க்கொருவர் பூமியில் விழப்பட்டவர்களாயும், பிறபட்டவர்களாயும் செய்துவிட்டுப் பிரத்யும்ன குமாரன் அவ்விடத்தில்நின்றும் புறப்பட்டுப் பாலரூபமுள்ள அணுவிரத தாரியாகிக் கமண்டல....... தனக்கு மாத்ருவான ருக்மணி மகாதேவியினுடைய கிருகத்தை அடைந்து சூர்யோதய காலத்தில் பசி தீவிரத்துடன் திருமுற்றத்தில் நின்று சாஸ்திரரோபதேசத்துடன் ருக்மணி தேவிக்கு,சம்யத் தர்சக்ஞான சாரித்ரகுணங்களை பிரசித்தமாகும்படி அறிவித்தனன்.

அப்பொழுது, ருக்மணி மகாதேவியானவள் அனுபிரத தாரியைப் பார்த்து,

"வாராய், பூஜ்யனே! அநேக தேசங்களினால் சஞ்சரிப்பட்ட தங்களுக்கு என் புத்திரன் வரலாறு தெரியுமா" வென்று விநய நமஸ்காரத்துடன் கேட்டனள்.

அப்பொழுது, குமாரன், "வாராய், பூஜ்யவதியே! உன்னுடைய புத்திரன் அதிசீக்கிரத்தில் வருவானென்று ஆசீர்வாத வசனத்துடன் சொன்ன வார்த்தையைக் கேட்டு, ருக்மணி தேவியானவள் அதி பிரிதீயுடையவளாய், பிரம்மச்சாரிக்கு ஆகாரதானம் செய்ய நினைந்து, கிருகத்துக்குள்போய்ச் சமையல் செய்ய உத்தேசித்து, அக்னி விறகுகள் புகைந்து எரியாமையைக் கண்டு, கஷ்டத்துடன் ஆலோசனை செய்து

சமயத்தில், நாரதருடைய வார்த்தையினால், இவன் பிரத்யும்னகுமாரனோ என்று தன்னுடைய கிருக சமீபத்தில் இராநின்று ஜல வாவி பூர்ணங்களையும் ஒரு சமயத்தில் ஷட்ருது காலங்கள் யோக்யமான பல புஷ்ப பல்லவங்களையும், கோகிலத் தொனிகளையும் மயில்கிடை நர்த்தனங்களையும், குயில் தொனிகளையும், ஊமைகள் பேசுகுறதையும், குருடர்கள் நேத்ரபார்வைகளையும், செவிடர்கள் கானங்களைக் கேட்குறதையும் தன்னுடைய ஸ்தன பாரங்களுடைய அக்ரத்தில்நின்று ஒழுகப்பட்ட பால் விசேஷங்களையும் பார்த்து, ஆனந்தக் களிப்புடன், "ஹா புத்ரனே" என்றும் ஓடிவருகையில் பிரத்யும்னகுமாரன் தன்னுடைய மறு வேஷத்தை நீங்கி, தன் சுய ரூபத்தைத் தரித்து, "வாராய், தாயே, என்று ருக்மணி,

மகாதேவியினுடைய பாதக் கமலங்களில் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, ஒருவர்கொருவர் ஆனந்த துக்க ரோதனங்களோடு முத்தமிட்டு இருந்த சமயத்தில்,

பிரத்யும்ன குமாரன் ஜனனம் தொடங்கி யௌவன வயசு பர்யந்தமான பால அவஸ்த விருத்திகளைக் காட்டி, மாத்ருவான ருக்மணி மகாதேவிக்கு ஆசா சந்தோஷ பரிபூர்ணத்தைச் செய்தபின்பு, புத்திரனைப் பார்த்து, சத்யபாமையானவள் என்னுடைய கேசங்களைச் சேதனம் செய்கிறதுக்கு இப்பொழுது தாதிமார்களை அனுப்பியிருக்கிறாள் என்றும், இப்பொழுது வருவார்கள் என்றும் வார்த்தையைக் கேட்டுப் பிரத்யும்னகுமாரன் அதைரியப்பட்ட வேண்டாமென்று சொல்லியிருந்த சமயத்தில், அந்தத் தாதிமார்கள் வந்து ஏரோகேசங்களைச் சைதனம் செய்குறதுக்கு ருக்மணி மகாதேவியினுடைய சமீபம் குறுகி, சுவர்ண தாம்பூலத்தில் தங்கத் தட்டுடைய சிரசில் இராநின்ற மயிர்களை ஏந்தி, மொட்டையுடன் கூடி, சத்யபாமையினுடைய சமீபம் சென்று ருக்மணி மகாதேவியினுடைய கேசங்களென்று கொடுத்தனர்கள். சத்யபாமையினுடைய சிரோ முண்டத்தைப் பார்த்து நித்யமான வசனத்தினால்,

வாராய், ஸ்திரீகளே! ருக்மணியினால் மொட்டையிடப்பட்ட உங்களுடைய சிரசைப் பாருங்கள் என்று வசனத்தைக் கேட்டு, அவர்கள் தங்களுடைய அஸ்தங்களினால் சிரசைத் தட்டிப்பார்த்ததில் நிச்சயமென்று அறிந்து, ஒருவர்க்கொருவர் முகங்களைப் பார்த்து, துக்கிக்கின்றவர்களைச் சத்யபாமையானவள் இவர்களுடன் கிருஷ்ணருடைய சபா ஸ்தானத்தை அடைந்து அதிகக் கோபத்துடன் ருக்மணியானவள் சபதப்பிரகாரம் முடிக்காமை இவர்களை மொட்டையடித்து அனுப்பின நியாயத்தைப் பார்க்க கடவதென்று சொன்னபொழுது, கிருஷ்ணரானவர், பலதேவருடைய முகத்தைப் பார்த்தனர். பலதேவரும், இக்கோபத்தினால்

ருக்மணி தேவியினுடைய சமீபம் அநேக ஜனங்களுடன் நாவிதர்களை அனுப்பினபொழுது பிரத்யும்னகுமாரன் இவர்களுடைய வரவைப் பார்த்துத் தனக்கு மாதாவாகிய ருக்மணி தேவியை என்னுடைய கிரீடா விநோதத்தைப் பார்க்கக் கடவதென்று மறைவாகப் பார்க்கும்படி விட்டுத் தான் விருத்தப் பிராமண ரூப வேஷதாரியாகி, அதிக ஸ்தூல சரீரத்துடன் வாசப்படித் துவாரத்தில் படுத்து உதைத்துக்கொண்டு இருந்தபொழுது, அந்த ஜனங்கள் வந்து, மார்க்கத்தை விடுயென்று இறைச்சலிட்டதைப் பார்த்து, விருத்த ரூபமுள்ள பிராமணன்,

"வாராய், ஜனங்களே! நான் சத்யபாமையினால் விவாக நிமித்தம் செய்யப்பட்ட பலகார விசேஷங்களைப் புஜித்து, வயிற்று நோயினால் பெருமூச்சு உச்வாசத்துடன் படுத்திராநின்ற நான், இதைவிட்டு மற்றொரு ஸ்தானத்தைப் போகிறதுக்கு சமர்த்தம் இல்லையென்று சொன்ன வசனத்தைக் கேட்டு, அந்த ஜனங்கள் பிராமணனைத் தாண்டிப் போகிறதுக்கு சாஸ்திர நீதியில்லாததினால் பலதேவருடைய சமீபம் சென்று, மார்க்கத்தை விடாமலாயிருக்கிற விருத்தப்பிராமணனுடைய விருத்தாந்தத்தைச் சொன்ன சமயத்தில் அதிகப் பயத்துடன் கூடியிராநின்ற பலதேவரானவர் கோபத்துடன் வந்து, பிராமணனுடைய ஏக பாதத்தைப் பிடித்து, இழுத்த சமயத்தில் பிரத்யும்னரும் தன்னுடைய ஏகபாதத்தைப் பிடித்து இழுத்த சமயத்தில பிரத்யும்னரும் தன்னுடைய வித்தையினால் இந்தப் பலதேவரைப் பட்டணத்துப் பாஷ்யபூமியில் போகும்படி காலை நீட்டினார்.

பலதேவரும் பட்டணத்தினுடைய பாஹ்யபூமியில் சென்று, தன் ஹஸ்தத்தில் இராநின்ற பாதத்தைப் பூமியில் போட்டுவிட்டு, அதிகக் கோபத்துடன் யுத்தோன்முகனாகி ஓடிவருகிறபோது, பிரத்யும்னரானவர் தன்னுடைய மாதாவினால் பலதேவரென்று அறிந்து, இவர் சிம்மரூபத்தைத் தரித்துச் சிம்ம நாதத்துடன் ரூக்ஷப் பார்வையினால் பாசப்படி அபிமுகமாக நின்று இருந்தசமயத்தில், பலதேவர் வந்து சிம்மத்துடன் யுத்தம் செய்கின்றபொழுது, சிம்மமானது பலதேவரைத் தூக்கிக் கிருஷ்ணருடைய சபாஸ்தானத்தில் விழும்படி செய்தபொழுது பலதேவரும் மூர்ச்சை அடைந்தனர்.

கிருஷ்ணரானவர், பலதேவரைப் பார்த்து, "இது யென்ன அதிசயம்?" என்று சிந்தித்து மறுபடி கிருஷ்ணரானவர் நாரதருடைய வார்த்தையைச் சந்தேகித்துப் பிரத்யும்னகுமாரன் காளசம்பர ராஜனுடைய கிருகத்தில் நின்றும் வந்து, இப்படிக்கொத்த வீர்யாதிசயங்களைச் செய்கிறானோ என்று பாண்டவர்களுடன் ஆலோசித்துப் பலதேவரைச் சந்தனைக் குழம்புகளினாலேயும் வீசப்பட்ட விசிறிகளுடைய காத்துகளினாலேயும் மூர்ச்சையைத் தெளியும்படி செய்துவிட்டு, இவனைப் பார்ப்போமென்று பலதேவ பாண்டவருடன் கிருஷ்ணரானவர் வருகுற சமயத்தில் பிரத்யும்ன குமாரன் சிம்மரூபத்தை விட்டுப் தன்னுடைய

தாயைப் பார்த்து, இப்பொழுது எனக்குப் பிதாவாகிய கிருஷ்ணரைக் காணுகுறதுக்கு யோக்யமில்லை யென்று யுத்தோ முகத்தினால் காணவேணுமென்றும் அங்கீகார வார்த்தைகளுடன் சொன்னபிறகு உன் இஷ்டப்பிரகாரம் செய்யென்று அனுமதிக்கப்பட்ட தன்னுடைய தாயைத் தன்னுடைய புஜத்தின் பேரில் தூக்கிக்கொண்டு உதயிநாரதர் இராநின்ற விமானத்தின்மிசை விட்டுவந்து பிரக்ஞப்தி வித்தையைப் பார்த்து, ருக்மணி ரூபமாகி நிர்மிக்கப்பட்ட மற்றொரு விமானத்தில் சுவீகரித்துக் கொண்டு தான் மறுரூபத்தால் கிருஷ்ண பலதேவ பாண்டவ பாண்டவர்களைப் பார்த்து,

"வாரீர், ராஜாக்களே! ருக்மணிதேவியை நான் தூக்கிக்கொண்டு என்னுடைய ஸ்தானத்தைப் போகிற னென்றும் உங்களுக்கு வீர பௌருஷத்வம் இருந்தால் யுத்தத்துக்கு வாருங்களென்றும் சொல்லிவிட்டு, ரணகளத்தில் யுத்தரங்க பேரியை அடித்துஇராநின்ற சமயத்தில கிருஷ்ணரானவர் அதிகக் கோபத்தை அடைந்து, இவன் சத்ரு ராஜாவென்று ஆலோசித்துப் பலதேவ பாண்டவர்களைச் சதுரங்க சேனையுடன் யுத்த நிமித்தமாக அனுப்பினபொழுது, அந்த ராஜாக்கள் இருப்பு ஜீராக்களுடன் வந்ததைப் பார்த்துப் பிரத்யும்ன குமாரன் அநேக திவசம் யுத்தம் செய்து, சாதுரங்க சேனைகளைப் பூமியில் மரணமாக்கிப் பிரத்யும்னகுமாரன் ஜயபேரிகை அடிவித்துச் சப்தத்தைக் கிருஷ்ணரானவர் கேட்டுத் தனக்கு மித்ருவான பலதேவர் முதலான பஞ்சபாண்டவர்களுடைய மரணத்தை அறிந்து, அதிகத் துக்கிதனாகி அழுகின்ற கிருஷ்ணரானவர் சமுத்ரவிஜயாதி பெரியோர்களினாலே தேர்தலை அடைந்து, ரதச் சாரதியைக் கூப்பிட்டு, அஸ்வங்களைப் பூட்டிக்கொண்டு என்னுடைய சமீபத்தில் கொண்டுவா என்று சொன்னத்தைக் கேட்டு, ரதச் சாரதியானவன் சொன்ன பிரகாரம் ரதத்தில் அசுவங்களைப் பூட்டிக் கிருஷ்ணருடைய சமீபத்தில் சென்று நமஸ்காரத்துடன் இருந்தனன்.

கிருஷ்ணரானவர் கோபாக்னியுடன் ரதத்தின் மேலேறிப் போகையில் சுபச்சகுனம் முதலான குறிகளைக் கண்டு ரதச் சாரதியைப் பார்த்து, "என்னுடைய தமயன் முதலான பந்துஜனங்கள் மரணத்தை அடைந்தும் எனக்குப் பிராணகாந்தையாகிய ருக்மணிதேவியைச் சத்ருவினால் ஸ்பர்சிக்கபட்டிருந்தும், சுபக் குறிகள் ஏன் உண்டாகு" தென்றும் சொன்ன வார்த்தையை ரதச் சாரதியானவன் கேட்டு,

"வாராய், ஸ்வாமியே, நமக்குச் சத்ரு நாசத்துடன் தங்களுடைய பிராணகாந்தையை ஸ்சுவீகரித்துத் திரும்பிப் பட்டணத்தை அடைந்து ராஜ்யபரிபாலனம் செய்குறதுக்குச் சந்தேகமில்லை என்று சொன்னதைக் கிருஷ்ணரானவர் கேட்டு, ரதச் சாரதியுடன் ரணாங்கணத்தை அடைந்து, யுத்தோன்முகனாய் இராநின்றிருக்கிற சத்ருவைப் பார்த்து,

---

இருப்பு - இரும்பு

"வாராய், ராஜனே! எனக்கு மித்ரர்களாகிய பலதேவர் முதலான பாண்டவர்களை ஹதம் செய்து என்னுடைய பார்யாளை உன்னால் ஸ்வீகரிக்கப்பட்டிருந்தும் உன் பேரில் ஸ்நேக பரிணாமம் உண்டாகாநின்றது. ஆகையால் பிராணகாந்தையை எனக்குக் கொடுத்துவிட்டு உன்னுடைய ஸ்தானத்தைப் போகக் கடவாயென்று சொன்னதைப் பிரத்யும்னகுமாரனாகிய மாயா சத்ருவானவன் கேட்டுக் கிருஷ்ணரைப் பார்த்து,

"வாராய், கிருஷ்ண பூபதியே! உன்னுடைய பந்து ஜனங்களை ஹதம் செய்து, உன் பார்யாளை ஸ்வீகரித்து இருந்தும் என் பேரில் ஸ்நேகபாவம் உண்டாகாதென்று சொன்னால் உனக்குச் சத்ருவானவன் எப்படிக்கொத்தவனாக வரக்கடவதென்று சொன்ன பரிகார வசனத்தைக் கேட்டுக் கிருஷ்ணரானவர் கோபத்துடன் வில்லை வளைத்துப் பாணங்களாகிற மழைகளை வர்ஷித்து, அபிமுகமாக வருகிற கிருஷ்ணருடைய பாணங்களையும் சாபத்தையும் பிரத்யும்னகுமாரன் அறுத்துவிட்டனன். ஏகாங்கியாய் இராநின்ற கிருஷ்ணரானவர் அதிகக் கோபத்தை அடைந்து, இவனுடன் மல்ல யுத்தத்தினால் ஜெயிக்கவேணும் என்று சிந்தித்துப் பூமிக் கம்பனத்துடன் புஜத்தைத் தட்டிச் சத்ருவைப் பார்த்து, என்னுடைய மல்லயுத்தத்துடன் அபிலாஷையானது இருந்தால் வரக்கடவாயென்று ஒருவர்கொருவர் மல்லயுத்தத்தில் நெருங்குகிற சமயத்தில் நாரதரானவர் ஆகாசத்தில்நின்றும் இழிந்து, எதிர்க்கப்பட்ட இருவர்களையும் பார்த்துப் பிதாவுக்கும் புத்திரனுக்கும் நல்ல யுத்தம் நடக்குதென்று சொல்லியும்,

"வாராய், கிருஷ்ணரே! பிரத்யும்ன குமாரன், காளசம்பரனுடைய கிருகத்துநின்றும் விருத்தியை அடைந்து, சோடச லாபத்துடன் பதினாறு வயசை அடைந்து, இப்பொழுது உன்னுடைய சமீபத்தில் வந்தானென்று சொன்னதைக் கிருஷ்ணரானவர் கேட்டு, அதிகச் சந்தோஷத்துடன் புத்திரனை ஆலிங்கனம் செய்து, முத்தமிட்டு, க்ஷேமச் சமாச்சார வார்த்தைகளினால் பிரத்யும்னகுமாரன் பிதாவினுடைய பாதக்கமலத்வயத்தை நமஸ்கரித்து வினயத்துடன் இருக்கிறபோது,

கிருஷ்ணரானவர், நாரதரைப் பார்த்து,

"வாராய், நாரத பகவானே! எனக்கு மித்திரர்களாகிய பலதேவாதி பந்துஜனங்கள் மரணத்தை அடைந்ததினால் எனக்கு ஒரு சமயம் துக்கம் உண்டாகிறதென்றும் புத்திரன் வரவினால் ஒரு சமயம் சந்தோஷம் உண்டாகாதெ"ன்றும் சொல்லினான்.

நாரதரானவர், கிருஷ்ணருடைய துக்க சந்தோஷத்தைக் கேட்டுப் பிரத்யும்னகுமாரனைப் பார்த்து,

"வாராய், குமாரனே! உன்னால் சாதுரங்க சேனைகளுடன் பலதேவர் முதலான பந்து ஜனங்களை எழுந்திருக்கும்படி சொன்னபிறகு, பிரத்யும்ன குமாரரானவர் தன்னுடைய வித்தையினால் சகலப் பேர்களையும் நித்திரையிலிருந்து எழுந்தது போல எழுப்பினன்.

பலதேவாதி பாண்டவர்கள் பிரத்யும்ன குமாரனைப் பார்த்துச் சந்தோஷத்தை அடைந்தார்கள். கிருஷ்ணரானவர் மாயா யுத்தத்தைச் செய்யப்பட்ட பிரத்யும்ன குமாரனைப் பார்த்து அதிக ஆனந்தத்தை அடைந்திருந்த சமயத்தில், பிரத்யும்ன குமாரன் தன்னுடைய தாயாரையும் உததி குமாரத்தியையும் ரதத்தின் பேரில் ஸ்தாபித்து, வாத்ய விசேஷங்களுடன் புத்திரனை இட்டுக்கொண்டு சப்த பிராசாதரங்கள் நெருங்கி இராநின்ற வீதி மத்யத்தில் போகாநின்ற பிரத்யும்னகுமாரனுடைய ரூபத்தை மாளிகையில் இராநின்ற ஸ்திரீமார்கள் பார்த்து, மோகித்தார்களாகித், தங்கள் தங்களுடைய புருஷன்பேரில் ஆசக்தி இல்லாதவர்களாகி இராநின்ற அவசரத்தில் கிருஷ்ணரானவர், நடன நாட்ய விநோதங்களினாலும் ஜய ஜயா வென்கிற ஆசிர்வாதங்களுடைய பட்டணத்து ஜனங்களுடைய கோலஹலச் சப்தங்களினாலேயும் பூமி அதிரும்படியான வாத்ய விசேஷங்களினாலேயும், அநேகத் துந்துபிச் சக்கரச் சாமரை பூர்ணகும்பம் முதலாகிய அஷ்டமங்கள் சோபைகளினாலேயும், சகல ஜனங்களுடைய மத்யத்தில் ஜாத்யஸ்வ நடனங்களினாலேயும் பட்டண வீதி தோறும் பிரதக்ஷிணமான வந்து பிரத்யும்னகுமாரனைச் சகல ஜனங்களுடைய திருஷ்டி தோஷ பரிகாரணார்த்தம் ஆலத்தி எடுத்து ரதத்தில் நின்றும் பிரத்யும்ன குமாரன் அநேகச் சேவகச் சனங்களுடைய ஹஸ்த ஸ்பரிசத்தில்நின்றும் இழிந்து, பிதாவான கிருஷ்ணருடன் அரண்மனையை அடைந்து, போஜன தாம்பூல விசேஷங்களைப் பூஜித்து இருந்தபின், கிருஷ்ணரானவர் க்ஷேமங்கரமான விவாக மங்களோத்சவத்தைப் பத்திரிக்கையில் எழுதி, காளசம்பர ராஜா முதலான சமஸ்த ராஜாக்களுக்கும் தூர்தர்களினால் பத்திரிகையை அனுப்பினபொழுது, காளசம்பர ராஜன், தன் பத்தினியான காஞ்சன மாலையுடன் அநேக வித்யாதரக் கன்யைகளையும் பிரத்யும்னகுமாரன் விவாக மகோத்சவத்தினால் போகத்துடன் கூடியிராநின்ற ரதிதேவி முதலான பெண்களையும் ஸ்வீகரித்து, அநேக வித்யாதர ராஜாக்களுடன் துவாரகாபுரியை அடைந்து, கிருஷ்ண பிரத்யும்னருடன் சேமச் சமாசார வார்த்தைகளை வசனித்திருந்தபின், சுப முகூர்த்தத்தில் சுப லக்னத்தில், சுப யோகத்தில் பிரத்யும்ன குமாரன் உதயிகுமாரி முதலான தேவஸ்திரீகளுக்குச் சத்ருசமாயிருக்குற 508 பெண்களை விவாகம் செய்து மோகத்துடன் கூடியிருந்தபின், காளசம்பரன் முதலான ராஜாக்கள் அநேகத் திவசங்கள் இருந்தபின், கிருஷ்ணருடைய உத்தரவைப் பெற்றுக் கொண்டு தங்கள் தங்களுடைய பட்டணங்களைப் பத்னிமார்களுடன் அடைந்தபின்,

ஜாமபவது புததரனான ஜாம்பவ குமாரனுடைய சரித்திர விவரமாவது,

மதுராஜனுக்குக் கனிஷ்டனான கைடபனானவன் ஜிந்தபசுவினால் அச்யுத கல்பத்தில் தேவனாகி துவாவிம்சதி கடற்கால பர்யந்தம் தேவ சௌக்கியம் அனுபவித்துப் பின் அவதிக்ஞானத்தால் தன்னுடைய ஆயுள் முடிந்து அறிந்து விதேக சேத்திரத்தில் பிரசித்தமான கச்சாநாட்டில் ஜின மார்கத்தை தர்மாம்ருத வர்ஷங்களினால் பிரகடனம் செய்யப்பட்ட சீமந்தர பகவானுடைய சமவசரணத்தை அடைந்து கிரிப்பிரதட்சிணைத்துடன் சுவாமியை அஷ்டவித அர்ச்சனைகளினால் அர்ச்சித்து ஸ்தோத்திர சதங்களினால் துதித்து, ரிஷி கோஷ்டங்களை அடைந்து, கணதரரை வினய நமஸ்காரத் தோத்திரங்களுடன்,

"வாராய், ஸ்வாமியே! என்னுடைய பூர்வப் பவத்தைச் சொல்லவேணுமென்று, கணதரரானவர்,

"வாராய், தேவனே! உன்னுடைய பூர்வப் பவச் சம்பந்தமானது குள்ளநரி பவத்தையும் பிராமணப் புத்திரர்களுடைய பவத்தையும் மதுகைடப ராஜபுத்திரர்களுடைய பவத்தையும் அச்சுத பவதேவ பவத்தையும் சொன்னபிறகு உன்னுடைய கூடியிராநின்ற நாதாவாகிய மதுசர தேவன் பிரத்யும்ன சரம தேகோத்பத்தியும் அவருக்குச் சகோதரனாயும், கிருஷ்ணருக்குப் புத்திரனாக ஏழாவது திவசத்தில் பூமியில் அவதரிப்பாய் என்று சொன்னபிறகு கைடப சரமதேவம் விடைகொண்டு கிருஷ்ணருடைய சபாஸ்தானத்தை அடைந்து, நமஸ்காரத்துடன்,

"வாராய், ராஜனே! உனக்குப் புத்திரனாயும் இருக்கிற பிரத்யும்னகுமார பிராதாவுக்குக் கனிஷ்டனாகி, ஏழாவது திவசத்தில் உனக்கு நான் புத்ரனாக அவதரிப்பேன் என்று சொல்லியும் விலையிடக் கூடாமல் இருக்கிற ரத்னமய.... ஹாரத்தைக் கிருஷ்ணருடைய கண்டத்தில் அலங்காரமாகப் போட்டுவிட்டு, வினய நமஸ்காரத்துடன் விடைகொண்டு தேவனானவன் அச்யுத கல்பத்தை அடைந்தபின், கிருஷ்ணரானவர், சந்தோஷத்தை அடைந்து, இந்தத் தேவனைச் சத்யபாமைக்குப் புத்ரனாகும்படி செய்யவேணுமென்று சிந்தித்துச் சப்தம தினத்தில் கிருஷ்ணரானவர் சத்யபாமை ஊர்ஜயந்த பர்வதச் சமீபத்திலிராநின்ற ரைவதக வனத்தை அலங்காரத்துடன் வரவேண்டிதென்று சொல்லிவிட்டுக் கிருஷ்ணரானவர் அநேகப் பரிவார ஜனங்களுடன் வாத்ய விசேஷங்களினால் வனத்தை அலங்காரத்துடன் வரவேண்டியதென்று சொல்லிவிட்டுக் கிருஷ்ணரானவர், அநேகப் பரிவார ஜனங்களுடன், வாத்ய விசேஷங்களினால் வனத்தை முன்னுதாக அடைந்து இருந்தபின், பிரத்யும்னகுமாரன், கிருஷ்ணருடைய சித்தத்தை அறிவித்து மாதாவாகிய ருக்மணிதேவி சமீபமடைந்து,

'வாராய், தாயே! இன்றைய தினம் பிதாவுடன் காமக்கிரீடை, புணர்ச்சி செய்தால் எனக்குச் சகோதரனா[illegible] கைடப சரதேவன் புத்திரனாக அவதரிப்பானென்"று சொன்ன வ[illegible]த்தைக் கேட்[illegible], [illegible]மணி தேவியானவள் குஞ்சிரிப்புடன்,

"வாராய், புத்திரனே! உனக்குச் சத்ருசமான புத்திரன் லோகத்தில் இல்லை என்று உன்பேரில் இராநின்ற ஆராத சந்தோஷ விருத்தியும்பொருட்டு எனக்குப் புத்திராத்பத்தியின் பேரில் ஆசையில்லை என்றும் சொல்லினாள்.

பிரம்யும்னகுமாரன் அந்த வார்த்தையைக் கேட்டு,

"வாராய் தாயே! அந்தத் தேவனை அந்த ஸ்திரீக்குப் புத்திரனாகும்படி இஷ்டமென்று" கேட்டான். ருக்மணி தேவியானவள்,

"வாராய், தாயே! எனக்கு மித்ரவதியாய் இராநின்ற ஜாம்பவதி வயிற்றில் கர்ப்பமாகும்படி செய்வியா? என்று சொன்ன பிறகு, பிரத்யும்னகுமாரன், தாயை வினய நமஸ்காரத்துடன், விடைகொண்டு போய், ஜாம்பவதி கிருகத்தை அடைந்து, ஜாம்பவதியினுடைய விரலில் வித்யாமயமான முத்திரை மோதிரத்தைப் போட்டு ஜாம்வதியைச் சத்யபாமையினுடைய ரூபமாகச் செய்து, சத்யபாமை வருகுறதுக்கு முன்னுதாக ரைவதாக வனத்தில் இராநின்ற கிருஷ்ணருடைய சமீபம் போகவிட்டனள்,

கிருஷ்ணரானவர் சமீபத்தில் வராநின்ற ஜாம்பவதியைச் சத்யபாமை என்று கருதி, லதா மண்டபத்துக்குள் பஞ்சணை மெத்தையின்பேரில் அவளுடன் காமக்கிரீடா விநோதப் புணர்ச்சியைச் செய்தபொழுது, கைடப சரதேவன் ஜாம்பவதி கர்ப்பத்தில் அடைந்தனன்,

பின்பு, பிரத்யுன்மகுமாரன் வித்தையினால் முத்திரை மோதிரத்தை ஸ்விகரித்த பிற்பாடு கிருஷ்ணரானவர் ஜாம்பவதி என்று அறிந்து, பிரத்யும்னகுமாரன் பேரில் கிருபினாகி இராநின்ற அவசரத்தில், சத்யபாமையானவள் சிவிகையின் பேரில் ஏறிக்கொண்டு, அநேகாதிஜென்மங்களுடன் ரைவத வனத்தை அடைந்து கிருஷ்ணருடைய சமீபம் குறுகுதலும், கிருஷ்ணரானவர் அவளுடன் புணர்ச்சி செய்தபிறகு, மற்றொரு தேவன் சத்யபாமை கர்ப்பத்தில் வந்தடைந்தனன்.

ஜாம்பவதி, சத்யபாமை இவர்கள் இரண்டு பேருக்கும் நவமாசப் பரிபூர்ணத்துடன் கூடியிராநின்ற திவசத்தில், கைடபதேவன் ஜாம்வதிக்கும் ஜம்புகுமாரன் என்று புத்திரனாக ஜனித்தனன். சத்யபாமையானவள் சுபானுகுமாரனென்று நாமதேயத்தை உடைய புத்திரனைப் பெற்றனள்.

இந்த இரண்டு புத்திரர் அநேகக் குமாரர்களோடு அடைந்திருந்துள்ளவில் குரு உபதேசத்தினால் சகல சாஸ்திரங்களையும் படிக்கப்பட்டவர்களாகி, சுபானுகுமாரனுடைய ஞானத்துக்கு அதிகமான குணத்தை உடைய ஜாம்பவதி குமாரனானவன், பிராதாவான பிரத்யும்னகுமாரனோடு சௌக்கியமாக இராநின்ற நாளையில் அதிகச் சோபையோடு கூடியிருக்கிற சுபானுகுமாரராகிய இரண்டு பேர்களும்

சத்யபாமையோடு பலதேவருடைய முன்பாகச் சூதாட்டம் முதலானதை ஆரம்பித்து இராநின்ற அவசரத்தில் சத்யபாமையானவள், தன்னுடைய சுபானு கூலனை ஜயசீலனைச் செய்கிறதுக்கு வித்யாமயமான கோழியை விட்டனள்.

அப்பொழுது, மறைவாக வித்தையினால் ஜம்பு குமாரரானவன் பிரத்யும்னருடைய சகாயத்தினால் மற்றொரு வித்யாமயமான கோழியை விட்டு ஜயித்தனன்.

அப்பொழுது, சத்யபாமையானவள் சம்பு குமாரனுக்கு ஒரு கோடி திரவியத்தைக் கொடுத்தனன். மறுபடி, சத்யபாமையானவள் வித்யாமாயத்தால் சாதுரங்க சேனையை நிர்மித்தனன். அதைப் பார்த்துப் பிரத்யும்னருடைய சகாயத்தால் சம்புகுமாரனானவன், சங்கியாதீதமான சேனைகளை நிர்மாலணம் செய்து, இரண்டு கோடி திரவியத்தைச் சுவீகரித்தனன்.

மறுபடி, பிரதிக்ஞையினால் அக்கினியில் வஸ்திரத்தைப் போட்டதில், தகிக்காமலாயிருந்த காரணத்தைப் பார்த்துச் சுபானுகுமாரன் அபஜயத்தை அடைந்து, சம்புகுமாரனுக்குப் கோடி திரவியத்தைக் கொடுத்தனன்.

இந்தப் பிரகாரம் அநேக ஆட்டத்தினால் சுபானுகுமாரனை அபஜயம் செய்து, சம்புகுமாரனானவன் சந்தோஷமாக இராநின்றதைச் சுபானுகுமாரனோடு சத்யபாமையானவள் துக்கத்தோடு கூடியிராநின்றதையும் கிருஷ்ணரானவர் கேட்டுச் சத்யபாமையினுடைய துக்கத்தை நிவாரணம் செய்யும்பொருட்டுச் சம்பு குமாரனுடைய சமீபம் வந்து, அநேக ஆட்டங்களைச் செய்கிறபோது வசனசாட்சியாக திவசபர்யந்தமான ராஜ்யத்தைச் சம்புகுமாரனுக்குக் கொடுத்து, கிருஷ்ணரானவர், அபஜெயத்துடன் இருந்துள்ளளவில் சம்பு குமாரனானவன், ராஜ்யத்தை அடைந்து,துஷ்ட புத்தியினால் ராஜவீதியில் போகப்பட்டிருக்கிற பட்டணத்து ஸ்திரீமார்கள் மானபங்கம் செய்த காரணத்தினால் ஸ்திரீமார்களுக்கும் புருஷர்களான சஜ்ஜனர்கள், கிருஷ்ணருடைய சமீபத்தில் சென்று,சம்புகுமாரனால் செய்யப்பட்டிருக்கிற துர்நடக்கையைச் செய்யச்சொல்லிக் கூச்சலிட்டார்கள்.

அதைக்கேட்டுக் கிருஷ்ணரானவர் சொல்லிய ஜனங்களுக்கு அபயஹஸ்தம் கொடுத்து, ஜனங்களைத் தங்கள் தங்கள் கிருகங்களுக்கு அனுப்பிவிட்டுச் சம்புகுமாரன் பேரில் குபிதனாகி, எட்டாம் திவசம் சூர்யோதயத்தில் ராஜ்யத்தை அடைந்து, தண்ட நீதியினால் சம்புகுமாரனைப் பட்டணத்துப் பாஹ்யத்தில் போகும்படி துரத்தினார்.

சம்புகுமாரனானவன், துக்கத்தோடு கூடித் தேசாந்தர கமனமாக உத்தேசிக்கின்றபோது, பிரத்யும்னரானவர், சம்புகுமாரனுடைய மித்திரர்களினாலே, இந்த விருத்தாந்தத்தைக் கேட்டுச் சம்பு குமாரனுடைய சமீபம் சென்று, தைரிய வசனத்தைச்சொல்லி, சத்யபாமையோடு நம்பள் பிதாவாகிய கிருஷ்ணரானவர் உன்னை அழைத்துப் பட்டணத்துக்குள் அநேக வாத்ய விசேஷங்களினால் அழைக்கும்படி செய்கிறேனென்று சொல்லியும் அநேக ரகசியத் தந்திரங்களை உபதேசித்துச் சம்புகுமாரனை ரூப லாவண்யமான ஸ்திரீரூபம் செய்து, சத்யபாமையினுடைய அரண்மனைக்குப் பின் இராநின்ற உத்யானவனத்தில் விட்டு மறைந்து இராநின்ற அவசரத்தில் சத்யபாமையானவள் வன வினோதத்தைப் பார்க்க வருகிறபோது, இந்தக் கன்யை ரூபத்தைப் பார்த்து, ஆச்சரியத்துடன் சமீபம் குறுகி, "நீ யார்?" என்று கேட்டனள்.

அப்பொழுது, அந்த ஸ்திரீயானவள் கபடப் புத்தியினால் துக்கத்துடன் கண்ணீர்களுடன் விட்டுச் சொல்லத்தொடங்கினள்.

"வாராய், பூஜ்யவதியே! விஜயார்த்த பர்வதத்தில் இராநின்ற என்னுடைய ரூபத்தை ஒரு வித்யாதரனானவன் பார்த்து, மோக வாஞ்சையினால் என்னுடைய பிதாவைப் பிரார்த்தித்த பொழுது கொடாத காரணத்தினின்று என்னை ஸ்வீகரித்து இவ்வனத்தில் விட்டு யுத்தோன்முகத்தனாகிப் போயினன், என்னைத் தாங்கள் ரஷிக்க வேணும்" என்று வினயத்துடன் சொன்னதைத் கேட்டுச் சத்யபாமையானவள், சுபானுகுமாரனுக்கு யோக்யளென்று சிந்தித்து, அவளைத் தன் ஹஸ்தத்தில் பிடித்துக்கொண்டு, தன் கிருகத்தை அடைவித்து ஸ்நான போஜனாதி தாம்பூலங்களினால் சந்தோஷம் செய்து, வளர்த்து வந்த நாளகத்துடன் சத்யபாமையானவள், கிருஷ்ணரோடு இந்தப் பெண்ணைச் சுபானுகுமாரனுக்கு விவாகம் செய்யவேணுமென்று ஆலோசித்துக் கணிதர்களினால் முகூர்த்தமிட்டுப் பெண்ணை அலங்கரித்து, ரதத்தின் பேரில் அதிகச் சோபையுடன் ஸ்தாபித்து, நடன, நாட்டிய, வாத்திய விசேஷங்களினால் பட்டணப் பிரதட்சிணம் செய்து, புஷ்பப் பந்தலினால் அலங்காரம் செய்து இராநின்ற மாளிகையுள்ள அநேக ஸ்திரீ ஜனங்களினாலேயும் வித்யாம்சர்களாகிய சஜ்ஜனர்களினாலேயும் இந்தக் கன்யகையை ஆலத்தியினால் திருஷ்டி பரிகாரம் செய்து, ரதத்தில்நின்றும் தாதிகளுடைய கை ஸ்பர்சத்தினால் பூமியிலிழிந்து, துவஜத் தோரணாதிகளினால் அலங்கிருதமாயிருக்கிற விவாகக் கிருகத்துக்குள் புகுந்தனள்,

பின்பு, சதுஷ்கோண மேடைச் சமீபத்தில் தாதிகளினால் பிரதட்சிணமாக உட்கார வைத்து, அலங்கிருதா யிருக்கிற கன்யகையைச் சுபானு குமாரனானவன் ஔபாஷன விதியினால் மாலை கண்டத்தில் போட்டுகிற சமயத்தில் ஸ்திரீ ரூபத்தை மாற்றிப் பிசாசு முதலான துஷ்ட மிருக ரூபங்களைக் காட்டினபின்பு, பயத்தினால் கூச்சலிடப்பட்ட சுபானு குமாரனுடைய விருத்தாந்தத்தை ஜனங்களினாலே கிருஷ்ணரானவர் கேட்டு, சமீபம் வருகிற காலத்தில் சம்பு குமாரனாய் இராநின்றவனைப் பார்த்துச் சந்தோஷத்தை அடைந்தனன்.

ஜாம்பவதியானவள் சந்தோஷத்தை அடைந்திராநின்ற காலத்து, ஜனங்களினாலே வெட்கத்தை அடையப்பட்ட சத்யபாமையானவள், மறுபடி சுபானுகுமாரனுக்கு 100 கன்யைகளை விவாகம் செய்து வைத்தனள்.

இந்தப் பிரகாரம் இராநின்ற காலத்தில் ருக்மணியானவள், தன் சகோதரனுடைய பட்டணமாகிய குண்டினபுரம் அடைந்து தமயனாகிய ருக்மணனை வினய புரசரம் என் புத்திரனாகிய பிரத்யும்ன குமாரனுக்கு உன் குமாரியாகிய சௌபாக்கியவதி பாரதியைப் பரிணயம் செய்து கொடுக்க வேணுமென்று கேட்டத்தில், அவன் நான் துவாரகையில் இராநின்ற யாதவர்களைக் காட்டிலும் மாதங்கனுக்குக் கொடுக்கலாமென்று சொன்ன கடின வார்த்தையைக் கேட்டுப் புணர்துவாரகை வந்து, தன் புத்திரனிடம் சொல்லப், பிரத்யும்ன குமாரன் கேட்டு, அதிகக் கோப யுக்தனாகிச் சம்புகுமாரனுடன் குண்டினபுரம் அடைந்து, ருக்மணி மகாராஜனை ஒரு செருப்புக்குப் பெண் கொடுப்பார்கள் என்று கேட்க, மகாராஜன் பூர்வம் நடந்த சிசுபாலம் சுதாதி முதலான ஞாபகங்களினாலேயும் பிரத்யும்னகுமாரனுடைய சௌர்ய வீர்யப் பராக்கிரமங்கள் ஸ்ரோத்ர பரம்பரையினால் கேட்டு, இருந்ததினாலேயும் தான் தங்கையாகி ருக்மணியிடத்தில் கடின வார்த்தை சொல்லிய ஞாபகங்களை யெல்லாம் அறிந்து இவர்கள் யாதவ வம்சஸ்தர்களாகிய பிரத்யும்ன குமாராதிகளென்று ஒன்று சொல்லாமல் மந்தஸ்மிதம் செய்து யோசித்திருக்கும் போது பிரத்யும்னரான தன் வித்தையாகிய பிரக்ஞப்தி வித்தையால் சம்புகுமாரனை மறைந்து, அந்தப்புரத்தில் ஏவவிட்டு, ரதி தேவியைப் பலாத்காரத்தினால் ஸ்வீகரித்துத் தன் பட்டணமாகிய துவாரகாபுர பகிருத்யான வனத்தில் ரதத்தை விட்டு இழிந்து, ரதி தேவியைச் சண்டாள ஸ்திரீ ரூபமாக்கித் தன் தாயாகிய ருக்மணி மகாதேவியிடம் சென்று ஒரு செருப்புக்குப் பின்னர் அகப்படுமா என்று கேட்கும்படி செய்து அனுப்ப, அந்தக் கன்யகையானவள், காமன் சொன்ன பிரகாரமே தன் அத்தையிடம் சென்று,

"வாராய் பூஜ்யவதியே! ஒரு செருப்புக்குப் பிள்ளை அகப்படுமா?" என்று கேட்க,

அதைக்கேட்ட ருக்மணியானவள் "வாராய், சௌபாக்யவதியே! பிள்ளை அகப்படுவான்தான், ஆனாலும் உன் மாத்ரு பித்ருக்கள் சௌக்கியந்தானா?" என்று கேட்டு, உபலாலித்து, சந்தோஷத்தை அடைந்து, உத்யானத்திலிருந்து, புத்திரனை வரவழைத்துப் பலதேவர் வாசுதேவர்களுடைய அனுமதியைப் பெற்றுக்கொண்டு, சகோரதரனாகிய ருக்மண மகாராஜனை வரவழைத்து, சன்மான புரசரம் பிரத்யும்னரானவர் படுதின முகூர்த்தத்தில், ஔபாஸாநாதி விதிப் பூர்வகம் விவாகம் செய்து, அவளுடன் இஷ்ட விஷய காம போகங்களை அனுபவித்து இராநின்ற காலங்களில், அவர்களுக்கு அநிருத்தன் என்று நாமதேயத்தை உடைய புத்திரனானவன் உண்டானான்.

சம்புகுமாரனுக்குப் பிரத்யும்னரால் அநேகப் பெண்களை விவாகம் செய்தனன். இந்தப் பிரகாரம், இஷ்ட விஷய காம போகங்களுடன் இராநின்ற காலத்தில் பிரத்யும்னரானவர் தன் ஸ்திரீமார்களோடும், அநிருத்தனோடும் அநேகப் பந்து ஜனங்களோடும் சூழப்பட்டவராகி, ஆகாச கமலனங்களினாலே கிருகங்களிலேயும் பர்வதங்களிலேயும் நதிகளிலேயும் மகாலவண உபசமுத்திர மத்தியப் பிரதேசத்திலேயும் நிஷதநீலி பர்வதம் முதலான பர்வதத் தாழ்வரைகளிலேயும் கிரீடா விநோதங்களை அனுபவித்துத் தேவர்களுக்கு ஆச்சரிய பூதமான ஸ்திரீமார்களோடு கர்ப்பக் கிருகத்திலே போகங்களை அனுபவித்து இராநின்ற காலத்தில், கிருஷ்ணரானவர் ஜராசந்தனை யமபுரத்துக்கு அனுப்பிவிட்டுச் சக்கரப் பூஜையுடன் திரிகண்டத்தை அடிப்படுத்தி, வித்தியாதர ராஜாக்களினாலேயும் பூசர ராஜாக்களினாலேயும் ராஜ்ய பட்டாபிஷேகத்தை அடைந்து, சௌக்கியத்துடன் கூடியிராநின்ற நாளகத்து, நேமிநாத ஸ்வாமியானவர், தடாக மத்தியத்தில் சத்யபாமை ஜலக்கிரீடையினால் அபாஜயம் செய்ததின்பேரில், சத்யபாமையானவள், திரிவிக்கிரம ரதனோவென்று கேட்டனள்,

பின்பு, நேமீஸ்வர ஸ்வாமியானவர் அவளுடைய வார்த்தையினால் திரிலோகத்தையும் சலனம் செய்யப்பட்டிருக்கிற சங்கத் தொனியைச் செய்தனர்.

அப்பொழுது, நித்திரையில் இராநின்ற கிருஷ்ணரானவர் பய சலிதனாய் எழுந்திருந்து இப்படிக்கொத்த பராக்கிரமசாலி யாரென்று கேட்ட காலத்தில் சஜ்ஜனர்களினாலே நேமீஸ்வர ஸ்வாமி என்றறிந்து, "இவர் இருந்தால் நம்முடைய கீர்த்தி மறையும்" என்று ஆலோசித்து, கடபப்புத்தினால் ராகமதி என்கிற ராஜபுத்திரியைக் கேட்டடு, அந்தப் புத்திரியுடன் நேமீஸ்வர ஸ்வாமியை ரதத்தின் பேரில் சோபைகளுடன் ஸ்தாபித்து, வாத்ய விசேஷங்களினால் நகரப் பிரதட்சிணம் வருகிற போது, பந்தி பந்தியாய்க் கட்டியிராநின்ற மிருக விசேஷங்களைப் பார்த்து நேமீஸ்வர ஸ்வாமியானவர்,

"இது என்ன காரணம் கட்டப்பட்டது?" என்று கேட்டதில், ரதச் சாரதியானவன், தங்களுடைய விவாக நிமித்தம் வரப்பட்டிருக்கிற மித்யாமர சம்பந்தமான ராஜக்களுக்குப் போஜன பாகம் செய்குறதின் பொருட்டுக் கிருஷ்ணருடைய உத்தரவின்பேரில் கட்டப்பட்டதென்று சொல்லினள்.

இதைக்கேட்டு, நேமீஸ்வர ஸ்வாமியானவர் சம்சார வைராக்கியத்தை அடைந்து, இராநின்ற ஷணத்தில லௌகாக தேவர்களால் போதிக்கப்பட்டவர்களாகி, பூசர கேசர ராஜாக்களினாலேயும், சதுர்விதத் தேவர்களாலேயும் தீக்ஷா கல்யாணத்தை அடைந்து, ரத்னமயமான சிவிகைமிசை சௌதர்மேந்திரனுடைய ஹஸ்தத்துவயத்தினாலே ரைவத வனத்தை அடைந்து,

தீக்ஷிக்கப்பட்டவராகிச் சுக்லத் தியானமாகிற கபடத்தினால் ஞானாவரணீய முதலான அஷ்டவிதத் கர்மங்களாகிற சத்ருக்களை ஹதம் செய்து, கேவல ஞானத்தை அடைந்து, பூமியில் நின்றும் மஞ்ச சகஸ்ர தண்யோக்ஸேதமான ஆகாச மத்யத்தில், சௌதர்மேந்திரனுடைய ஆக்ஞையால் குபேரனால் நிர்மாணம் செய்யப்பட்டிருக்கிற சமவசரண மத்யத்தில், கோடிச்சூரிய, கோடிச் சந்திர ஒளியை உடைய நேமீஸ்வர ஸ்வாமியானவர், பல்லவதேசம் முதலான தேசங்களில் இராநின்ற பிராணிகளுக்கு விகாரத்தினால் தர்மோபதேசம் செய்து, மறுபடி ஊர்ஜயந்த பர்வதத்தை அடைந்து, சதுர்விழத் தேவர்களால் நமஸ்கரிக்கப்பட்ட நேமீஸ்வாமியானவர் துவாதச கோஷ்டத்துடன் கூடின சமவசரண மத்யத்தில், அஷ்டமகா பிராதிகாரயங்களினால் கூடியிராநின்ற நேமீஸ்வாமியானவர் சாமந்தாதி பௌர ஜனங்களினாலே சூழப்பட்டவராகிச் சிம்மாசனத்தில் ராஜ்ய பரிபாலணம் கூடியிராநின்ற சமயத்தில் வனப்பாலகனால் ஊர்ஜயந்தப் பர்வதமிசை நேமீஸ்வாமியானவர் சமவசரண விபூதியுடன் கூடியிரா நின்றாரென்று சொல்லப்பட்ட வசனத்தைக் கேட்டு, ஆனந்தத்துடன் கிருஷ்ணரானவர் ஜயஜயவென்கிற ஸ்தோத்திரங்களினால் துதித்துத் தத்திசைநோக்கில் சமவசரணம் சென்று நமஸ்கரித்துப்பின், வனப்பாலகனுக்கு அநேகத் திரவியங்களினால் சந்தோஷம் செய்து, ஆனந்தப் பேரியினால் நகர ஜனங்களுக்கு அறைவித்து, இக் குஞ்சரங்களினால் கிருஷ்ணரும் பலதேவரும் பிரத்யும்னரும் சம்புகுமாரனும் பானுகுமாரனும் சுபானுகுமாரனும் சமுத்திரவிஜயாதி யாதவ வம்சஸ்தர்களும் சத்யபாமை முதலான தேவிமார்களும் தங்கள் ஜனங்களிடைய விபூதி சகிதமான பரிவார ஜனங்களினாலேயும், நகர ஜன விசேஷங்களினாலே சூழப்பட்டவர்களாகி துவாரகாபுரத்துநின்றும் பகு தூரம் போகித்தூரத்தில் நின்றும் தங்கள் வார்த்தையுடன் இழுந்து வினய நமஸ்காரத்துடன் ஊர்ஜயந்த பர்வதத்தின்மிசை இராநின்ற சமவசரணத்தை அடைந்து, கிரிப் பிரதட்சிணம் செய்து, நேமீஸ்வாமியைப் பார்த்து, அநேக ஸ்துதி ஸத சகஸ்ரங்களினாலே துதித்து, நமஸ்கரித்து, அஷ்டவிதார்ச்சனைகளினால் அர்ச்சித்து, ரிஷி கோஷ்டத்தை அடைந்து, வரதத்தகணதரரை நமஸ்கரித்து, கணதரரால் சொல்லப்பட்ட திரிலோகச் சொரூகங்களையும், ஷட் திரவிய நவ பதார்த்த பஞ்சாஸ்திகளை குணஸ்தானங்களின் பேரில் பிரகாசிக்கப்பட்ட ஜீவகுண சொரூபமான சித்தச் சொரூபத்தையும் கேட்டுச் சகல ஜனங்களில் சிலபேர்களும் வைராக்கியத்தினால் தீட்சிக்கப்பட்டவர்களும் சில சிராவக விரதங்களை ஸ்வீகரிக்கப்பட்டவர்களாயும் சிலர், பிரமச்சாரி விரதங்களை ஸ்வீகரிக்கப்பட்டவர்களாயும், சிலர் ஆப்தாகம குருசிரத்தை ....... வர்களுடன் கூடி நமச்யக்துவத்தைத் தரிக்கப்பட்டவர்களாயும் இருந்த சமயத்தில், பலதேவரானவர் வினயத்துடன் எழுந்திருந்த, ஸ்வாமியைப் பார்த்து நமஸ்கரித்துக் கேட்கின்றனன்.

"வாராய், ஸ்வாமியே! லோகத்தில் பிராணிகள் பிறக்கிறதும் மரிக்கிறதும் இஷ்டானிஷ்டங்கள் உண்டாகிறதும், புண்ய பாபக்கிரியைகளினால் சௌக்கிய, துக்கங்களை அனுபவிக்கிறதும், அது காரணத்தினால் இந்தத் துவாரகாபுரிப் பட்டணமானது இன்றுமுதல் எவ்வளவு காலப்பர்யந்தம் நாசமில்லாமல் இருக்குமென்றும் கிருஷ்ணருக்கு எதனால் மரணமுண்டாகுமென்றும் கேழ்க்கப்பட்ட பலதேவரைக் குறித்து, நேமீஸ்வாமியானவர் சொல்லுகுறதாவது,

"வாராய், பவ்யோத்தமனே! இந்தத் துவாகாபுரமானது தீபாயண குமார முனீஸ்வரரால் கள்ளும் சாராயங்களும் பானம்பண்ணப்பட்ட ஜனங்களினால் செய்யப்பட்டிருக்கிற உபத்திரவத்தைச் சகிக்காமல் குரோதாக்னி என்றும், இதற்குப் 12 வர்ஷ முடிவிலே நாசத்தை அடையுமென்று ஜலதகுமாரனால் கனசமீபிவனத்தில் கிருஷ்ணருக்குப் பாணப்பிரயோகத்தினால் மரணமென்றும் சொல்லப்பட்ட வசனத்தைக் கேட்டுப் பயத்துடன் கூடினவர்களாகித் துவாராபுரத்துநின்றும் புறப்பட்டு மற்றொரு பட்டணத்தில் ஜீவிக்க வேணுமென்று பிரயாணத்தைச் செய்யப்பட்டவர்களிடத்துச் சிலர் வைராக்கியத்தை அடைந்து, தீக்ஷிக்கப்பட்டவர்களையும், சிலர் சர்வக்ஞனே சரணமென்று சமவசரணத்துக்குள் அடையப்பட்டவர்களுமானார்கள். பலதேவருக்கும் ரோகினி தேவிக்கும் புத்ரனான துவீபாயணமுனியானவர், சுவாமியினுடைய வசனத்தை அசத்யமாகச் செய்கிறதுக்குத் தேசாந்தரத்தை அடைந்தனன்.

ஜலக்குமாரன் சுவாமியினுடைய வசனத்தைக் கேட்டு நம்பளால் பிதாவாகிய கிருஷ்ணருக்கு மரணமுண்டாகிறதல்லவா என்று யோசித்து, அநேகப் புத்திரர்களோடு கூடினவனாய், பகு தூரமான தேசாந்தரம் போயினன்.

கிருஷ்ணரானவர் துவாரகையில் இராநின்ற ஜனங்கள் அறியும்படி, கள், சாராயம் காச்சக் கூடாதென்றும், காச்சினதை வியாபாரம் செய்யாமல் கிராமப் பாஷ்யத்தில் ஊற்றிவிட வேணுமென்றும் தண்டோரா மூலமாகப் பிரசித்திபடுத்தியும் தன்னுடைய பூமிக்குக் களத்திர பந்து ஜனமந்திரி சாமந்த புரோகிதரையும் சிரேஷ்டி ஜனங்களையும் குறித்துச் சம்சாரத்தைவிட்டுத் தீட்சைக்கு விருப்பமுள்ளவர்கள் தீக்ஷித்துக்கொள்ளவும் சிலர் சமந்திர விபாவத்தை அடைந்தார்.

இப்பால், கிருஷ்ணரானவர் ஸ்வாமியினுடைய வசனத்தைச் சந்தேகித்துச் சௌக்கியத்துடன் இராநின்ற காலத்தில் அநேக ராஜபுத்திரர்களினால் சூழப்பட்டவராயும் இருக்கிற பிரத்யும்னரானவர் பஞ்சேந்திரிய விஷய சௌக்கியங்களில் வைராக்கியத்தினின்றும் சபா மண்டபத்தை அடைந்து, கிருஷ்ணரை நமஸ்கரித்து ஷணப்பொழுது இருந்து யதோசிதகாலமான காலத்தை அறிந்து அர்த்தச் சந்திரனுக்குச்

சத்ருசமாயிருக்குற தன் நெற்றியில் இரண்டு ஹஸ்தங்களையும் கூப்பிக்கொண்டு தகப்பனைக் குறித்துச் சொல்லப்பட்டது என்னவென்றால்,

"வாராய், ஸ்வாமி! தங்களுடைய பிரசரிதத்தினின்றும் நான் சகல சௌக்கியங்களையும் அனுபவிக்கப்பட்டேன், இப்பொழுது, மோட்ச சௌக்கியத்தின் பொருட்டுப் பிரதயத்தனம் செய்யப்பட்ட எனக்கு உத்தரவு கொடுக்க வேணுமென்று சொல்லிய வசனத்தை வசுதேவர் முதலாய் இருக்கிற கிருஷ்ண பூபதிகளான ராஜாக்கள் கேட்டுச் சோகத் துக்கத்தினின்றும் மூர்ச்சை அடையப்பட்டவர்களாயும் மறுபடி அநேக ஊழியக்காரர்களினாலேயும் செய்யப்பட்ட உபசாரக் கிரியைகளினின்றும் மூர்ச்சை தெளிந்து,

"வாராய், பாலகனே! உனக்குத் தீக்ஷா காலமானது யோக்யமில்லை என்று தடுக்கப்பட்ட பந்து ஜனங்களைக் குறித்துப் பிரத்யும்னரானவர் சம்சாரத்தினுடைய அசாரபாவத்தையும் மோக்ஷத்தினுடையே சாரபூதத்தையும் சொல்லபட்டிருக்கிற தத்வசாஸ்திரங்களை உபதேசித்துப் பின், அதிகமான அய்யய்யோ என்று துக்க வார்த்தையினால் கண்ணீர் விடப்பட்டு இருக்குற தகப்பனான கிருஷ்ணரைக் குறித்துப் பிரத்யும்னரானவர் வினயபூர்வகம் நமஸ்காரம் செய்து, திரிகண்டங்களுக்கும் அதிபதியாய் இருக்கிற ராஜேந்திரனே, உதயமாகாநின்ற சூர்யனானவன் சமய சமயம் பிரதி தன்னுடைய கிரணக் காந்திகளை லோகங்களுக்குப் பிரகாசம் செய்து, மறுபடி மழுங்குதலையான காந்திகிரணங்களை உடையவனாகி, பச்சிம திக்கில் இராநின்ற ஹஸ்தாசல பர்வதத்தை அடைந்து மறைந்துவிடுகிறவன் எப்படியோ அப்படிப் போல நம்பளுடைய ஐஸ்வர்யாதி சௌக்கியங்கள் க்ஷணம்க்ஷணம் நாசச் சீலமென்றும் அர்க்ககீர்த்தி குமாரனை ஜயிக்கப்பட்ட மேகேஸ்வரனும் ஆதிதீர்த்தங்கர விருஷப தீர்த்தங்கரரும் ஷட்கண்டங்களுக்கு அதிபதியான பரதராஜ சக்கரவர்த்தியும் நமி வினமி முதலான வித்யாதர ராஜாக்களும் தபோனுஷ்டானங்களினால் சம்சார அசார வைராக்கியபானென்றும் தத்வசொரூபமான சாஸ்திரோத்த பிரகாரம் துவாதசத் தபங்களைத் தாங்கி ஆத்மஸ்வரூப பாவனையில்நின்றும் ஜனன மரண ரகிதமான சித்த க்ஷேத்திரத்தை அடைந்து சௌக்கியமாக இராநின்றார்கள்.

நானும் அவர்களுடன் சௌக்கியமாக இருக்குகைக்கு துவாதசத் தபங்களை அனுஷ்டானம் செய்குறதுக்குத் தாங்கள் உத்தரவு அளிக்க வேணுமென்று பிரார்த்தித்து நிர்ப்பந்த வசனத்தினால் தன்னுடைய பிதாவினுடைய சபாஸ்தானத்துநின்றும் வெளியே பிரவேசித்துத் தன் தாயாகிய ருக்மணி மகாதேவியினுடைய கிருகத்தை அடைந்து தாயினுடைய மரண யுகளங்களில் குறுகிச் சாஷ்டாங்க பிரணுதனாகி, நமஸ்கரித்து எழுந்திருந்து,

"வாராய், தாயே! நான் சம்சார விஷயமான சௌக்கியங்களை புனஹ புனஹச் சம்பூர்ணமாய் அனுபவிக்கப்பட்டது, இனிமேல் அதற்கு மேலான சௌக்கியமாகிற மோட்சச் சுகத்தின் பேரில் பிரீதியானது வர்திப்பதினால் தாங்கள் அந்தச் சௌக்கியங்களைக் கொடுப்பதான தீட்சா விரதங்களை அனுஷ்டிக்கும்படி உத்தரவு அளிக்க வேணுமென்று சொல்லிய குமாரனுடைய வசனத்தை ருக்மணி மகாதேவியானவள் கேட்டுப் பயச்சலிதத்துடன், "ஹா புத்ரனே" என்று பூமியில் விழுந்து மூர்ச்சை அடையப்பட்டவளாகிப் பிரேதம் போல் இராநின்றிருக்கிற ருக்மணி மகாதேவியைப் பிரத்யும்னன் முதலான அனேக ஜனங்கள் சீதோபசாரங்களினால் மூர்ச்சை தெளியவைத்து, பின் பிரத்யும்னரானவர், தாயைப்பார்த்து, அநித்யாதி துவாதசானுபிரேனக்ஷயினுடைய ஸ்வரூபத்தை உபதேசித்தும் திருஷ்டி சலாகா புருஷர்களுடைய கதாவதாரங்களை உபதேசித்தும் துக்கப்பட்டவராய் இருக்கிற தாய்க்கு மறுபடியும் சம்சார ஸ்வரூபத்தில்நின்றும் வைராக்கியக் குணங்களைப் பாவிக்கப்பட்டிருக்குற தத்துவச் சாஸ்திரங்களை உபதேசித்துத் தபசை அனுஷ்டிப்பேனென்று சலனமில்லாமல் உத்தேசிக்கப்பட்டிருக்கிற பிரத்யும்னகுமாரனுடைய அபிப்பிராயத்தைப் பார்த்தும் கேட்டும் துக்கிக்கப்பட்டவளாய் இருக்கிற மாதாவாகிய ருக்மணி மகாதேவிக்குச் சத்திய வசனத்தைச் சொல்லிவிட்டுச் சந்தோஷத்தில் நின்றும் புறப்பட்டுத் தனக்குத் தேவிமார்களாய் நின்றிருக்கிற அந்தப்புரத்தில் பிரவேசித்து, ரதிதேவி முதலான 509 ஸ்திரீகளுக்குத் தன்னுடைய ஸ்திரீமார்கள் பிரத்யும்னருடைய பாதக்கமலங்களில் விழுந்து,

"வாராய், ஸ்வாமியே! எங்களுக்குத் தங்களுடைய சமீபத்தில் வரும்படியான யத்தனத்தைச் செய்யவேண்டுமென்றும், இப்பொழுது, நீங்கள் எங்களைவிட்டுப் போகக் கூடாதென்றும் சதுர் திக்கிலும் சூழ்ந்துகொண்டு பெருங் கூச்சலுடன் அழப்பட்ட ஸ்திரீமார்களுக்கு அனேகத் தத்துவ சாஸ்திரங்களை உபதேசித்தும் விடாமல் சூழ்ந்திராநின்ற ஸ்திரீமார்களை நேமீஸ்வாமியினுடைய சமவசரணத்தில் ராஜமதியினுடைய சமீபத்தில் 509 ஸ்திரீமார்களை தீக்ஷா ஸ்வீகாரத்தைச் செய்துவித்துத் தான் பட்டணத்தை அடைந்து, மாத்ரு பித்ருக்களுடைய உத்தரவினைப் பெற்றுக்கொண்டு தனக்கு மித்திரர்களாய் இருக்கிற ராஜபுத்திரர்களோடு கிருகத்துநின்றும் புறப்பட்டுச் சிவிகைமிசை ஏறி, அனேக வாத்தியத் துந்துபிகளுடன் நேமீஸ்வாமியினுடைய சமவசரணத்தில் புகுந்து தனக்கு ஸ்திரீமார்களைப் போலே சௌக்கியத்தைச் செய்யப்பட்டிருக்கிற விரக்ஞப்தி முதலான வித்தைகளுக்கு க்ஷமா பொறுமையைச் செய்துவைத்தும், பின் பரிவார ஜனங்களுக்குச் சந்தோஷ வசனங்களினால் திருப்தி செய்து, பிராசாத சைத்ய பிரம முதலான ஏகாதசப் பூமிகளுடைய விநோதச் சோபைகளை பிரதட்சிணமாக நேமீஸ்வாமிகளுடைய ஸ்துதிகளினால் ஸ்துதித்துக்கொண்டு பார்த்து வருகிற பிரத்யும்னரானவர், நேமீஸ்வாமிகளுடைய சமீபம் அடைந்து, அஷ்டவிதார்ச்சனைகளினால்

அர்ச்சித்து, ஸ்தோத்திர சதங்களினால் ஸ்துதித்தபின் இரண்டு ஹஸ்தங்களையும் கூப்பிக்கொண்டு கணதரர் இராநின்ற கோஷ்டத்தை அடைந்து, வரதத்து முனீஸ்வரரை நமஸ்கரித்து,

"வாராய், ஸ்வாமியே! சம்சார சமுத்திரத்தை உலர்த்தப்பட்டிருக்கிற ஜின தீக்ஷையை எனக்குக் கொடுக்கக் கடவதென்று சொல்லியபின் ஸ்வாமியினுடைய சமீபத்தில் வஸ்து முதலான பரிகிருகங்களை நீக்கிவிட்டுப் பஞ்ச முஷ்டியினால் சிரோ கேசங்களைத் தன் ஹஸ்தங்களினால் பிடுங்கித் தேவர்களால் ஏந்தப்பட்டிருக்கிற சுவர்ணத் தாம்பாளத்தில் வைத்துவிட்டுப் பின் பானுகுமார சுபானுகுமார சம்புகுமார ராஜபுத்திரர்களோடு தீக்ஷையை ஸ்வீகரித்தார்.

மறுபடி, சத்யபாமை, ருக்மணி முதலான ஸ்திரீமார்கள் சமஸ்த பந்து ஜனங்களை விட்டுக் கிருஷ்ணருடைய உத்தரவில் நின்றும் நேமீஸ்வாமியினுடைய சமவசரணத்தைப் புகுந்து ராஜமதியினுடைய சமீபம் தீக்ஷையை ஸ்வீகரித்தார். பிரத்யும்ன மகா முனீஸ்வரரானவர் துவாச விதத் தபங்களை ஸ்கரித்துப் பின் பஞ்ச சமிதி திரி குப்தியுக்தம் மச்சமாதி தச தர்மங்களையும், பஞ்சவித ஆசாரங்களையும் துவாவிம்சதி பரீஷகங்கடைய ஜயத்தையும் ஷட்திருசங்களுடைய விடுகையும் அடைந்து, ஜீவ தயா பரிணதனாகி, நாலுதினம் ஆறு தினம், எட்டுத் தினம் ஒரு பட்சம் ஒரு மாசம், ஆறு மாசம், பர்யந்தம் கிரம வரிசையினால் எத்தனைப்பட்ட உபவாசப் பிரசித்தியுடையவராகி ஏகாசாங்கத்தை அறியப்பட்ட ஞான விசேஷத்தை உடையவராயும் அவதிமனப் பர்யய ஞானத்தை அடைந்து, அனேக முனீஸ்வரர்களுக்கு அதிபதியான பதத்தை அடைந்தும், வியவகார சம்யக்தர்சன ஞானச் சாரித்திரத்தை நின்றும் நிச்சய சொரூபமான ஆத்ம சொரூபத்தை அடைந்து, திரிகால யோகங்களைத் தரிக்கப்பட்டிருக்கிற பிரத்யும்ன மகா முனீஸ்வரரானவர் ஜீவ ரகிதமான சிலாமயமான பாறையின் பேரில் பல்லங்காசனமாக இருந்து மனோ வியாபரத்தை அடக்கி, ஆத்ம சொரூப பாவனையில் நின்றும் அடையப்பட்ட தர்மத்யான சுக்லத்யான பலத்தினாலே காதி கர்ம க்ஷயம் செய்து, லோகா லோக ஸ்வரூபத்தை அடையப்பட்டிருக்கிற கேவல ஞானத்தை அடைந்து சமயத்தில், சதுர்விதத் தேவர்கள், தங்கள் தங்களுடைய விமானச் சலனத்துநின்றும் அவதிஞானத்தால் பிரத்யும்ன மகாமுனீஸ்வருக்குக் கேவல ஞானம் உண்டாச்சுதென்று, தங்கள் தங்களுடைய பரிவாரத் தேவர்களுடன் வந்து, ஜய ஜய பிரத்யும்ன பகவானென்று துதித்து, புஷ்ப மாரிகளைப் பொழிந்து, அஷ்டவிதார்ச்சனைகளினால் அர்ச்சித்து, பின் சௌதர்மேந்திரன் கேவல பூஜையைச் செய்து, தன்னுடைய ஆக்ஞையால் குபேரன் பூமியை நின்றும் பஞ்ச சகஸ்ர தண்டோக்சேஷத்தில் கந்தகுடி மண்டபத்தை நிர்மித்து, அஷ்டமகா பிராதிகார்யத்துடன் கூடின கோடிச் சூர்ய, கோடிச் சந்திரனுக்கு சத்ருசமான சரீர காந்தியையுடைய பிரத்யும்ன பகவானைப் பார்த்து, சௌதர்மாதி தேவர்கள் சகஸ்ர நேத்ரங்களை நிர்மித்துக்கொண்டு ஆனந்தத்தினால் நிருந்த கீதாதி வாத்ய கோஷனங்களினால் பூஜிக்கப்பட்ட

பிரத்யும்ன பகவானுடைய கேவல ஞானேஸ்வர்ய விசேஷத்தைத் கிருஷ்ணர், பலதேவர் கேட்டு, அநேக ராஜாக்களுடன் வந்து, கந்தகுடி மத்தியில் இராநின்ற சிம்மாசனத்தினுடைய மத்தியில் சகஸ்ரதளக் கமலத்தினுடைய சதுரங்குலம் இடைவிட்டுக் ககன தனத்தில் இராநின்ற பிரத்யும்ன பகவானைப் பார்த்து, அஷ்டவிதார்ச்சனைகளினால் அர்ச்சித்து ஆனந்தத்தினால் துதித்து வினய பூர்வனம் கிருஷ்ண பலதேவர்கள் தங்களுடைய பட்டணத்தை அடைந்துபின் பிரத்யும்னருக்குப் பத்தினிகளான ராஜி மதி ஆர்யாங்களை என்ன இவர்களினால் துதிக்கப்பட்டிருக்கிற பிரத்யும் பகவான் நேமீயினுடைய சமவசரணத்துடன் கூடின பல்லவாதி தேசங்களுடைய தர்ம சேத்திரங்களைப் பிரதட்சினமாகத் தர்மோபதேசம் செய்தபின், ஊர்ஜத பர்வதத்தை அடைந்து, நேமிநாத பகவானுடன் பிரத்யும்ன சுவாமியானவர் இருந்துள்ளளவில், துவாதச வர்ஷம் சென்றபின் துவாராபுரத்தைப் பார்க்கவேணுமென்று வரப்பட்டிருக்கிற துவீபாயன முனியானவர் துவாரகாபுரியினுடைய பாஹ்யத்தில் பாறையின் மிசை மௌனத்துடன் தபோனுஷ்டான யோகத்தினால் இருந்துள்ளளவில், யது வம்சத்தில் உத்பன்னமான அநேக ராஜபுத்திரர்கள் கிரீஷ்ம காலத்தில் பொழியப்பட்டிருக்கிற கோடைமழை விட்டபின் பாறையின்மிசை இறங்கியிராநின்ற மத்ய ஜலத்துடன் மிஸ்ரமான கஷாய ஜலங்களை விளையாடப்பட்ட இந்த ராஜபுத்திரர்கள் தண்ணீர் தாகத்தால் இந்த ஜலத்தைக் குடித்துக் கல்லுகளினாலே அடித்து, ரணமாக்கிப் பூமியில் கொல்லப்பட்டு இருக்கிற காரணத்தினால் தீபாயண முனியானவர் பிரசஸ்தமான தியானத்தைவிட்டுக் கோபாக்கினியாலே பல்லுகளைக் கடித்து, இவர்களுடன் துவாரகாபுரத்தைத் தானம் செய்வேனென்று துர்தியானத்தினால் மரணத்தை அடைந்து ஜோதிலோகத்தில் தேவனாகிப் பிறந்து, அவதி ஞானத்தால் தன்னுடைய மரண அவஸ்தையைப் பார்த்துக் கோபாக்கினியினால் வந்து, கிருஷ்ணதேவரை மாத்திரம் பட்டண பாஹ்யத்தில் போகவிட்டபின், யது வம்சத்தில் உத்பன்னமான ராஜபுத்திரர்களுடன் கூடியிராநின்ற துவாரகாபுரத்தைக் குரோதாக்னியினால் பஸ்பமாகக் கொளுத்திவிட்டபின்பு தேவனானவன் தன்னுடைய ஸ்தானத்தை அடைந்தபின், கிருஷ்ணரானவர் துவாரகாபுரி விநாசத்தைப் பார்த்து லோகத்துக்கத்துடன் அழாநின்றவரைப் பலதேவரானவர் கிருஷ்ணரைப்பார்த்து, நேமிஸ்வாமியினுடைய வசனம் சத்யமாக ஆச்சுதென்று சொல்லியும், தர்ய சாஸ்திரத்தை உபதேசித்துக் கிருஷ்ணரை இட்டுக்கொண்டு கௌசாம்பி வனத்தை அடைந்து தண்ணீர் தாகத்தினால் கிரமமாகப் பூமியில் உட்கார்ந்து, அநேகத் துக்கச் சிந்தையுடன் நேமி பகவானென்று அழப்பட்ட கிருஷ்ணரைப் பலதேவரானவர் ரத்னக் கம்பளத்தில் மிசை படுக்க வைக்க மற்றொரு ரத்னக் கம்பளத்தினால் மூடிவிட்டுத் தண்ணீர்த் தாகத்தை உடைய

கிருஷ்ணரைப் பார்த்து, பலதேவரானவர் தடாகத்துக்குப் போய் ஜலம் கொண்டுவருகிறேன் என்று சொல்லிவிட்டுப் போனபின் ஜலக்குமாரனாவன் துவாதச வர்ஷம் ஆச்சுதென்று துவாரகாபுரத்தைப் பார்க்கவேணுமென்று வாஞ்சையினால் வருகிறபோது கௌசாம்பி வனத்தை அடைந்து, ரத்னக்கம்பளச் செகப்பைப் பார்த்து, மிருகமென்று கருதித் தூரத்தில் நின்றும் பாணத்தை விட்டான்.

அந்தப் பாணத்தினுடைய அடியினால் கிருஷ்ணரானவர் ஐயையோ வென்றும் "நேமி பகவானே" என்றும்,கூச்சலிட்ட தொனியைக் கேட்டு, ஜலக்குமாரனாவனன் பிதாவென்று அறிந்து, சோகத் துக்கத்தினால் அழுதுகொண்டு ஓடிவந்து கிருஷ்ணருடைய சமீபத்தில் பூமியில் விழுந்து ஸ்வாமியினுடைய வசனம் நிச்சயமாச்சுதென்றும், நான் என்ன செய்வேனென்றும் அழுகுற புத்திரனைப் பார்த்துக் கிருஷ்ணரானவர் பூர்வ ஜன்ம கர்மோதயத்தில் இந்த உபத்திரவம் உண்டாச்சுதென்று மூதேர்யத்தை அடைந்து, ஹஸ்த விரலில் இராநின்ற, முத்திரை மோதிரத்தைக் கழற்றிப் புத்திரன் விரலிலிட்டு,

"வாராய், புத்ரனே! யது வம்சத்தில் நீ ஒருவன்தான் இருக்கிறாய் என்றும் மற்ற பேர்களெல்லாம் துவாரகாபுரத் தகனத்தினால் மரணமடைந்தார்களென்றும், இந்த துவாரகாபுரத்தகன விருத்தாந்தத்தினையும் என்னுடைய மரணக் குறிகளையும் சொல்லித் துவாரகாபுரம் நிர்மாணம் செய்து, எனக்கு ராஜ்யஸ்தாபனம் செய்யவேணுமென்று என்னுடைய பிதாவாகிய கிருஷ்ணரால் தட்சின மதுரையில் இராநின்ற பஞ்சபாண்டவர்களுடைய சமீபம் போகும்படி சொன்னாரென்று சொன்னபிறகு,

"வாராய், புத்திரனே! இனிமேல் இவ்விடத்தில் இருந்தால் பலதேவர் உன்னைக் கொன்றுவிடுவார், நீ சீக்கரமாகத் திரும்பிப் பார்க்காமல் ஓடிவேண்டியதென்று சொல்லி அனுப்பப்பபட்டிருக்கிற ஜலக்குமாரனானவன் தட்சின மதுரையை அடைந்து, தர்மராஜாவை நமஸ்கரித்து, துவாரகாபுர விநாசத்தையிம் பிதாவாகிய கிருஷ்ணருடைய மரணத்தையும் கிருஷ்ணனால் சொல்லப் பட்டிருக்குற துவாரகாபுர ராஜ்ய ஸ்தாபனம் முதலான விருத்தாந்தத்தினையும் சொல்லினன்.

இதைக் கேட்டுத் தர்மராஜா முதலாகிய பஞ்ச பாண்டவர்களும் துக்கத்தை அடைந்து, அபிமன்யு குமாரனாகிய பரீட்சித்து என்கிற புத்திரனுக்கு ராஜ்ய பட்டாபிஷேகம் செய்து, பின் தங்கள் தங்களுடைய தேவிமார்களுடன் புறப்பட்டுவந்து, சமுத்திரக் கரையில் துவாரகாபுரம் நிர்மாபணம் செய்து ஜலக்குமாரனுக்கு ராஜ்ய ஸ்தாபனம் செய்துவிட்டு, நேமிஸ்வாமியினுடைய சமவசரணத்தை அடைந்து வந்தனாஸ்தவ பூர்வகமாகப் பஞ்சபாண்டவர்கள் நிர்க்கந்த ரூபமான மகாவிரதங்களைச் சமீபத்தில் தீட்சையை ஸ்வீகரித்தார்கள்.

திரௌபதி முதலான தேவிகளும் ராஜிமதி, ஆர்யாங்களை சமீபத்தில் தீட்சையை ஸ்வீகரித்தார்கள்.

கௌசாம்பி வனத்தில் மரணத்தை அடையப்பட்ட கிருஷ்ணரைப் பலதேவரானவர் ஜலத்தைக் கொண்டு வந்தபின், பாணத்தினால் மரணத்தை அடையப்பட்ட கிருஷ்ணரைச் சத்துருவினாற் கொல்லப்பட்டதென்று அறிந்து, கோபத்தினால் அந்தச் சத்துருவைக் கொல்லவேணுமென்று சதுர்திக்கிலும் காதவழி பர்யந்தம் ஓடிப்பார்த்ததில் அகப்படாத காரணத்தால் திரும்பிவந்து கிருஷ்ணருடைய சபத்தைத் தூக்கித் தன் கழுத்தின் பேரில் கிருஷ்ணருடைய சிநேக வாஞ்சையால் மங்கிங்கி எங்குற பர்வத சமீபத்தில் துக்க வார்த்தையுடன் வருகுறபோது, ஒரு தேவனானவன் ஆசனகம்பத்துடன் வந்து, ஒரு வண்டியில் எருதுகளைப் பூட்டிப் பர்வதத்தின் பேரில் ஓட்டுகிற போது, எருதுகள் ஏறாமல் இருக்கிறதைப் பற்றித் தேவனானவன் அந்த எருதுகளைத் தடியால் அடிக்கின்றபோது, பலதேவரானவர் பார்த்து,

"வாராய், மனுஷ்யனே! இந்த வண்டியைப் பர்வதத்தின்பேரில் மாடுகள் இழுத்துக் கொண்டு போகுமாவென்ற யூகியை அறியாமல் ஏன் அடிக்கிறாயெ"ன்று கேட்கப்பட்ட பலதேவரைக் குறித்து இந்தக் தேவனானவன் சொல்லுகிறான்.

"வாராய், பலதேவனே! உன்னால் தூக்கியிராநின்ற செத்த பிணமானது பிழைக்கிறபோது இந்த வண்டியானது பர்வதத்தின்பேரில் ஏறுமென்றனன். அப்பொழுது பலதேவரானவர் தன்னுடைய ஆக்ஞா நடக்கையைப் பார்த்து வைராக்கியத்தை அடைந்து, அந்தக் கிருஷ்ணருடைய சபத்தை அந்தப் பர்வதச் சமீபத்தில் தகனக்கிரியை செய்துவிட்டுத் தடாகத்தில் சிரோஸ்நானம் செய்து, பின்பு பலதேவரானவர் சுருப்தாசார்யர் சமீபத்தில் நிர்க்கந்த தீட்சையை அடைந்து தபோனுஷ்டானத்தில் தன் சரீரத்தை விட்டு அச்யுத கல்பத்தில் தேவேந்திரனாயினன்.

இப்பால், நேமி ஸ்வாமியுடன் பிரத்யும்ன பகவானானவர், ஊர்ஜயந்த பர்வதத்தின்மிசை மோட்சத்தை அடைந்தனர்.

ருக்மணிதேவி ஆர்யாங்கனைகள் ஸ்திரீலிங்கத்தை விட்டு அச்யுத கல்பத்தில் பிரதீந்தினாயினள். சத்யபாமை முதலான ஆர்யாங்னை யதாக்கிரம தபோனுஷ்டாத்தினால் தேவலோகத்தை அடைந்தார்கள்.

Printed by

**Royapettah Stationery and Printing and Allied Products Producers Indl. - Co.op Society Ltd.**

26, Koya Arunagiri First Street Royapettah

Madras - 600 014. ☎ : 84 56 70